*கழக வெளியீடு : ௬௧௦*

# சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை

## பகுதி - ௨



புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.
எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
*திருநெல்வேலி :: சென்னை-1.*

First Edition: Feb., 1954.

# Sangath Thamizh Pulavar Varisai

## Part - II



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD., 1/140, BROADWAY, MADRAS - 1

*Head Office:*

24, EAST CAR STREET, THIRUNELVELI

Appar Achakam, 2/140, Broadway, Madras - 1—C. 620.

# பதிப்புரை

தேனினும் இனிய செழுந்தமிழ்ப் பாக்களால் மொழியையும் நாட்டையும் வளம்படுத்தியவர், பழங்காலச் சங்கப்புலமை நல்லோராவர். அவர்களுள் நல்லிசைப் புலமை மெல்லியராகிய ஔவையாரும் ஏனைய பெண்பாற் புலவர்களும், உவமையாற் பெயர்பெற்றோர்களும் போற்றத்தக்க புலமையோராவர்.

இவர்தம் வரலாறுகள், சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினியவாய்ச் சிறந்தனவாகும். இவ்வருமை பெருமை மிக்க வரலாற்றுண்மைகளை அவர்தம் பாவின் அகச் சான்றுகொண்டே ஆய்ந்தெழுதிய நூல்கள் இவையாகும். இம் முப்பகுப்பினர் வரலாறடங்கிய நூல்களை ஒரே தொகுப்பாக ஆக்கி உதவினால், கற்பார்க்கும், கற்க விழைவார்க்கும், துறைபோவார்க்கும் நற்பயனாம் எனக் கருதி ஒரே கட்டடமாகக்கட்டி அழகிய முறையுடன் அமைத்து வெளியிட்டுள்ளோம்.

அறிஞருலகம் இதனையும் இதனோடு தொடர்ந்து வெளிவரும் ஏனைய இதுபோன்ற தொகுப்பு நூல்களையும் வாங்கிக்கற்று நற்பேறெய்தி இன்புறுமென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை





கழக வெளியீடு: ௬௪௪

சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை - IV

# ஒளவையார்



ஆசிரியர்:

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: Feb., 1953.
Reprint: Nov., 1956.

Sangath Thamizhp Pulavar Varisai—Book IV

# AUVVAIYAR



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1—C. 1200

# பதிப்புரை



சங்ககாலத்துப் பெண்மணிகள் பலர் கல்வி கேள்வி வீரப்பண்பு முதலிய எல்லாத்துறைகளிலும் சிறந்திருந்தனர். ஒருநற்றாய், தன் மைந்தனை வேல் கைக்கொடுத்துப் போர்முகத்துக்கு அனுப்புவளாயின், அவள்தன் வீரத் தறுகண்மையை யாதென்பது?

இத்தகையாள் போன்ற அக்காலப்பெண்களுள் தலைமணியாகத் திகழ்ந்தவர் ஒளவையாராவர். இவர் தமக்கென வாழ்ந்தாரில்லை: தமிழுக்காக அரசுமுறைக்காக நாட்டு ஆக்கத்துக்காக அறமுறையைப் பரப்புதற்காக வாழ்ந்தவர். இச்சீரிய இவர்தம் நற்பண்புகளை அவர்தம் பாடல்களே நமக்கு அகச்சான்றாகக் காட்டுகின்றன.

இவர்தம் மக்கட்பண்பின் மாண்பையறிந்தே பேரரசர்களும் குறுநில மன்னரும் வள்ளல்களும் அறிஞரும் பிறரும் போற்றிப் பாராட்டினர். இவ்வகை மாட்சிமிக்கவரான ஒளவையார் வாழ்க்கை வரலாறு நம்மனோரால் நன்கறிதற்கியலாததாய் அவர்தம் வரலாற்றில் பொய்யொடுமிடைந்த மாசு மண்டிற்று. அப்போக்கை அவர்தம் பாடலாகிய அகச்சான்றொன்றே கொண்டு நெடுநுகத்துப் பகல்போல நடுநின்றாய்ந்து செப்பமான அரிய நூலாகப் **புலவர், திரு கா. கோவிந்தன**வர்கள் ஆக்கித் தந்துள்ளார்கள்.

இந்நூலை நன்முறையில் பதித்துச் **சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை**யில் நான்காவதாக வெளியிட்டுள்ளோம். இவ்வரிசை நூல்களையும் தமிழ்கூறு நல்லுலக மக்கள் வாங்கிக் கற்று நற்பயன் எய்துவார்கள் என நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# ஔவையார்



## க. தோற்றுவாய்

உலக நிகழ்ச்சிகளை உற்று நோக்கின், முற்றிலும் மாறுபட்ட இரு பொருள்கள், ஒன்றையொன்று இன்றியமையாதனவாய் இணைந்து தொழில் புரிவதாலேயே, உலக வாழ்வு, வளமுற்று இன்பம் பெருகி இயங்குகிறது என்ற உண்மை உணரப்படும். அறிவுருவாகிய உயிரும், அறிவில்லா உடலும் மாறுபட்டனவே என்றாலும், அவை ஒன்றையொன்று இன்றியமையா நிலையில் ஒன்றுபடுவதாலேயே நம் வாழ்க்கை நடைபெறுகிறது நுண்பொறிகளை ஆக்கித் தரும் அறிவு நூல் கைவரப்பெற்ற அறிஞரும், அந் நுண்பொறிகளை இயக்கும் கல்லா மக்களும் முற்றிலும் மாறுபட்டவரே எனினும், அவர் இருவரும் ஒன்றுபட்டு உழைப்பதினாலேயே, உலக மக்கள் வாழ்வு வளம் பெறுவதைக் காண்கிறோம். சட்டக்கலை தேர்ந்த நீதியாளனும், படை பல பயின்று பெற்ற உடல் வலியுடையானும் முற்றிலும் மாறுபட்ட நிலையினரே எனினும், முன்னோன் மொழிவதைப் பின்னோன் ஏற்று நடப்பதாலேயே உலகில் அமைதி நிலவக் காண்கிறோம. அவ்வாறே, "இருவேறு உலகத்தியற்கை; திருவேறு; தெள்ளியராதலும் வேறு," என்பதற்கேற்பக் கல்வியும், செல்வமும் மாறுபட்ட பண்புடையனவே என்றாலும், கல்வியாளன் காட்டிய வழியில், செல்வம் உடையோன் செல்வதினாலேயே, உலக மக்கள உயர்நிலை பெறுதலும் கூடும். ஆகவே, எந்த நாட்டில், எந்தக் காலத்தில், மிகுந்த கல்வியும், திரண்ட செல்வமும் ஒருங்கே பெருகி மண்டிக் கிடக்கின்றனவோ, அந்த நாடு

ஒன்றுதான், அக்கால நாடுகளுக்குள்ளே, நாகரிகத்தின் நடுநாயகமாய் விளங்கும் என்பது தெளிவு.

கல்வியும் செல்வமும் சிறக்கப்பெற்ற நாட்டில், செல்வர் சொல்வழி கல்வியாளர் செல்லுதல் இன்றி, கல்வியாளர் காட்டிய வழியே செல்வம் படைத்தோர் செல்லுதல் வேண்டும். அப்பொழுதுதான, அந்நாடு நல் வாழ்வின் இருப்பிடமாய் அமையும். கண்ணும் காதும் முதலாயின, ஒன்றன் நன்மை தீமைகளைப் பிரித்தறியும உணர்வுடைய அறி கருவிகளாம்; கையும் காலும முதலாயின அவ்வுணர்வு ஆற்றுத் தொழிலாற்றுவதற்கென்றே தோன்றிய தொழிற் கருவிகளாம். கண்ணும் காதும முதலாய அறிகருவிகள அறிவித்தவாறே, கையும் காலும ஆகிய தொழிற் கருவிகள் தொழில் ஆற்றினால்தான் உடலிற்கு ஊறு நேராது. அவ்வாறின்றி, கையும காலும் செய்யும அவ்வளவு தொழிலையும் பார்த்துக் கொண்டிருக்கவே, கண்ணும் காதும உள்ளன என்று கொண்டு இயங்குவதாயின், உடல் அழிவது உறுதி! உறுதி! முக்காலும உறுதி! சென்ற விடத்தால் செலவிடாது, தீது ஒரீஇ, நன்றின்பால் உய்பப தன்றே அறிவு. இவவாறே நாட்டின் நல்வாழ்வு நடைபெற வேண்டுமாயின், ஏவும வினைமுதல கல்வியாளராகவும, இயற்றும் வினைமுதல் செல்வராகவும் அமைதல் வேண்டும்.

நம் தமிழகம, பண்டு பெருமைக்குரிய நாடாக விளங்கிற்று என்றால், அதற்குக் காரணம, அக்காலத்தில் அறிவன அறிந்த அறிவுடையோராய புலவர் சொல்வழி, அக்கால அரசர்களும், பிறசெல்வர்களும பின்பற்றி நடந்தனர் என்பதே; ஆகவே, ஒரு நாடு வாழ்வதும், தாழ்வதும் அந் நாட்டுச் சான்றோர் வாழ்வதாலும, தாழ்வதாலுமே யாம் என்பது தெளிவு. "எவ்வழி நல்லர் ஆடவர்; அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்றார் ஔவையார். "சான்றோர் பலர்யான் வாழும ஊரே" என்றார் பிசிராந்தைப பெருந்தகையார். "வழக்கெனப்படுவது உயர்ந்தோர் மேற்றே; நிகழ்ச்சி அவர்கட்டாகலான" என்றார் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர்; "தக்காரும், தாழ்விலாச்

செல்வரும் சேர்வதுநாடு;" "பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்; அதுவின்றேல், மண்புக்கு மாய்வது மன்" என்றார் திருவள்ளுவர்.

இவ்வுண்மையை உணர்ந்தனர் அக்காலத் தமிழ்நாட்டு அறிஞரும், அரசரும்; ஆகவேதான் அக்கால அறிஞர்கள் தம வயிற்றுபபாட்டிற்கு வழிகாண்பதே வாழ்க்கை; அதற்காகப் பிறரைப் பாடிப்பிழைப்பதே தம்தொழில் என்பதை மறந்து, தவறு கண்டவழி, அத் தவறு செய்தான் அந நாடாளும் அரசனே யெனினும், அவன் அரசன், தமக்கு வேண்டும் பொன்னும் பொருளும் அளித்துப் புரப்பவன்; ஆகவே, அவனைக் கடுஞ்சொல் கூறிக் கண்டிப்பதா என எண்ணாது, இடித்துக்கூறித் திருததுவதையே தொழிலாகக கொண்டிருந்தனர். அரச ரும, அவர்கள் அண்டிப்பிழைகக வந்தவரேயன்றி, அறி வூட்ட வநதவரன்று என்று கொள்ளாது, அவர் அறிவிற்கு அஞ்சி, அவர் ஆட்டியவாறு ஆளுவதே அரசர்ககு அழகு எனக் கொண்டு வாழ்ந்தனர்.

புலவர் வழி காட்ட, அவ்வழியே அரசர்கள் சென்ற காரணததால்தான், செந்தமிழ்நாடு, சீரும சிறப்பும் செழிக்க, பாரோர் போற்றும பெருநிலையுற்றுத் திகழ்ந்தது. பாடல புனைவது ஒன்றே பாவலா தொழில என்று கருதி அடங்கியவர்கள் அல்லர் அப் புலவர்கள். அரசர்கள்பால் சென்று அறிவூட்டும் பணியினை மேற்கொண்ட அவர்கள், தங்கள் வாழ்க்கையை நடத்துவதற்கான வேறு தொழில் களையும் மேற்கொண்டே யிருநதனா. இளந்தச்சனார், பெருந்தச்சனார், பொற்கொல்லன் வெண்ணாகனார், இளம் பொன் வணிகனார், அறுவை வாணிகன் இளவேட்டனார், கூலவாணிகன் சாத்தனார், மருததுவன் தாமோதரனார், மதுரைக் கணக்காயனார் என அப் புலவர்களுக்கு வழங்கும் இப் பெயர்களே அவ் வுண்மையை மெய்ப்பித்தல் காண்க. பாடிப் பிழைப்பதையே பிழைப்பிற்காம் வழியெனக் கொள்ளாமல், தமக்கென ஒரு தொழிலை வரைந்து கொண்டு வாழ்வு நடாத்தியதோடு, காவலர்க்குத் துணை

யாய்க் கருத்துரை பல கூறுவதைக் கடனாகவும் கொண்டு வாழ்ந்த அப் பழந் தமிழ்ப் புலவர் வாழ்க்கை வரலாறு, இக்காலப் புலவர்க்கும், 'அறிவு கூறும் உரிமை அற்றவர் புலவர்' எனக் கருதும் அரசியல் தலைவர்க்கும் வழி காட்டி யாய் நின்று வாழ்விக்குமாக.

நாம் யாருடைய வாழ்க்கை வரலாற்றை அறிந்து கொள்ள விரும்புகின்றோமோ, அவர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தே வாழ்ந்தவராவர். ஒருவர் வாழ்க்கை வரலாற்றை அறிவிக்கும் வாயில்களாய் இருப்பன ஒன்று: தங்கள் வாழ்க்கை வரலாற்றைத் தாங்க ளாகவே எழுதி வைத்திருக்கும் தம் வரலாறுகள் (Autobiographies); இரண்டு: தங்கள் வாழ்க்கையின் அன்றாட நிகழ்ச்சி களைத் தாங்களாகவே எழுதி விட்டுச் சென்ற நாட்குறிப்புக்கள (Diaries); மூன்று: அவர்கள் காலத்தே வாழ்ந்து அவர்க ளோடு பழகியோர் சிலர் எழுதி வைத்த அவர் வரலாறுகள் (Biographies); ஈண்டுக் குறிப்பிட்ட இவையே, ஒருவர் வரலாற்றை உள்ளவாறு அறிய உதவும் வரலாற்றுச் சான்றுகளாம். இவற்றுள் ஒன்றும் இல்லாவிடத்தே, அவர்கள் வாழ்ந்த காலத்தே வாழாது போயினும், அவருக்குப் பிற்பட்ட, ஆனால் அவர்க்கு மிகவும் அண்மைக் காலத்தில் வாழ்ந்த சிலர், அவர்பற்றி முன்னோர் கூறக் கேட்டனவற்றைக் குறித்து வைத்தனவும் வரலாற் றுத் துணையாம் இயல்பினவே ஆம்.

ஆனால், இங்கு நாம் அறிய விரும்பும் புலவர் தம் வாழ்க்கை வரலாற்றை அறிவிப்பதில் மேற்கூறியன துணை புரிகின்றனவா எனின் இல்லை என்றே கூறலாம். புலவர்கள், தம் வாழ்க்கை வரலாற்றை வகைதொகையாக எழுதி விட்டுச் சென்றாரல்லர்; அவர் காலத்தே வாழ்ந்த வேறு பிறரும் அவரைப்பற்றி எழுதி வைக்கத் தவறி விட்டனர்; அவர் காலத்திற்கு அண்மையான பிற்காலத்தே வாழ்ந் தோரில் யாரேனும் அவர் பற்றிக் குறித்து வைத்தனரா எனின், அதுவும் இல்லை. இப்போது நமக்குக் கிடைக்கும் சான்றுகள் எல்லாம், புலவர்கள் அவ்வப்போது எழுதி

விட்டுச்சென்ற சிலபாடல்களும், அப் புலவர்களுக்கு, மிக மிகப் பிற்பட்ட காலத்தே வாழ்ந்த யாரோசிலர், அவர் பற்றி எழுதிவைத்த சில வரலாற்றுப் பாடல்களுமே ஆம். புலவர்கள் எழுதிவைத்த பாடல்கள்முழுதும் அவர் தம் வாழ்க்கை வரலாற்றை அறிவிக்கும் இயல்பினவா எனின், அதுவும் இல்லை, அவர்பாடிய பாடல்கள் எல்லாம் இருவகையுள் அடங்கும்: அகத்துறைப்பாடல்கள், புறத்துறைப்பாடல்கள் என. முன்னவை முழுதும் யாருடைய வரலாற்றையும் சிறப்பாகக் குறிப்பதின்றிப் பொதுவாக, அக்கால ஆண், பெண் கூடிவாழும் வாழ்க்கைவகையினை வகுத்துரைப்பனவாம்; ஆதலின், அவை புலவர்வாழ்க்கையை வகுத்துரைக்கத் துணை புரிவன அல்ல; புறத்துறை தழுவிய பாடல்களே புலவர் தம் வாழ்க்கையினைக் காண்பதில் ஓர் அளவு நமக்குத் துணைபுரியும் இயல்பின என்றாலும், அவைதாமும், புலவர் வாழ்க்கை ஒன்றையே விளங்க உரைக்க வந்தன அல்ல; அக்காலப் பேரரசர்களையும் சிற்றரசர்களையும் கண்டு, அவர் அளித்த பரிசில் பெற்ற மகிழ்ச்சியால், அவரைப் பாராட்டியும், அவரிடையே குறைகண்ட விடத்துக் கடிந்து கூறித் திருத்தியும் பாடிய பாடல்களேயாம் ஆகவே, அவை அப் புலவர்தம் வாழ்க்கை வரலாற்றை விளக்குவதினும், அவ்வரசர் தம் வரலாற்றையே பெரிதும் விளக்கிச்செல்லும் இயல்பினவாய்த் தோன்றுகின்றன எனினும், அரசர் பற்றிக்கூறும்பொழுது, அவ்வரசரோடு அப் புலவர்கள் கொண்டிருந்த தொடர்புகள் சிலவற்றையும் குறிக்கின்றன ஆதலின், அப் புலவர் வரலாற்றை அறிவதில், அவை நமக்கு ஓரளவு துணைசெய்கின்றன என்பது உண்மையே எனினும் அவை, அவர் வரலாறு அனைத்தையும் அறிவிக்கும் ஆற்றல் உடையன ஆகா.

இனி, புலவர் தம் வரலாறு பல தலைமுறைவரை ஒருவர் கூற, மற்றவர் கேட்பது என்ற முறையிலேயே அறியப் பட்டு வந்ததாதலின், அம்முறையால், அவர் தம் உண்மை வரலாற்றுள் உள்ள பகுதி விடப்பட்டும், இல்லாதபகுதி இணையப்பெற்றும், ஒன்று பிறிதொன்றாகத் திரிக்கப்பெற்

றும், ஒருவர் வரலாறு மற்றொருவருடையதாக மாற்றப்பட்டும்இருத்தல் இயல்பே; ஆதலின், காதுவழிச் செய்தி (Hear-say evidence) யாய இச் சான்றுகளைப் புலவர்தம் வரலாற்றை அறிவிக்கும் உண்மைச் சான்றுகளாகக் கொள்வது கூடாது ஆகவே, புலவர் வரலாறு என்பது, புராணங்களும், பிற்கால நூல்களும் கூறுவனவே என்று கொள்ளாது, அப் புலவர்கள் தம் வாய்ப்படப்பாடிய பாடல்களில் காணப்படும் ஒருசில குறிப்புக்களைக் கொண்டதென்றே கொள்ளுதல் வேண்டும். அதுவே, அவர் தம் உண்மை வரலாற்றை உள்ளவாறு உணரும் வழியாம் ஆதலின் அம்முறையைப் பின்பற்றிப் புலவர் பாடல்களாகப் பத்துப்பாட்டினும், எட்டுத்தொகையினும் கிடைக்கும் பாடல்களின் துணைகொண்டே புலவர்கள் வரலாறு வகுத்துரைக்கப்படும்

பாடல்புனையும் பண்புடைக் கல்வியாளராய்ப் பெண்கள் பலர் வாழ்ந்த நன்னாடு என்ற பெருமையை உடையது நம தமிழகம் தாய்நாட்டைக்காத்தலே தம்மக்களின் தலையாய கடன்; அக் கடமையில் தவறும் தறுகணிலாரைப் பெற்றேம் எனக்கூறலும் பெரும்பழியாம் என்ற உணர்ச்சியின் ஊற்றுக்களாக மகளிர் பலர் மகிழ்ந்து வாழ்ந்த நாடு என்ற பெருமை உடையது நம தமிழகம் பெண் கல்வியிற் சிறந்து பெருமிதங்கொண்ட நாடு; மறக்குல மகளிர் மல்கிய நாடு; என்ற இப் பாராட்டுரைகளைப் பண்டு பெற்றிருந்தது நம தமிழகம. "தமிழகத்தைப்பார்; அந்நாட்டு மகளிரைப் பார், அவர்தம் அறிவின் ஆழத்தைப்பார்; ஆடவரிற் சிறந்த அவர்தம் ஆண்மையின் ஆற்றலைப்பார்; அவர்கள் ஒழுக்கத்தின் உயர்வைப்பார்; உயர்ந்த பண்பாட்டைப் பார்," எனப் பிறநாட்டு மக்கள் எல்லாம், தங்கள் நாட்டுப் பெண்மக்களுக்கு எடுத்துக்காட்டி ஏற்றம்பெற முயன்றனர் அன்று நாம் பெற்றிருந்த உயர்நிலை இது! அந்தோ! இன்று நம் நிலைஎன்ன? "துருக்கியைப்பார். முகமூடி அணிந்த அந் நாட்டு மகளிர்தம இன்றைய முன்னேற்றத்தைப்பார்; ஆயுதம் ஏந்துகின்றனர் ஆடவர்களைப்போல்; ரஷ்யாவைப்

பார்; சிறுவைப்பார்; அந் நாட்டுப் பெண்கள்உழைப்பால் அந் நாடுகளின் வனப்பும், வளமும் பெருகியுள்ளன. அவர்கள் ஆற்றலால் வாழ்வும வெற்றியும் வளர்ந்துள்ளன,' எனப் பிறநாட்டுப் பெண்களின் வாழ்வையும் வனப்பையும் இன்றையத் தமிழகப்பெண்களின் நிலைக்கு, நம் நாட்டுப் பெண்களுக்கு எடுத்துக்கூறி வழிகாட்ட வேண்டியதாகி விட்டது. என்னே அவர்தம் வீழ்ச்சி!

என்றாலும், நம்பிக்கை முற்றும் அற்றுப்போய் விடவில்லை: மீண்டும் இங்கே இருள்நீங்கி ஒளிவீசும் நிலை தோன்றியுளது "அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பேன்?" என்ற இடைக்கால இழிநிலையின் நீங்கி, "பெண் கல்வி தேவைதானா?" என்ற ஐயநிலை உற்று, "பெண்களும் கற்றற்குரியரே; கல்வி அவர்களுக்கும் தேவைதான்," எனத் தெளிந்து, "அவ்வாறாயின், அவர்களுக்கு எததகைய கல்வி அளித்தல் வேண்டும்!" என்ற ஆராய்ச்சி நிலைக்கு வநதுள்ளனர் இன்றையத் தமிழ்நாட்டார்; நாட்டின் நற்காலத்திற்கு இஃது ஒரு நல்ல அறிகுறி.

பிறநாட்டுப் பெண்கள், பாரோர் போற்ற வாழ்வதைப் போன்றே, பேருமை புகழும் பெருக வாழ்ந்த பெண்கள் நம்தமிழகத்திலும் இருநதனர்; பிறநாட்டுப் பெண்கள் காட்டும் வழியைக் கடைப்பிடித்து உயர்நிலைபெற முயல்வதேபோல், நம்நாட்டுப்பெண்கள் நமக்குக் காட்டிய நல்வழியிற் செல்லவும் முன்வாருங்கள் என்று கூறும நற்பணியை நினைவிற் கொண்டே, நம்நாட்டில் பண்டு வாழ்ந்த பெண்கள் பலர் வரலாற்றை விரித்துரைக்கப் பெரியோர் பலர் விரும்புகின்றனர் அப் பெண்கள் வரிசையில் முதற்கண் நிற்கும் மூதறிவாட்டி ஔவையாராவர்; அவர்தம் வாழ்க்கை வரலாற்றை அறிந்த அளவில் அறிவிப்பதே இந்நூல்.

---

# உ. ஔவையார் வரலாறு

"ஔவையாரைப் பெற்றெடுத்த தந்தை யார்? தாய் யார்? உற்றார் யார்? உடன் பிறந்தார் யார்? அவர் பிறந்து வளர்ந்த ஊர் யாண்டுளது? அவரைப் பெற்றெடுத்த பெருமைக்குரிய குடி எது? அவர் கல்வி கற்றது எங்ஙனம்? கற்றுத் தந்த நல்லாசிரியர் யார்?" என்பன போன்ற வினாக்களுக்கு விடைகாணும் வாய்ப்பு, அவர் பாடலைப் பயின்றாக்குக் கிடைத்திலது.

## (1) பிறந்த குடி:

பழந்தமிழ்க் குடிகளில் பாணர் குடி என்பதும ஒன்று; "பாணன் பறையன் துடியன் கடம்பனென்று இந்நான் கல்லது குடியும இல்லை" என்பது புறநானூறு. அவர்களுள், ஆண்மகன் பாணன் எனவும், பெண்மகள் பாடினி அல்லது விறலி எனவும அழைக்கப்பெறுவர். பாணன், இசைக்கருவியோடு இணையுமாறு இன்குரல் எழுப்பிப் பாடிப் பாராளும் அரசர்களையும், ஊராளும் தலைவர்களையும் மகிழ்வித்துப் பரிசில்பெற்று மீள்வன். விறலியர், அப் பாணர் பின்சென்று, அப் பாணர் பாடும பாடற்பொருளும், தாமே பாடும் பாடற்பொருளும் தெளிவாகத் தோன்றுமாறு கண்ணும் கையானும் நடித்து, ஆடிப்பாடிப் பரிசில்பெற்று மீள்வர். தாம் செல்லும் இடந்தோறும், தம் இன்னிசைக் கருவிகள் அனைத்தையும் பையுள் இட்டுக் கட்டித் தோளிற் சுமந்துகொண்டு செல்வதும் அவர் வழக்கமாம். மேற்கூறிய குடிகள் எல்லாம் தொழில்பற்றித் தோன்றினவே எனினும், இப் பாண்குடி ஓர் அளவு தாழ்வுடைக் குடியாகவே கருதப்படும்.

ஔவையார், இப் பாணர் குடியில் பிறந்தவரே என்று கூறுவர் சிலர். அதற்கு ஆதாரமாக அரசன் ஒருவன், ஔவையாரை "விறலி!" என அழைத்தான் என ஔவையார் அவர்களே பாடிய, "இழையணிப் பொலிந்த ஏந்து கோட்டல்குல், மடவரல் உண்கண் வாணுதல் விறலி!"

என்ற பாட்டையும், அதியமான் என்ற அரசன், பரிசில் அளிக்காது நீட்டித்தபோது, அவன் மீது சினங் கொண்ட ஔவையார், "வேற்றிடம் நோக்கிச் செல்கின்றேன்" என அவன் வாயில்காவலனிடம் கூறிப் புறப்படும் பொழுது, "இதோ காண் ; என் கலன்களையும், என் இசைக்கருவிகள் அடங்கிய பையினையும் தூக்கிக் கொண்டேன்." "காவினெம் கலனே ; சுருக்கினெம் கலப்பை" எனக் கூறியதையும் காட்டுவர்.

அரசன் ஒருவனை, ஒரு புலவர் பாடும் வழக்கம் தோன்றிய அக்காலத்திலேயே புலவர்கள், எக்குலத்தில் பிறந்தவராயினும், தங்களைப் பாண்குடியிற் பிறந்தாராகக் கொண்டு, பாணன் ஒருவன், அரசன் ஒருவனிடத்தில் சென்று, யாழ் இசைத்துப பாடுவதைப் போல் பாடல் புனைவதையே மரபாகக் கொண்டு விட்டனர். உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்ற புலவர் அந்தணர் மரபினர் என்று கூறியுள்ளார் தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு உரையெழுதிய பேராசிரியர். அம் முடமோசியார் ஆய் என்ற வள்ளல் ஒருவனைப் பாடிய பாடல் ஒன்றில், விறலி பின்வர யாழ் இசைத்து அவனைப் பாடியதாகப் பாடியுள்ளார்.

"வளைக்கை விறலிஎன் பின்ன ளாகப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
வரிநவில் பனுவல் புலம்பெயர்ந்து இசைப்பப்
படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்
ஒல்கல் உள்ளமொடு ஒருபுடைத் தழீஇப்
புகழ்சால் சிறப்பின்நின் நல்லிசை உள்ளி
வந்தெனென்." (புறம் : கஙௌ)

வேளாளர் என்பதைக் குறிக்கும் கிழார் என்ற பட்டப் பெயருடைய அரிசில் கிழார் என்பவர், பேகனைப் பாடிய பாடல் ஒன்றில், "சீறியாழ் செவ்வழி பண்ணி நின் வன்புல நன்னாடு பாட என்னை நயந்து" எனப் பாடியுள்ளார். அந்தணருள் ஒரு பிரிவினர் எனக் கருதப்படும்

நக்கீரர் சோழநாட்டுப் பிடவூர் கிழான் பெருஞ் சாத்தன் என்பானைப் பாடிய பாடலுள், "அரிக்குரல் [1]தடாரியோடு ஆங்கு நின்ற எற்கண்டு" எனப் பாடியுள்ளார். ஆகவே, அவ்வாறு பாடுதல் கவிமரபே அன்றி உண்மையாகவே அவ்வாறு பாடினாரலர் என்பது உணரப்படும்.

மேலும் அரசன் ஒருவனைப் பாடும்பொழுது தங்களை யாரோ சில பாணர் பரிசில் பெறும் இடம் யாண்டுளது எனக் கேட்பது போலவும், அதற்கு விடையாகப் பரிசில் அளிப்போன், அவன் ஆற்றல், அருள் அவன் பால் தான் பெற்ற பரிசில், அவனிடைச் செல்லும் வழி ஆகியவற்றை அவர்க்கு அறிவிப்பார் போலவும் கவி பாடுதலை மரபாகக் கொண்டனர் புலவர் அவ்வாறு வந்த பாடல்களில் விளிக்கப்படும் விறலியரோ, அல்லது அப்பாட்டைப் பாடியவராகக் கூறப்படும் விறலியரோ, உண்மையில் விறலியராகார். கவிமரபு கருதிய புலவர்கள் தங்களைத் தாங்களே அவ்வாறு அழைத்துக் கொண்டனர் என்றே கொள்ளுதல் வேண்டும் இதற்கான சான்றுகள் சங்கப் பாடல்களில் நிறைய உள்ளன. பத்துப் பாட்டில் வரும் பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை முதலாய பாடல்கள் இவ்வாறு வந்த பாடல்களே. விறலி ஒருத்தியை விளித்துக் கூறியதாக ஔவையாரே பாடிய பாட்டும் உண்டு.

> "ஒருதலைப் பதலை தூங்க, ஒருதலைத்
> தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்
> கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்
> சுரன்முதல் இருந்த சில்வளை விறலி
> செல்லை யாயின் சேஞ்ஞோன் அல்லன்." (புறம். 103)

என்ற பாடல், அவ்வாறு வந்த ஔவையார் பாடல்களுள் ஒன்று. ஆகவே, ஔவையார் பிறந்த குடி பாணர்குடியே; அவர் பாணர் மகளே எனக் கொள்வது உண்மையன்று. பெரும்பாலான புலவர்களைப் பற்றிக் கூறுவதைப் போன்றே

1. தடாரி - ஒருவகைப் பறை.

அவர் வரலாறு அறியமுடியாதவாறு இருள் சூழ்ந்துளது என்றே கூறுதல் வேண்டும்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு." (திருக் : ௪௨௨)

என்பதற்கு மாறாக, ஆளைக் கண்டே அவர் கருத்திற்கு மதிப்புத் தரும் மாண்பு கெட்ட மக்கள் வாழ்கின்ற இவ்வுலகில், ஔவையார் வரலாறு விளங்சாது மறைந்ததும் ஒரு வகையில் மகிழ்ச்சிக்குரியதே உண்மையில் அவர் ஓர் இழிகுலப் பெண்ணாய்ப் பிறந்து, மணங்கொண்டு வாழா மங்கையாகவோ, அன்று மணங்கொண்ட மறு ஆண்டிலேயே கைம்பெண் ஆன களங்கமுடையளாகவோ ஆகிக், கணவன் இழந்த பின்னாக் கட்டுக்கடங்காமல் காவல் மீறி, காவதம் பல கடந்து காவலர் பலர் முன் நின்று, கவிபாடிப் பிழைப்பவளாய் மாறியதாக, அவர் தம் அவ் வரலாற்றை அறியும் வாய்ப்பும் இக்கால மக்களுக்குக் கிடைத்திருப்பின், அவர் தம் வாழ்வு வனப்புடையதன்று. ஆகவே, வனப்பிலா வாழ்வுடையாள் வாயினின்றும் வந்த அப்பாடல்களும் வாழ்த்துதற்குரியன அல்ல; வைதற்குரியனவே என்று கொண்டு, ஒரு வேளை வெறுத்திருப்பினும் இருப்பர். அத்தகைய ஒரு நிலை ஏற்படாமல் இருக்க, ஔவையார்தம் வரலாறு விளங்காமற் போனது நன்று என்றே இக்காலப் பெரியோர் சிலர் எண்ணுவர். அதனாலன்றோ அவ்வியல்புடையாரும், ஔவையார் பாடலைக் குறையுடையதெனக் கொண்டு தள்ளாது, குணம் உடையதாகக் கொண்டு போற்றவும் செய்கின்றனர்.

## (2) சார்ந்த சமயம் :

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே."
(தொல் · புறத்திணை - ௩௩)

என்ற தமிழர் தம் இயற்கை வழிபாட்டுமுறை மறைய, சிவன், திருமால், முருகன போன்ற வைதீகக் கடவுளரை

யும், கொற்றவை போன்ற சிறு தெய்வங்களையும் வழிபடும் வழக்காறு, ஔவையார் காலத்திலேயே தமிழகத்தில் இடம்பெற்று விட்டது. ஆகவே, தமிழர்கள் ஒவ்வொரு வரும் இக் கடவுளரில் யாரையேனும் ஒருவரை வழிபடு தெய்வமாகக் கொண்டே வாழத் தொடங்கினர். ஔவையார் இம் முறைக்கு மாறுபட்டவரல்லர்.

தமக்குப் பரிசில் அளித்த அரசர்களை வாழ்த்திய விடத்தெல்லாம், "காவிரி எக்கரிட்ட மணலினும் பல நாள் வாழ்க." "மாமழை பொழிந்த நுண்பல் துளியினும் வாழ்க பலநாள்;" "பஃறுளி ஆற்று மணலினும் பல நாள் வாழ்க;" "தண்கதிர் மதியம் போலவும், ஒண்கதிர் ஞாயிறு போலவும் மன்னுகபெரும" எனப் புலவர் பலரும் இயற்கைப் பொருளை எடுத்துக் காட்டியே வாழ்த்தினர். நெடு நாள் வாழ உதவும் நெல்லிக்கனி ஒன்றைத் தமக்கு அளித்த அதியமானை வாழ்த்திய ஔவையார் மட்டும் "நஞ்சுண்ட நீலகண்டனைப் போல் நெடிது வாழ்க"—"நீலமணிமிடற்று ஒருவன் போல மன்னுக! பெரும! நீயே" என்றே வாழ்த்தியுள்ளார். மேலும், கரும்பைத் தமிழகத்திற்கு முதற்கண் கொணர்ந்தோர் அதியமான் முன்னோராவர் என்று கூறிய விடத்து, அக் கரும்பு "அந்தரத்து அரும்பெறல் அமிழ்தம் அன்னது" என்றும், அவற்றை அவன் முன்னோர், "அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்" வழிபட்டுக் கொணர்ந்தனர் என்றும் கூறியுள்ளார். போர்க்களத்தில் வீரப்புண் பெற்று வீழ்ந்து மடிந்தார் வீரசுவர்க்கம் புகுவர் என்றும், அவ்வாறு போர்ப்புண் பெறாது இறப்போர் உண்டாயின், அவர்க்கும் அவ் வீரசுவர்க்கம் கிடைக்குமாறு இறந்த அவர் உடலைத் தர்ப்பைப்புல்மீது கிடத்தி, வாளால் வெட்டிப் புதைப்பர் என்றும்,

"ஓடல் மரீஇய பீடில் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதல் மறந்துஅவர் தீதுமருங்கு அறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்

திறம்புரி பசும்புல் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கஎன
வாள்போழ்ந்து அடக்கலும்'' (புறம் : 93)

உயிர்களுக்கு வாழ்நாள் வரையறுக்கப்பட்டுளது; அவ் வரையறை தவறாது, கூற்றுவன் உயிர்களைக் கொண்டு செல்வன்; அவ் வாழ்நாள முடியும நாளன்று வெண்கடுகுப் புகையெழுப்பித் தடுப்பினும் அவன் தவறாது கொண்டு செல்வன் என்றும்,

" ஐயவி புகைப்பவும் தாங்காது ஒய்யென
உறுமுறை மரபின் புறம்நின்று உய்க்கும்
கூற்றம்.'' (புறம் : 98)

வைதிக முறைகளை விளங்க எடுத்துக் கூறியுள்ளார். உலகம் நிலையாமை உடைத்து,

" நாகத் தன்ன பாகார் மண்டிலம்
தமவே ஆயினும் தம்மொடு செல்லா
வேற்றோ ஆயினும் நோற்றோர்க்கு ஒழியும்.''
(புறம் : 367)

மேலைத் தவததளவே ஆகுமாம் தான்பெற்ற செல்வம்; பார்ப்பார்க்குப பூவும புனலும் சொரிந்து பொன்தானம் புரிதல்வேண்டும்.

" ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து.'' (புறம் : 367)

உயிர்க்கு ஊறுவந்துழி, நல்வினையே நற்றுணையாம், "வாழச்செய்த நல்வினையல்லது ஆகுங்காலைப் புணைபிறி தில்லை,'' அந்தணர் செந்தீ வளர்பபர், "ஒன்று புரிந்து அடங்கிய இருபிறப்பாளர் முத்தீ'' என்ற கருத்துக்களையும் ஏற்றுக் கூறியுள்ளார். இவற்றையெல்லாம் கொண்டு நோக்கியவிடத்து, ஔவையார், சிவனை வழிபடுகடவுளாகக்கொண்ட வைதிகச்சமயச்சார்புடையார் என்றே கொள்ளுதல் வேண்டும்.

### (3) அவர் வாழ்நாள் :

ஆண்டாலும், அறிவாலும் முதிர்ந்த ஒரு பெண் மகளைச் சுட்டுவதற்காகவே ஔவையார் என்ற சொல்லைத் தமிழ்மக்கள் ஆளுகின்றனர். ஆதலின் ஔவையார் நெடு நாள் வாழ்ந்தவர் என்பதைக் கூறத்தேவையில்லை தான் நெடுநாள் வாழ்ந்ததாகவும், அதற்குக் காரணம் அதிக மான் அளித்த கருநெல்லிக்கனியே என்றும் அவரே கூறி யுள்ளார்.

> " சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
> ஆதல் நின்னகத் தடக்கிச்
> சாதல் நீங்க எமக்கீத் தனையே " (புறம் : ௯௧)

அவர் இறவாது என்றும் இருக்கச்செய்தது என்பதல்ல இச் சொற்றொடர் அளிக்கும கருத்து; அந் நெல்லிக்கனி உண்பதற்கு முன்னர், அவர் ஆண்டு நிரம்பித் தளர்ந்த உடலினராகி யிருத்தல்வேண்டும். அவர் உடல் பேணப் படாது விடப்படின், அவர் இறப்பு விரைவில் எய்துவ தாகத் தோன்றியிருத்தல் வேண்டும்; ஆகவே, அதைத் தடுக்க யாதேனும செய்தாகல் வேண்டும் என எண்ணிய அதிகன், அவ்வாற்றல் வாய்நத அருமருந்தாயது, அந் நெல்லிக்கனியே என உணர்நது அதைக் கொணர்ந்து அவர்க்குத் தந்தானுதல் வேண்டும்; அதனுல் அவர் அன்றே மறைவது நீங்கி, மேலுமபலநாள் வாழ்ந்து, பாடல் பல புனைந்து, தாமும மகிழ்ந்து, பிறரையும் மகிழ்வித்தாராதல் வேண்டும் இவ்வாறு அண்மையில் நேர இருந்த சாவை நீக்கி நெடுநாள் வாழச்செய்ததன்றி, சாவே இன்றி வாழச் செய்தது என்பதன்று.

நெடுநாள் வாழ்ந்த ஔவையார், தம் வாழ்நாளின் பிற்பகுதியிலேயே பாடல்புனையப் பழகினரல்லர்; இள மையிலிருந்தே இன்கவிபுனைவதில் ஈடில்லாதிருந்தனர் என் பதற்கு அவர் பாடல்களிலேயே சான்றுகள் உள. "உங் கள் நாட்டில் பொருநரும் உளரோ?" என அரசன் ஒரு வன் கேட்டதாகவும், அதற்குத் தாம் விடையளித்ததாக

வும் வரும் பாடல் ஒன்றில், அவ்வரசன், அணிகள் பல அணிந்ததனால் தோன்றிய ஔவையார் தம் செயற்கை அழகு, இளமைநலம் குன்றா அவர் உடலின் இயற்கை அழகு, நற்குடிப் பெண்டிர்பால் பிரியாது நிற்க வேண்டிய நிறைகுணங்களாய மடம் முதலாயின, மைதீட்டப்பெற்ற அவர் கண்கள், பேரொளிவீசும் நெற்றி ஆகியவற்றைக் கண்டு பாராட்டியதாக அவரே கூறியுள்ளார்.

> " இழை யணிப்பொலிந்த ஏந்து கோட்டல்குல்
> மடவரல், உண்கண், வாள்நுதல், விறலி!" (புறம் : அகூ)

ஆகவே, ஔவையார் பேரழகுவாய்ந்த சிறிளமைப்பருவத்த ராய் இருந்த நாள் முதலே பாடல் தொழிலில் பயிற்சி யுடையராய் இருந்தனர் என்பது தெளிவாம.

## (4) அவர் வாழ்க்கைநிலை :

> " இருவேறு உலகத் தியற்கை ; திருவேறு ;
> தெள்ளிய ராதலும் வேறு." (திருக : நஎச)

என்பர் திருவள்ளுவர். கல்வி பல கற்றவா கடும் வறிய ராகவும், செல்வத்தில் செழித்திருபபோர் எழுத்தறிவு தானும் இலராகவும் இருப்பதையே நாம் எங்கும காண் கின்றோம் கல்வியும் செல்வமும் பொருந்த வாழ்வோர், மிகச் சிலரே ; பெருஞ்செல்வம உடையார்பால் வேண்டு மாயின், சிறிதளவு கல்வியிருக்கக் காணலாமே அன்றிப் பெருங்கல்வி உடையார்பால் சிறிதளவு செல்வமாவது இருக்கக் காண்பது அரிதே ; இஃது இன்றும் இருக்கும் இயல்பு. இவ்வியல்பு இந்நாட்டிற்கு மட்டும் ஏற்புடைய தன்று ; இஃதோர் உலகியல் ; உலகப் பெருங்கவிகள் அனைவரும், வறுமையில் வாடி மறைந்தாராகவே மாநில வரலாறுகள் அறிவிக்கின்றன. தாம செல்வத்தில் திளைத் துச் செருக்குடன் வாழ்ந்ததாக எந்தப் புலவரும் கூறிய தாகத் தமிழ்நூல்கள் அறிவிக்கவில்லை. பெரும்பாலான அவர் பாடல்கள் அவர்தம் வறுமைநிலையைப் பல்வேறு வகையில் விளக்கிக் காட்டவே பாடப்பட்டுள்ளன ;

ஔவையார், தம் வறுமை நிலையை விளக்க, நீர்ப்பாசியின் வேர்போல் நெகிழ்ந்து கிழிந்துபோன தம் உடைகளையும், எண்ணெயும் தண்ணீரும் கண்டு எத்தனையோநாள் ஆகிய காரணத்தாலும், விட்ட வியர்வைநீர் துடைக்கப் பெறுமல், வற்றிப்போனதாலும் புலால் நாற்றம் நாறும் தம் தலையையும் காட்டும் காட்சி கழிவிரக்கம் தருவதாகும்! "என்னரை, முதுநீர்ப்பாசி அன்ன உடை களைந்து," "பாசி வேர் புரை சிதா அர் நீக்கி," "புலவுநாறும் என் தலை." வறுமையில் உழலும் வாழ்வில்தான் செந்தமிழ்ப் பாக்கள் செழிக்கத் தோன்றுகின்றன போலும்!

வறுமையில் வாடிய ஔவையார், தம்பாடல் பெருமையால், தமக்கோர் வாழ்வுமுறையை வகுத்துக் கொண்டார் எனின், அவர் தம சுற்றத்தை மறந்து தம் வாழ்வு ஒன்றையே கருதுபவர் அல்லர் "தக்கவன் ஒருவன் வாழத் தன் கிளை வாழும்" என்பர் பெரியோர். ஔவையாரைச் சூழவாழும் சுற்றம் பெரிது; ஔவையாரும், "தாம பெற்ற பேறு, பெறுக இவ்வையகம்" என்னும் உயர்பேருள்ளம் உடையாராதலின், அரசரை அண்டி, அரண்மனை வாழ்வுபெற்று, அவ்வரசரோடிருந்து இன்சுவை உணவு உண்ணும் அக்காலத்திலும், தம் சுற்றத்தை மறப்பவரல்லர்; அதியமான்அஞ்சியோ டிருந்தகாலை, தம்மையே எண்ணி ஏங்கி இருக்கவும் ஓர் இடமின்றி, ஊர்ப் பொதுவிடத்தையே உறைவிடமாகக்கொண்டு, வாழும் தம் சுற்றத்திற்கு ஆட்டுவகையில் செந்நெற் குவியல்பல கொடுக்குமாறு அஞ்சியை அவர் வேண்டினர்; அவனும் அவ்வாறே அளித்து அருளினன்.

"முன்னூர்ப் பொதியில் சேர்ந்த, மென்னடை
இரும் பேரொக்கல் பெரும்புலம்பு அகற்ற
பகடுதரு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுக என்றோன்." (புறம்: ந௲0)

(5) **அவர் அறிந்த நாடுகள்:**

ஔவையார் தமிழகம் முற்றும் சுற்றிப் பார்த்தவர்; அவர் செல்லாத நாடு இல்லை; ஒவ்வொரு நாட்டிற்கும்

நேரில் சென்று அந் நாட்டின் பரப்பு, செல்வச் சிறப்பு, மக்கள் பண்பு முதலாயின அறிந்துள்ளார் அவர்; சேர, சோழ பாண்டிய நாடுகள் என முப்பெரும் பிரிவாக இருந்த தமிழகம், அவர் காலத்தில் மேலும் பல நாடுகளைக் கொண்டதாகப் பிரிக்கப்பட்டிருந்தது; அவர் காலத்திற்கு முன்பே, தொண்டைநாட்டுப் பிரிவினை தோன்றிவிட்டது; நாஞ்சில் நாடும், தமிழகத்தின் ஒரு பிரிவே எனத் தழுவப் பட்டிருந்தது; ஔவையார், சோழநாட்டில் உள்ள கிள்ளி என்பானுக்குரிய வெண்ணி என்ற ஊரையும், அவ்வூரில் உள்ள பொய்கையையும், அதில் வாள்போல் பிறழும் வாளைமீன்களையும், அம் மீன்களைப் பிடித்து உண்ணக் காலம் பார்த்துக் கரையில் நிற்கும் நீர்நாய்களையும், அவ் வூரைச் சூழப் பரந்துகிடக்கும் வயல்களையும், அவ் வயல் களில் வளர்ந்து படர்ந்திருக்கும் ஆம்பற்கொடிகளையும் பார்த்து மகிழ்ந்துள்ளார்;

> " வாளை வாளிற் பிறழ நாளும்
> பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்
> கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த
> வயல்வெள் ஆம்பல். " (நற். ௩௯0)

சேரனுக்குரிய கொல்லிமலை அவருக்குத் தெரியும்; பெரு மழை பெய்வதால் பெருகி ஓடும் அம் மலையருவிகளின் இன்னோசை கேட்டு மகிழ்ந்ததும் உண்டு.

> " .. .. ..... .. .....பொறையன்
> கார்புகன்று எடுத்த, சூர்புகல் நனந்தலை
> மாயிருங் கொல்லி உச்சித் தாஅய்த்
> ததைந்துசெல் அருவி. " (அகம்: ௩0௩)

பாரிக்குரிய பறம்புமலையும் அவர் பார்த்துப் பாராட்டி யதே; தொண்டைநாடு சென்று அந் நாட்டு அரசன் தொண்டைமானிடம் தூதுரைத்து மீண்டு வந்துள்ளார்; நாஞ்சில்நாட்டில் பெருவள்ளலாய் விளங்கிய நாஞ்சிற் பொருநனைப் பாராட்டிப் பரிசில் பெற்றுள்ளார். மேலும்

**சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன்* கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதியும், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும்** ஒருங்கிருந்தவழி, அவர்களைப் பாராட்டி, அறிவுரை பல கூறி, அவர்கள் நட்புவளர வாழ்த்தி வந்துள்ளார்; இவ்வாறு நாடுபல சுற்றி, ஆங்காங்கே நல்ல நண்பர் பலரைப் பெற்றுள்ள பெருமையாலன்றோ, அதியமான் பரிசில் நீட்டித்தவழி, "உலகம், அறிவும் புகழும் உடையோர் அனைவரையும் இழந்து விடவில்லை; நாங்கள் எங்கே செலினும், அங்கெல்லாம் எம்மை அன்புடன் வரவேற்றுச் சோறு அளிப்பார் உளர்;" என்று பெருமிதம் தோன்றக் கூறி வெளியேற முடிந்தது! மேலும், நாடனைத்தையும், நன்றாகச் சுற்றிப்பார்த்துப் பழகிய காரணத்தாலேயே, ஒவ்வொரு நாடும் எவ்வெப் பொருளாற் சிறந்தது என்பது தோன்ற,

> "வேழம் உடைத்து மலைநாடு; மேதக்க
> சோழ வளநாடு சோறுடைத்து;—பூழியர்கோன்
> தென்னாடு முத்துடைத்து; தெண்ணீர் வயல் தொண்டை
> நன்னாடு சான்றோர் உடைத்து."

என்ற பாடலைப் பாட முடிந்தது அவரால் என்று கூறுவாரும் உளர்.

## (6) வாழ்ந்த காலம்:

தமிழ் இலக்கிய வரலாற்றில் பொற்காலம் எனப்படும் சங்ககாலமே ஔவையார் வாழ்ந்த காலமாகும்; சங்க காலம், கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்றும், ஐந்தாம் நூற்றாண்டு என்றும் இருவிதமாகக் கூறுவாரும் உளர். எனினும், கிடைத்துள்ள வரலாற்றுச்சான்றுகள் எல்லாம், சங்ககாலம இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பதையே உறுதி செய்கின்றன ஆதலின், சங்ககாலப் புலவராகிய ஔவையார், அவ்விரண்டாம் நூற்றாண்டில்

---

* கானப்பார்—காளையார் கோவில்; இது பாண்டிநாட்டில் உள்ள பதின்மூன்கு தலஙகளுள் ஒன்றாக இற்றைநாளில் அமைந்து விளஙகுகின்றது.

வாழ்ந்தவரே; ஒருவர் பிறந்த காலத்தை, ஆண்டு, திங்கள், நாள், நாழிகை, ஓரை தவறாமல் குறிக்கும் இயல்பினராய தமிழர், ஔவையார் போன்ற பெரும்புலவர் பிறந்த நாட்களைக் குறிக்காது விட்டது வியப்பினும் வியப்பே.

## (7) அவர்காலத்துப் புலவர்:

ஔவையார் வாழ்ந்த காலம், சங்ககாலம் என்பதை அறிந்தோம்; சங்ககாலம் என்பது ஔவையார் காலத்திற்கு முன்னும் பின்னுமாகச் சில ஆண்டுகளைக்கொண்ட கால எல்லையைக் குறிப்பதாகும்; ஆகவே, அச் சங்க காலப் புலவர் அனைவரையும், ஔவையார் காலத்தில் வாழ்ந்தோராகக் கொள்ளுதல் பொருந்தாது; சிலர் அவருக்கு முற்பட்ட காலத்தும், சிலர் பிற்பட்ட காலத்தும், சிலர் அவரோடு ஒத்தகாலத்தும் வாழ்ந்திருத்தல் வேண்டும். ஔவையார் பாராட்டைப் பெற்ற அரசர்கள் யார்? அவ் வரசர்களைப் பாராட்டிய புலவர்கள் யார் என்பனவற்றைக் கொண்டு நோக்கியவிடத்து, கபிலர், பரணர், பெருஞ்சித்திரனார், அரிசில்கிழார், ஐயூர்மூலங்கிழார், ஒருசிறைப் பெரியனார், உலோச்சனார், மோசிகீரனார், மருதன்இளநாகனார், கருவூர்க்கதப்பிள்ளை, வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தன், அஞ்சி அத்தைமகள் நாகையார் முதலாய புலவர் பெருமக்கள் ஔவையாரோடு, ஒருகாலத்தே வாழ்ந்தவர் எனக் கொள்ளுதல் கூடும். இவருள் கபிலரும், பரணரும், வெள்ளிவீதியாரும் காலத்தால் ஔவையாருக்குச் சிறிது முற்பட்டவர் என்பதை, அவர் பாடல்களைப் பயின்றார் அறிவர்.

## (8) குணநலம்:

### (க) வறுமையிற் செம்மை

"உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின் வாக்கினிலே ஒளியுண்டாகும்" என்றார் பிற்காலப் புலவர் ஒருவர். புலவர்கள் பொருளால் வறியரே என்றாலும்,

"பெருக்கத்து வேண்டும் பணிதல்; சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு." (திருக்: ௯௬௩)

என்ற மான உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுப்பவர்; பேரரசர்களையும், குறுநில மன்னர்களையும் பாடினார்கள் என்றால், அவர்கள் அளிக்கும் பரிசில் ஒன்றே கருதிப் பாடினாரல்லர்; பரிசில் பெறுவதற்காக என்றே அவர்பால் இல்லாதன எல்லாம் ஏற்றிக்கூறிப் போற்றினாரும் அல்லர்; "கொடுக்கிலாதானைப் பாரியே" எனக் கூறிப் பாராட்டிப் பரிசில் பெறும் பண்பு, அவர்பால் காணல் அரிது. மேலும், தாங்கள் விரும்பிய பொருளை விரும்பிய அளவு அரசர்கள் அளித்தால் ஏற்பரேயன்றி, அரசர்கள் எது அளிப்பினும் ஏற்றுக்கொள்ளும் இழிகுணம் உடையாரல்லர்; அன்றியும், அரசர்கள் விரும்பாது அளிப்பன எவ்வளவு பெரியன ஆயினும், அவற்றை ஏற்றுக்கொள்வாரல்லர்; இவ்வியல்பு புலவர்தம் பெருமைக்குரிய பண்பாடுகளாம்; அவ்வியல்பு ஔவையார்பாலும் அமைந்திருந்தது எனக் கூறத் தேவையில்லை; அதியமான் தலைவாயில் நின்று, தடாரிப்பறை ஒலித்துத் தன் வரவு உணர்த்திச் சிறிது காலை நின்று பார்த்தனர் ஔவையார்; அவன் ஆங்கு விரைந்து வந்திலன்; அதுகண்ட ஔவையார் சினங்கொண்டு அவ் வாயில்காவலனை நோக்கி,

"எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"

எனக்கூறி எழுந்த அவ்வுரை, ஔவையார் தம் வறுமையிற் செம்மையாம் பண்பை வகுத்துரைப்பது காண்க.

(உ) தன்னடக்கம்

ஔவையார் இவ்வாறு சினந்து கூறிச்செல்வது, அவர் தம் செருக்கினை உணர்த்துவதாகாது; ஔவையார் அடக்கமே உருவானவர்; "பரணர் பாராட்டைப் பிறர் பெறுதல் அரிதினும் அரிதே" எனப் பரணர் தம் புலமையைப் பாராட்டிப் பரவும் ஔவையார், தம் பாட்டின் தன்மை குறித்துக் கூறுவன, அவர்தம் அடக்கத்திற்கு அரண் செய்வதாகும். "பணியுமாம் என்றும் பெருமை," "பெருமை, பெருமிதம் இன்மை" என்பர் வள்ளுவர்; கல்விக் கழகு கற்றுணர்ந்து அடங்கல் அன்றோ? இவ்

வுண்மைகளை உணர்ந்தவர் ஔவையாராதலின், அவர்தம் பாடல்கள் அருமை பெருமை வாய்ந்தனவாகவும், “குழந்தைகளின் மழலைமொழி, யாழ்போல் இனிய ஓசையுடையதா என்றால், இல்லை; அல்லது, பொருள் செறிந்து பயன் அளிக்கும் சொல்லா எனின், அதுவும் இல்லை; என்றாலும், அம்மழலை, பெற்றோர்க்கு இன்பம் பயக்கிறது; குழல், யாழ் ஓசைகளினும் இனியது, தம் குழந்தைகள் மழலை எனப் போற்றுகின்றனர் பெற்றோர்; காரணம், அப் பெற்றோர் தம் குழந்தைகள்மாட்டுக் கொண்டுள்ள அன்பே; அதைப்போல, என் பாடல், பிறர் பாராட்டும் அளவு பெருமையுடையது அன்று; அவர்கள் பாராட்டுகின்றனரே எனின், அது பாட்டின் பெருமை கண்டன்று; என்பால் அவர்கள் கொண்டுள்ள அன்பு கொண்டு” என்று கூறுகிறார் அவர். எவ்வளவு தன்னடக்கம் பாருங்கள்!

> “யாழொடும் கொள்ளா, பொழுதொடும் புணரா;
> பொருளறி வாரா; ஆயினும் தந்தையர்க்கு
> அருள்வந் தனவால் புதல்வர்தம் மழலை
> என்வாயச் சொல்லும் அன்ன;” (புறம் : ௯௨)

(௩) வீர உணர்ச்சி

இவ்வளவு அடக்கம் உடையாரே எனினும், அக்கால மகளிர்க்கு இயல்பான வீர உணர்ச்சியில் சிறிதும் குறைந்தவரல்லர் ஔவையார்; அதியமான் படைக்கலச் சிறப்பைப் பகைவர்க்கு எடுத்துக் கூறி, “ஓடி உய்ம்மின்” என அறிவுரை கூறிய வழியெல்லாம், ஔவையார்தம் வீர உணர்ச்சி, பொதுவாக வீறுகொண்டெழக் காண்கின்றோம். என்றாலும், அவ் வீர உணர்ச்சி, வெள்ளம் என வெளிவரும் பாடல் ஒன்றும் உண்டு; வீரப்புண் பெற்று மாண்டாரொருவர் குறித்து மகிழ்ந்து கண்ணீர் விடும் நிகழ்ச்சியைக் குறிக்கும் உவகைக் கலுழ்ச்சி என்ற துறைக்கு எடுத்துக்காட்டாக அவர் பாடிய பாடல் ஒன்றினைப் பாருங்கள்! கடல் போன்று இடமகன்ற பாசறை, அதன் நடுவே ஒரு

பெரு வீரன்; பகைவர் படை கண்டு மனம் புழுங்கு கின்றான்; உதட்டைக் கடித்துக் கொள்கிறான்; கையில் ஏந்திய வேலைப் பல வகையானும் சுழற்றிச் சுழற்றி அதன் வன்மையைக் காண்கிறான்; இறுதியில் அவனுக்குப் படைத் தலைமை கிட்டிற்று; படையைச் செலுத்திக் கொண்டு போர்க்களம் புகுந்தான்; தன் படைநோக்கி வரும் பகைவர் படையைச் சிதற அடித்து, இடைவெளி உண்டாக்கிப் பெரும் போரிட்டுக் கொண்டிருக்கிறான்; பகைவர் பலர் ஒன்று சேர்ந்து, அவன் ஒருவனைத் தாக் கினர்; அவன் உடலெங்கும் விரப்புண்கள்; உருத் தெரி யாமல் அழிந்தது அவன் உடல்; இறந்து வீழ்ந்தான் அவனும்; இச் செய்தி எட்டிற்று அவன் தாய்க்கு.

அவளோ, தோல் தளர்ந்து, தலை நரைத்த கிழம், அவள், அச் செய்தி கேட்டவுடனே, அவனைப் பெற்ற ஞான்று பெற்றிருநத உடற்கட்டும், உள்ள மகிழ்ச்சியும் கொண்டாள் என்ற வீர நிகழ்ச்சியை விளங்க உரைத் துள்ளார் ஔவையார். அப் பாட்டில், அவ் வீர இளைஞனைச் "சிறப்புடையாளன்," "மாண்புடையாளன்" என்றெல் லாம் பாராட்டியதோடு நில்லாமல், அவன் தாயை நமக்கு அறிவிக்கும் முறையின் அழகே அழகு! போர்க்களத்தே முன்வைதத காலைப் பின்வைத்தல் பேடித்தனம் என் பதைக் கொள்கையாகக் கொண்ட ஆண்டகையின் தாய் அவள் என்று, அவ் வீரமகனை முன்காட்டி, அவனைப் பெற்ற பெருமைக்குரிய தாய் எனப் பின்னர் அவளை அறிமுகம் செய்து வைக்கிறார்; ஔவையார்தம் வீரம் என்னே! அவர் எழுத்தும் சொல்லும் எடுத்தாட்டும் வீர உணர்ச்சியும்தான் என்னே! என்னே!!

"கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்,
வெந்து, வாய் மடித்து, வேல்தலைப் பெயரித்,
தோடுஉகைத்து, எழுதரூஉத் துரந்தெறி ஞாட்பில்
வருபடை போழ்ந்து, வாய்ப்பட விலங்கி,
இடைப்படை அழுவத்துச சிதைந்து வேறாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி

வாடுமுலை யூறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே." (புறம் : உகூ)

## (ச) புலவரைப் பாராட்டல்

ஒரு புலவர், இன்னொரு புலவரை மதிப்பது அரிது; புலவர்க்காய்ச்சல் என்பது புலவர் எல்லாரிடத்தும் பொருந்தி நிற்கும் பண்பாகும் என்ற பழியுரைகளைப் புலவர்கள்மீது சூட்டுவோர், ஔவையார் வரலாற்றையும், தம் காலத்தே வாழ்ந்த பிற புலவர்களிடத்தே அவர் கொண்டிருந்த மதிப்பையும் அறிதல் வேண்டும்; புலவர்கள், அப் புலமையைப் பெற எவ்வளவு பாடுபடுதல் வேண்டும் என்பதை விளங்க உரைத்துள்ளார் ஔவையார்; 'சொற்களுள் செஞ்சொற்கள் யாவை என்பதை நுண்ணிதாக ஆராய்ந்து மேற்கொள்ள அப் புலவர்கள் பட்டபாடுதான் என்னே!' என்ற அருமை தோன்ற, அழகிய சொற்களை ஆராய்ந்தறியும் நுண்ணிய ஆராய்ச்சியோடு கூடிய அறிவுடையோர்—"அஞ்சொல், நுண்தேர்ச்சிப் புலவர்"— என அப் புலவர்களைக் குறிப்பிடுங்கால் சிறப்பித்துக் கூறியுள்ளார்: அம்மட்டோ! அப் புலவர்தம் நாக்கினைப் பற்றிக் கூறும்பொழுது, செவ்விய நாவினை உடைய புலவர்— "செந்நாப் புலவர்"—எனச் சிறப்பிக்கிறார்; நாவிற்குச் செம்மையாவது வாழ்தல் வேணடிப் பொய் கூறாமையும், பொருள் செறிந்த செய்யுள் செய்தலும் ஆம் என்பர் அறிவோர்; ஆகவே, புலவா்களைச் செந்நாப் புலவீர் எனப் பெயரிட்டு அழைத்து, அவர்கள் பொய்கூறாப் பெருந்தகையார் என்றும், பொருள் செறிந்த செய்யுள் செய்யும் சிறப்புடையார் என்றும் புகழ்ந்துள்ளார் ஔவையார்.

பெண்களுக்குரிய குணங்களுள் ஒன்றாகிய நாண் பற்றிக் குறிப்பிட வேண்டி வந்தது ஔவையாருக்கு; இந் நாணைக் குறித்து முன்னரே புலவர் பலர் புகழ்ந்து கூறியுள்ளது அவர்க்கு நினைவு வந்தது; "உயிரினும் சிறந்தன்று நாண்" என்று கூறினார், தொலகாப்பியர்; "தாயிற் சிறந்தன்று நாண்" எனறார திருக்கோவை ஆசிரியர்;

ஆகவே புலவர்கள் உயிரினும் சிறந்தது, தாயினும் சிறந்தது எனப் பாராட்டியதற்கு மேலும், அந் நாணைத் தாமும் பாராட்டல் மிகையாம் என்று எண்ணுகிறார்; என்றாலும் அந் நாணைப் பாராட்டாமல் விடுதல் அவர்க்கு இழுக்காம் என்றும் எண்ணுகிறார்; நாணைப் பாராட்டவும் வேண்டும்; தாமும் பாராட்டி, அதனால், புலவர் பாராட்டியது போதாது; தன்னுடைய பாராட்டும் தேவையாக இருந்தது என்று தோன்றச் செய்து, புலவர்க்கு இழுக்கு உண்டாக்கவும் கூடாது; இது அவர் உள்ளம்; இதற்கு வழி யாது? அதற்கு அவர் கண்ட வழி அருமை வாய்ந்தது; நாணையும் பாராட்டினார்; புலவர்க்கு இழுக்கும் தேடவில்லை; மாறாக அவர்களையும் பாராட்டினார்; அது எவ்வாறு முடிந்தது அவரால்; "புலவர் புகழ்ந்த நாண்" என்றார். புலவர் புகழ்ந்த என்ற அடை, எளிதில் யாரையும் புகழாத புலவர், புகழ்ந்த சிறப்பினை உடைய நாண் என, அந் நாணிற்கும் சிறப்பளித்தது; புலவர் புகழ்ந்து கூறியதாலேயே நாணிற்குப் புகழ் உண்டாயிற்று எனப் பொருள்படுதலால், புகழ்ந்த புலவர்க்கும் சிறப்பளித்தது; இவ்வாறு, வாய்க்குமிடம் எங்கும் புலவர் புகழைப் போற்றுதவிடார் ஔவையார்.

இவ்வாறு, பொதுப்படையாகப் புலவர்களைப் புகழ்ந்ததோடு அமையாது, கபிலர், பரணர், வெள்ளிவீதியார் போன்ற பெரும் புலவர்களைப் பெயர் கூறிப் பாராட்டியும் உள்ளார்; மன்னன் கரிகால் வளவன் மகளாகிய ஆதிமந்தி என்பார், காவிரியில் மறைந்து மாண்ட தம் கணவனைத் தேடி, ஊர்ஊராக அலைந்து திரிந்தனர்; அவ் ஆதிமந்தியாரைப் போன்றே, வெள்ளிவீதியாரும் கணவரை இழந்து அலைந்து திரிந்தனர்; இதை அவரே கூறி அழுது பாடியுள்ளார்; நல்லிசைப் புலமை மெல்லியராகிய வெள்ளிவீதியார்தம் வாழ்வில் நிகழ்ந்த இந் நிகழ்ச்சி, ஔவையார் உள்ளத்தை அலைத்து வாட்டுவதாயிற்று; அவர்பால் தாம் கொண்டிருந்த இரக்க உணர்ச்சியை வெளியிடுதற்கான ஏற்ற இடத்தைத் தேடிப் பிடித்து வெளியிட்டுள்ளார் ஔவையார்; பொருள்வயிற் பிரிந்துவிட்டான் தலைவன்;

தலைவன் பிரிவால் நேர்ந்த தனிமை, தலைவியைப் பெரிதும் வருத்துவதாயிற்று; எப்பொருளிடத்தும் வெறுப்பு; சோறுண்ணும் உணர்வே அற்றுப் போய்விட்டது; அதனால் உடலும் மெலிந்தது; உடல்மெலியவே, உயிரும் மெலிய லாயிற்று; அழகும் இளமையும் அழியத்தொடங்கின; இவ்வாறு அவர் பிரிவால் வருந்தி அழிவதினும், அவரைச் சென்றடைய, அவர் சென்ற கொடிய காட்டுவழியே, அலைந்து திரிவதையே விரும்புகின்றேன் என்கிறாள் தலைவி; அத் தலைவியின் துயர்தோன்ற ஒருபாடலைப்பாட எண்ணிய ஔவையார் உள்ளத்தே, கணவனை இழந்து கலங்கும் வெள்ளிவீதியார் உருவம் காட்சியளிக்கத் தொடங்கிற்று; உடனே, "நெறிபடு கவலை நிரம்பா நீளிடை வெள்ளி வீதியைப்போல நன்றும் செலவு அயர்ந் திசினால் யானே." (அகம் : கசஎ) என அத் தலைவியின் வாயில் வைத்துத், தம்மோடொத்த பெண்பாற் புலவர் ஒருவர்க்கு நேர்ந்த இன்னலையும், அதுகுறித்துத் தம்மனத்திடைத் தோன்றிய இரக்க உணர்வையும் ஒருங்கே வெளியிடுவாராயினர்.

பெரும்புலவர் வரிசையில் வைத்து எண்ணத்தக்க பெருமை வாய்ந்தவர் பரணர்; அவர் ஒருவரைப் பாராட்டினார் எனில், அப் பாராட்டைப் பெற்றவர், உண்மையில் சிறப்புடைப் பெருங்குணங்கள் பலவற்றைப் பெற்றவ ராகவே இருத்தல் வேண்டும்; இவ் வுண்மையை அறிந்து கூறியுள்ளார் ஔவையார்; "புலம் மிக்கவரைப் புலமை தெரிதல் புலம் மிக்கவர்க்கே புலனும்" என்பர் பெரியோர்; பரணர் ஒரு பெரும் புலவர்; ஔவையாரும் ஒரு பெரும் புலவரே; ஆகவேதான், பரணர் பெருமை அறிந்து பாராட்ட முடிந்தது; அதியமானைப் பாடினார் ஔவையார்; ஒரு பாட்டால் அல்ல; பல பாடல்களால்; அவன் பெருமை யுடையோன் என்பதை விளக்க அஃதொன்றே போதும்; ஆனால் அது ஔவையார்க்கு அமைதிதரவில்லை; அதிய மான் புகழை மேலும் மிகுத்துக்கூற விரும்புகிறார்; அதற்கு, அவன்தன் சிறப்புடைக் குணங்கள் பலவற்றை மேலும் தொகுத்துக் கூறுவதற்குப் பதிலாக, " அதிய

மானே! நின்னைப் பரணரும் பாடியுள்ளார்—' இன்றும் பரணன் பாடினன் '—எனின் நின்பெருமைக்கு ஓர் எல்லை கூறல் இயலுமோ" என்று கூறி, அதியமான் புகழ்பாடு வார்போல் பரணர் புகழைப் பாராட்டியுள்ளார்.

ஔவையார் அறிய வாழ்ந்த பெரும் புலவர்களுள் கபிலரும் ஒருவராவர்; கபிலர் முல்லைக்குத் தேர் ஈந்த வள்ளியோனை பாரியின் உயிர்நண்பர்; பாரி, பறம்பு மலைக்குரியோன்; படையாலும், கொடையாலும் புகழ் பெருக வாழும் அவன் வாழ்வு காணப்பொறாத மூவேந்தர், அவனை வென்று அழிக்க எண்ணினர்; பறம்புமலையைச் சூழ, யானையும் தேரும் கொண்டு முற்றுகையிட்டனர்; முற்றுகை நெடுநாள் தொடர்வதாயிற்று; பறமபு இயற்கை வளத்தில் இணையற்றதே எனினும், அது ஒன்றையே நம்பி யிருத்தல் கூடாது, என எண்ணினார் கபிலர்; உடுக்கை இழந்தவன் கைபோல் ஆங்கே இடுக்கண் களைவதன்றோ நட்பு? கிளிகள் பலவற்றைப் பிடித்துப் பழக்கினார்; காலையில் மலையரண் கடந்து வெளியே காவதமபல கடந்து சென்று, ஆங்கே காய்த்துக் கிடக்கும் செந்நெற் கதிர்களைக் கொண்டு மாலையில் மீளப்பணித்தனர்; அவையும் அவ்வாறே செய்தன; அதனால் அரணில் உள்ளார்க்கு வேண்டிய உணவுப்பொருள் கிடைப்பதாயிற்று; மூவேந்தர் முற்றுகை பயனற்றுப் போயிற்று; கபிலர் தம் இத் தொண்டு எவராலும் எளிதில் மறக்கக் கூடியதன்று எனின், செயற்கருஞ்செயல் செய்த பெரியார்களைப் பாராட்டுவதையே பண்பாகக் கொண்ட ஔவையாரால், இந் நிகழ்ச்சி மறக்கக் கூடியதாமோ? ஏற்ற இடத்தில், இவ்வரும் பணியினை எடுத்துக் கூறிக் கபிலரை, நாவார மனமார வாழ்த்துகின்றனர்.

பொருள்வயிற் பிரிந்து சென்றுள்ளான் தலைவன். தனித்துத் துயரட வருந்தும் தலைவிக்கு, அவள் நெஞ்சம், "நிற்பாரல்லர் நம் தலைவர்; நீ மகிழ விரைவில் மீள்வர்" எனக்கூறித் தேற்றுகிறது; அவ்வாறு கூறும் தன்நெஞ்சை நோக்கி அவள் கூறுகிறாள்: "ஏ! மடநெஞ்சே! 'தலைவர்

வந்துவிடுவார்; தலைவர் வந்து விடுவார்' என வாய் ஓவாது கூறுகின்றனையே, நினக்கு அறிவு இருக்கிறதா? பாரியின் பறம்புமலைக் குருவிகள், காலையில் சென்று கதிர்களைக் கொண்டு மாலையில் மீளுகின்றனவே, அப்படி இவரும் காலையில் சென்று மாலையில் மீள்வர் என்று நினைக்கிறாய்? அவ்வாறு நினைக்காதே; அவர் வாரார்" என்று இவ்வாறு உரைக்கும் தலைவியின் கூற்றிலே வைத்துக் கபிலரைப் பாராட்டியுள்ளார் ஔவையார்.

"... .. .....பாரி பறம்பின்
நிரைபறைக் குரீஇயினம், காலைப் போகி,
முடங்குபுறச் செந்நெல் தரீஇயர், ஓராங்கு
இரைதேர் கொட்பின வாகிப் பொழுதுபடப்
படர்கொள் மாலைப் படர்தந் தாங்கு
வருவர்என் றுணர்ந்த மடங்கெழு நெஞ்சம்!"

(அகம்: ௩0௩)

(ரு) அவர் பெருமை

ஔவையார், முடியுடை மூவேந்தர்களாலும், வேறு பல குறுநில மன்னர்களாலும் நன்கு மதிக்கப்பெற்றவர்; அதியமானால், அரசியல் தூதுவராக அனுப்பப்பெறும் அளவு மதிக்கப்பெற்றவர்; ஔவையார் வழிவந்தோர் அனைவராலும், கல்வியறிவும் கடவுள் அன்பும் உடைய ஆண்டால் முதிய அம்மையார் எவர்க்கும் ஔவையார் என்ற தம் பெயரே இட்டு வழங்கும் அளவு பெயர்போன பெருமையுடையார் ஆவர்; மேலும் யாப்பருங்கலவிருத்தி உரையாசிரியர், "பெருஞ்சித்திரனார் செய்யுளும், அவ்வையார் செய்யுளும், பத்தினிச்செய்யுளும் முதலாக உடையன எல்லாம் எப்பாற்படும் எனின், ஆரிடப் போலி என்றும், ஆரிட வாசகம் என்றும் வழங்கப்படும் என்க. இவைகள் எல்லாம், இருடிகள் அல்லா ஏனையோராகி மனத்தது பாடவும், ஆகவும், கெடவும் பாடல்தரும் கபிலர், பரணர், கல்லாடர், மாமூலர், பெருந்தலைச் சாத்தனார் இத்தொடக்கத்தோராலும், பெருஞ்சித்திரனார் தொடக்கத்தோராலும் ஆரிடச் செய்யுட்போல மிகவும் குறையவும் பாடப்படுவன

எனக் கொள்க" எனக் கூறுவதை நோக்கின், அவ்வுரையாசிரியர் காலத்திலேயே ஔவையார் தெய்வத்தன்மை உடையவராகப் பெருமைப்படுத்தப் பட்டுள்ளார் என்பது தெளிவாம்.

(சு) அவர் உள்ளம்

தமிழரசர்கள், தங்கள் நாட்டில் வாழ்வோர் நல்வாழ்வு வாழவேண்டும் என்பதில் எவ்வளவு ஆர்வம் காட்டினார்களோ, அவ்வளவு ஆர்வத்தைப் பகைவர்நாட்டில் வாழ்வோரிடத்திலும் காட்டினாரல்லர்; தங்கள்நாட்டில் வாழ்வோரை மக்களாக எண்ணியதைப்போன்று, பகைவர் நாட்டில் வாழ்வோரையும் எண்ணினாரல்லர்; அந் நாட்டு அரசன்பால் கொள்ளும வெறுப்பு, அவன் நாட்டில் வாழ்வோரும் மக்களே என்ற உணர்வை மறைத்துவிடும் போலும்! அதனால் பகையரசனைப் போரில் வெற்றி கொள்வதோடு அமையாது, அவன் நாட்டை-நெல்லும், கரும்பும் விளைந்து சிறக்கும் நன்செய் வயல்களையும், மாடங்களும், மன்றங்களும் நிறைந்து நாகரிகத்தின் இருப்பிடமாய் விளங்கும் நகரங்களையும் கொண்ட அவன் நாட்டை-அழித்து, அவ் விடங்களில் கழுதை ஏர்பூட்டி உழுது, எள்ளும் கொள்ளும் விதைத்து, அந் நாட்டில் வாழ்வோர்க்கு வற்றாத துன்பம் விளைத்தலையும் வழக்கமாகக் கொண்டார்கள் அக்கால அரசர்கள்; அவ் வழிவுக் காட்சியைப் புலவர்கள் பலமுறை கண்டு, மனம் மிக நொந்து, கண்ணீர்விட்டுக் கலங்கியும் உள்ளார்கள்; அத்தகைய புலவர்களுள் ஔவையாரும் ஒருவர்.

தம்மிடம் அன்புகாட்டி ஆதரிக்கும் அதியமான் நெடுமான் அஞ்சியின் காலத்திலும் அத்தகைய நாடழிவு நடைபெற இருந்தது; அதியமானும், அவன் பகைவரும் ஒருவருக்கொருவர் பணிந்து போகாமையால், போர் தொடங்கும் நிலை உண்டாகிவிட்டது; அதுகாண, ஔவையார் தம் அருள் உள்ளம் அல்லற்படத் தொடங்கிற்று பகைவர் நாட்டையும், அந் நாட்டு வளத்தையும் பார்த்து; மகிழ்ந்தவர் ஔவையார்; அந் நாட்டு வயல்களில் விளைந்து

நிற்கும் செந்நெற் கதிர்கள், நெருங்கி வளர்ந்து முற்றி யிருப்பதால், கனத்துத் தலைதூக்கி நிற்கமாட்டாமல், வயலைச்சூழ உள்ள வரம்புகளில் வளைந்து வீழ்ந்துகிடக் கும் வளம் அவர் கண்முன் காட்சியளிக்கிறது. 'இவ்வளவு வளம்பொருந்திய அந் நாடு, அந்தோ! நாளை முற்றும் அழிந்துபோய்விடுமே!' என்று எண்ணியதும் அவர் இதயம் நடுங்கிற்று; 'அந்நாடு அழியவேண்டியதுதானு? அதைத் தடுப்பார் யாரும் இல்லையா?' என ஏங்குகிருர்; அவர்தம் ஏக்கம்,

" இரஙக விளிவது கொல்லோ! வரம்பணைந்து
இறஙகுகதிர் அலம்வரு கழனிப்
பெரும்புனற் படப்பைஅவர் அகன்தலை நாடே." (புறம்: கூ௮)

என்ற அடிகளில் தோன்றி வெளிப்படல் காண்க.

இவ்வாறு நாடழிவது கண்டும், அதைத் தடுக்கச் செய்வதொன்றும் அறியாது, "அந்தோ!" என்று இரங்கிப் பெருமூச்சுவிட்டு அடங்கும் இயல்பினர் அல்லர் ஒளவை யார். இவ்வழிவைத் தடுத்தே ஆகவேண்டும் என்று எண்ணினர்; அதற்குவழி, அக்கால அரசர்கள் ஒருவரோடு ஒருவர் பகையின்றிக் கலந்துவாழ வழிசெய்வதேயாம் என்பதை யுணர்ந்தார்; பகை வளர்வது, பற்றுமை காரண மாக; பற்றுமை எண்ணம், பொருள்கள் நிலைபேறுடையன; அவற்றைப் பெரும் அளவில் சேர்த்துவைத்தலே செல்வர்க் கழகு என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டது; அடிப்படையில் நிகழும இத் தவற்றினைப் போக்கிடின், எல்லாம் நன்றும் என்று எண்ணினர்; தமிழ் அரசர்களுள் பேரரசர்களாக விளங்கியவர், சேர, சோழ, பாண்டியராகிய மூவேந்தராவர்; இவர்கள் மூவரும் பகையின்றிப் பண் புடன் பழகி வாழத்தொடங்குவரேல், தமிழ்நாட்டில் போரே இராது. மூவேந்தர்கள் தங்களிடையே ஒற்றுமை யின்றிப பகைத்து வாழ்வதாலேயே குறுநிலமன்னர் பலர் தோன்றவும், அவர்களும போரா மேறகொள்ளவும் செய் கின்றனர்; ஆகவே, அப் பேரரசர்களிடையே தோன்றும்

பகையை முதற்கண் போக்கவேண்டும் என்று முடிவு செய்கிறார்; ஆகவே, அவர்கள் மனத்தே நிலையாமை எண்ணத்தைப் புகுத்தி, அதன்வழியே பொருள்கள் மேற்றோன்றும் ஆசையையும், அவ்வாசை காரணமாக எழும் பற்றுமை உணர்வையும், அப் பற்றுமை காரணமாகத் தோன்றும் பகையுணர்ச்சியையும், அப் பகை காரணமாக விளையும் நாட்டழிவினையும் தடுக்க முயன்றுள்ளார் ஔவையார்.

ஔவையார்காலத்தே வாழ்ந்த மூவேந்தர்களாகிய, சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருசமயம், பகையின்றிக் கலந்து ஓரிடத்தே இருந்தனர்; அவ்வொற்றுமை ஔவையார் உள்ளத்தே உவகைப் பெருக்கையும், இவ்வொற்றுமை இன்றேபோல் என்றும் நிலைபெற்று வாழாதா என்ற ஆசையையும் எழச் செய்தன. பகையின்றிக் கூடியிருக்கும் அக்காலமே, அவர்க்கு அறிவுரைகூற ஏற்ற காலமாம் என எண்ணினார்.

அவரை அணுகி, "நான் அறிவிற் சிறந்தவள் என்பதைத் தாங்கள் மூவரும் உணருகிறீர்கள்; ஆகவே, நான் உண்மை என அறிந்து கூறுவனவற்றை ஏற்றுக்கொள்வீர்களே அன்றித் தள்ளமாட்டீர்களே" என அவர் ஒப்புதல் பெற்று, "'நான் நூல்பல கற்றும், நாள்பல வாழ்ந்தும் அறிந்த உண்மை இது" 'யான் அறி அளவையோ இதுவே' என்று,

"நாகத் தன்ன பாகார் மண்டிலம்
தமவே ஆயினும், தம்மொடு செல்லா
வேற்றோர் ஆயினும் நோற்றோர்க்கு ஒழியும்."
... .. .. .. . .. .. ..... ...............
வாழச் செய்த நல்வினை யல்லது
ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை." (புறம்: ௩௬௭)

என்ற நிலையாமை நினைவுகள் அவர் நெஞ்சிடைத் தோன்றுமாறு செய்தார்.

இவ்வாறு மூவேந்தர் மனத்தே நிலையாமையுணர்வு தோன்றச்செய்து, அதன் வழியே நாடு அழிதல் இன்றி, அமைதிவாழ்வு காணமுயன்ற ஔவையார்தம் அருள் உள்ளம் அறிந்து பாராட்டத் தக்கதாம்.

### (எ) அறிவுரை கூறல்

நிலத்தியல்பால் நீர் திரியும்; கலந்தீமையால் நன்பால் திரியும் என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பெறும் ஒரு பொது இயல்; இடத்தின் தன்மைக்கு ஏற்ப, இடத்து நிகழ்பொருளின் தன்மை மாறும் என்பது உலகியல்; நீரின் தன்மையைக் காண விரும்புவோன், அது நிற்கும் நிலத்தின் தன்மையைக் கண்டால் போதும்; நிலம் நன்றாயின் நீர் நன்றாம்; நிலம் தீதாயின் நீரும் தீதாம்; பாலின் தன்மையை ஆராய்வோன், அப் பால் வைக்கப்பட்டிருக்கும் கலத்தை ஆராய்தல்வேண்டும்; கலம் நன்றாயின் பால் நன்றாம்; கலம் தீதாயின், பாலும் தீதாம்; நிலத்தைச் சென்றடைவதற்குமுன் நீர் நன்றாயினும் நிலத்தின் தீமையால் தானும் தீதாம; கலத்தில் வைக்கப்படுவதற்குமுன், பால் நன்றாயினும், கலத்தின் தீமையால் பாலும் தீதாம். இவ்வுண்மையை மறுக்கிறார் ஔவையார்.

இடம், இடத்துநிகழ்பொருள் ஆகிய இரண்டனுள், இடத்துநிகழ்பொருளின் ஆற்றலினும், இடத்தின் ஆற்றல் மிகுதியும் வலிவுடைத்து என்பது இதனால் பெறப்படும். அவ்வாறின்றி, நிலத்தின் ஆற்றல், நிலத்தில் வாழ்வோர் ஆற்றலினும் குறையுடையதாயின், வாழ்வோர் வழியே நிலம் செல்லும்; நிலத்தின்வழி வாழ்வோர் செல்லார்; வாழ்வோர், வாழும் இடம ஆகிய இருபொருளினும், வாழ்வோர், அறிவும், ஆண்மையுமுடையராயின், வாழும் இடம், அவர்க்கு ஏற்ப மாறும்; அவ்வாறின்றி வாழ்வோர், அறிவும் ஆண்மையுமற்றவராயின், அவர் தாம் வாழும் நிலத்தைத் தமக்கு ஏற்றவாறு மாற்ற வகையற்று வாழும் நிலத்திற்கேற்பவே, தம்மை மாற்றிக்கொள்வர். தம் இயல் பிற்கேற்ப, தம்மிடை வாழ்வோரை மாற்றும் ஆற்றல்

வாய்ந்த இடங்களை, அதன் ஆற்றலுக்குட்பட்டுத் தாம் மாறிவிடாமல், தம்வழி அவ்விடங்களை மாற்றுவதே ஆண்மையும், அறிவும் உடையோர் செயலாம்.

"இசையாது எனினும் இயற்றி ஓராற்றால்
அசையாது நிற்பதாம் ஆண்மை" (நாலடியார் : கக௪)

"சென்ற விடத்தால் செலவிடாது தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு." (திருக்குறள் : ௪உஉ)

வாழும் மக்கள் அனைவரும் அத்தகைய அறிவும், ஆண்மையும் உடையராயின், அப்போது அவர் வாழும் நிலத்தின் இயல்புபற்றிக் கவலை கொள்ளவேண்டியதில்லை; இரும்பு பொன் ஆகிய இரண்டனுள், இரும்பு, இடத்திற் கேற்ப மாறும் இயல்புடையது; ஈரம்பட்ட இடமாயின் துருப்பிடிக்கும் இயல்பினது; ஆகவே, அதற்கு ஏற்ற இடம் எது எனக் காணவேண்டுவது இன்றியமையாததே; பொன், எவ்விடத்தில் இடப்படினும், இயல்பிற் குன்றுவதில்லை; ஆதலின் அதற்கு இடத்தின் இயல்புபற்றிக் கவலைகொள்ள வேண்டியதின்று; ஆகவே, வாழ்வோர் நல்லவராயின், அவர் வாழும்இடம் அவர் வாழ்வதற்குமுன் எத்துணைத் தீயதாயினும் நன்றாகிவிடும்; அவ்வாறின்றி வாழ்வோர் தீயராயின், அவர் வாழும்இடம், அதற்கு முன்னர் எத்துணைச் சிறப்புடையதாயினும் தீதாகிவிடும்.

"இல்லதுஎன் இல்லவள் மாண்பானால்? உள்ளதுஎன்
இல்லவள் மாணாக் கடை?" (திருக்குறள் : ருங)

என வள்ளுவரும் வினவுவது காண்க.

ஆகவே, 'நிலம், காடும் மலையும் காட்டாறும் சேர்ந்து பாழ்பட்ட நிலமாக இருப்பினும், அதுபற்றிக் கவலை கொள்ள வேண்டுவதின்று; அந்நிலத்தில் வாழச்சென்றோர், அறிவும் முயற்சியும் ஆண்மையும் உடைய நல்லோராயின், அந்நிலம, நன்னிலமாய் மாறி நின்று மாண்புறும்; என்ற இக்கருத்தை உட்கொண்டே ஔவையார், நிலத்தைப் பற்றிக் கூறுவார்போல் "நிலமே! நீ, நாகரிகத்தின் வாழ்விடம் எனக் கருதப்படும் நாடாகவாவது இரு; அன்றிக்,

கொடுவிலங்கு வாழும் காடாகவாவது இரு; அன்றி, நீரோடையும், நெருப்பாறும் பிளந்த பெரும் பள்ளமாகவாவது இரு; அன்றிப் பனியும் பாறையும் சேர்ந்த மலை நாடாகவாவது இரு; அதைப்பற்றிக் கவலைக்கொள்வார் யாரும் இல்லை; உன் தோற்றம் ஒன்றையே கொண்டு, உன் இயல்பை மதிப்பிடும அறிவற்றோர் அல்லர் நாங்கள்; நின்கண் வாழும் மக்கள், நல்லாண்மை உடைய நல்லோராயின், நீயும நல்லை; அவ்வாறின்றி, அவர் தீயோராயின்: நீயும் தீயை, என்றே கொள்வோம்.''

"நாடா கொன்றோ; காடா கொன்றோ;
அவலா கொன்றோ; மிசையா கொன்றோ;
எவவழி நல்லவர் ஆடவர்,
அவவழி நல்லை; வாழிய! நிலனே." (புறம்: கஅஎ)

என்று கூறுவார்போல், உலக மக்களுக்கு ஓர் அறிவுரை கூறுகிறார்: "உலக மக்களே! உலகம் உங்கள் கையில்; அதை நன்மை நிறைந்த நல்லுலகமாக ஆக்குவதோ, அன்றி இன்னல்களுக்கிருப்பிடமான இருட்டுலகமாக ஆக்குவதோ எல்லாம் உங்களால்தான் முடியும்; உலகத்தால் ஒன்றும் இயலாது; அது அசைவற்றது; அறிவற்றது; ஆகவே, 'அந்த உலகம் நல்லுலகம்; ஆகவே, அங்கு மக்கள் நன்மையடைகிறார்கள்; இந்த உலகம் இழிவுடையது; ஆகவே, மக்கள் இங்கு இழிநிலை அடைகிறார்கள்' என்று வேண்டாதன கூறி வீணராகி வாடாதீர்கள்; நல்லோர் வாழ்வால் இன்று நல்லுலகமாக நிற்பது, நாளை அந் நல்லோர் அற்றுத் தீயோர் வாழ்வராயின் தீயுலகமாக மாறும்; அதைப்போன்றே, இன்று தீயோர் வாழ்வால் தீயுலகமாக இருப்பது, நாளை, அத் தீயோர் அற்று நல்லோர் வாழ்வராயின் நல்லுலகமாக மாறும்; ஆகவே நிலத்திற்குத் தனக்கென நன்மையோ, தீமையோ இல்லை; எல்லாம் உங்கள் கையில்."

"நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்." (நாலடியார்: உ௪அ)

என்று பிறரும் கூறுவதைப்போல், எல்லாம் உங்கள் கையில் இருக்கும்; இடத்தால் ஒன்றும் இல்லை என்று ஔவையார் கூறிய அறிவுரைகள், அனைவரும் ஏற்றுப் போற்ற வேண்டியதொன்றும்.

## (9) அவர் பாடிய அகத்துறைப் பாடல்கள்:

அகமே புறம்; புறநிகழ்ச்சியெல்லாம், அகநிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டே நிற்கும். ஆகவே, புறவாழ்வு திருந்தியதாக இருத்தல்வேண்டும் என விரும்புவோர், தம் அகவாழ்வைத் திருந்திய ஒன்றாக ஆக்கிக் கொள்ளுதல்வேண்டும். அகவாழ்வு, மனைவி மக்களோடு வாழும் இல்வாழ்க்கை; புறவாழ்வு, ஊராரோடும் உலகத்தாரோடும் உறவாடும் உலக வாழ்வு; வாழ்வில் அமைதி வேண்டின், இவ்விரு வாழ்விலும் அமைதி காணல் வேண்டும். யாண்டு பலவாகியும் நரையின்றியிருப்பது யாங்ஙனம் என்று கேட்டவர்க்கு, "என் மனைவியும், மக்களும் நிரம்பிய அறிவினர்" - 'மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்' - எனத் தன் அகவாழ்வில் அமைதி காண்பதற்கான காரணத்தை முதற்கண்கூறி, "என் இளையரும் என் சொற்படி நடப்பர்; வேந்தனும் அல்லவை செய்யான்; என் ஊரில் சான்றோர் பலர் வாழ்கின்றனர்."

"யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும் அதன்றலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச
சான்றோர் பலாயான் வாழும் ஊரே." (புறம்: ௧௯௧)

எனத் தன் புறவாழ்வில் அமைதி காண்பதற்கான காரணத்தைப் பின்னர்க் கூறினார் புலவர் ஒருவர்.

புறவாழ்வினும், அகவாழ்வே திருந்திய வாழ்விற்கு வழிகாட்டும் என்பதைக் கண்ட புலவர்கள், தமிழர் தம் அகவாழ்வு திருந்தவேண்டும் என்பதிலே மிக்க கவலை கொள்வாராயினர்; அதற்கு அவர்கள் கையாண்ட முறைதான் அகத்திணைப் பாடல்கள்; ஆடவரிற் சிறந்தான் ஒரு

வனும், பெண்டிரிற் சிறந்தாள் ஒருத்தியும், தம்மோடு ஒத்த உறவினர் சிலரோடுகூடிச் சிறந்ததோர் வாழ்வு நடாத்தியதாகக் கற்பனை செய்துகொண்டு சிறந்த வாழ்வு எனப் புலவர்கள் சிந்தனையில் தோன்றிய வாழ்வுமுறை, அவர்கள் வாழ்க்கையில் நிகழ்ந்ததாகக்கூறி, அச் சிறந்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றையும், ஒவ்வொரு பாடலுள் அமைத்துப்பாடி, அப்படிப்பட்ட வாழ்வுமுறை, எக்கால மக்கள்வாழ்விலும் அமையவேண்டும் என விரும்பினர்; அவ்வாறு அவர்கள் பாடிய பாடல்களே, அகத்துறை தழுவிய பாடல்களாம். ஆகவே, அப் பாடல்கள், அப் புலவர்கள் விரும்பிய வாழ்வுநெறியினை வகுத்துக் கூறுவனவாம்; ஆதலின், ஔவையார் பாடிய அகத்துறைப்பாடல்களை நோக்கின், அவர் விரும்பிய அகவாழ்வுநெறி நமக்குப் புலனும்; ஆகவே, அப் பாடல்களுள் சிலவற்றைக் கண்டு, அவர் காட்டும் அகவாழ்வுநெறியினை மேற்கொள்வோமாக.

ஆடவரிற் சிறந்தான் ஒருவனும், பெண்டிரிற் சிறந்தாள் ஒருத்தியும், கண்டு, காதல்கொண்டு கலந்து உறவாடி வாழ்கின்றனர்; அவர் தம் இன்பவிளையாட்டிற்கு ஒருநாள் இடையூறு ஒன்று உற்றது; அவன் வருதற்கு முன்னரே பெருமழை பெய்யத் தொடங்கிவிட்டது; அவன் அங்கே; இவள் இங்கே; துணையின்றித் தனித்திருப்பதை அவளால் தாங்க இயலவில்லை; துணைவந்து சேர்வதைத் தடுக்கிறது அப் பெருமழை; அவள், தன்மென்மை, தனித்துறைவதால் உண்டாகும் துயரின் கொடுமை, அத் துன்பத்திற்குக் காரணமான மழையின் வன்மை ஆகியவற்றை உணருகிருள்; உடனே மழையை நோக்கிக் கூறுகிருள்: "உண்மை வீரர், தன்னோடு ஒத்த வீரரோடே போர் புரிவர்; ஆனல், நீயோ, என்னேடு போர்தொடுக்கின்றனை; நான் ஒரு பெண்; தன்னைத்தான் காத்துக்கொள்ளும் வலியற்றவள்; ஆதலின் பிறர்துணைபெற்றே வாழவேண்டியவள்; இப்போது நான், காக்கும் துணையற்ற நிலையில்; துணைவர் எங்கோ இருக்கிருர்; இவ்வளவு துயர்நிலையில் இருக்கும் என்னை வருத்துகின்ருய் நீ; நீயோ, பெரும்புகழ்படைத்த

இமயமலையையும் இடம்பெயர அசைக்கும் ஆற்றல் வாய்ந்தோய்; அத்தகைய பேராற்றல் வாய்ந்த நீ, தனித்து வந்தாவது வருத்துகின்றனையா? உயர்ந்த மலையில் வாழும் பாம்பும் கேட்டாலே இறந்துபோகும் பேரிடியொலி ஒருபால், அவ்விடியோசையை விரைந்து இழுத்துக்கொண்டு எங்கும் சுழன்றடிக்கும் சூறுவளி ஒருபால், ஆக இவற்றின் துணைகொண்டுவந்து தாக்குகின்றனை; இவ்வளவு பெரும்படை சேர்த்துக்கொண்டு, ஆதரவற்றுத் தனித்துத் துயருறும் என்னை வருத்துகின்றனை; இயல்பாக நிறைந்த இரக்கத்தை உடையாய் நீ என்று கூறுவரே! அவ்விரக்கத்தை இப்போது நீ, இழந்து விட்டாயோ?"

"நெடும்வரை மருங்கின் பாம்புபட இடிக்கும்,
கடுவிசை உருமின், கழறுகுரல் அளைஇ,
காலொடு வந்த கமஞ்சூல் மாமழை!
ஆர்அளி இலையோ? நீயே, பேரிசை
இமயமும் துளக்கும் பண்பினை;
துணைஇலர்; அளியர்; பெண்டிர்; இஃதுஎவனே?"

என்று தன் உள்ளத்துயரை ஒருவாறு உணர்த்தினள்; இவ்வாறு மழையும் பிறவும் வருத்துவது, நாம் தனித்துறைதலால் அன்றே? தலைவரின் நீங்கித் தனித்து வாழாது கூடிவாழத் தொடங்கிவிடின், இவை நம்மைத் துயர் உறுத்தா; ஆதலின், அவரோடு உடனுறை வாழ்வை வேண்டுகிறேன்," என்று துணிகிறாள்; துணிந்த அவள், தலைவன் களவுவாழ்க்கையையே பெரிதும் விரும்பும் இயல்பினனாதலின், அதை மறுத்தல் வேண்டும் என்று எண்ணி, களவொழுக்கைக் கைவிட்டுக் கடிமணம் செய்து கொள்ள விரும்பி, களவு வாழ்க்கையில் அவனுக்கு அரியள் ஆயினள் இதனால் அவனுள்ளம் வாடிற்று.

அவள் தனக்குக் கிடைத்தற்கரியள் என்பதை அவன் உணர்ந்தானெனினும், அவன் நெஞ்சம், அவள்பால் கொண்ட ஆசையை மறக்க மறுக்கிறது; மறுக்கும் தன் நெஞ்சை நோக்கி அவன் கூறுகிறான்: "அவளோ கிடைத்தற்கரியளாய்க் காணுகிறாள்; அவள், உன் ஆசையறிந்து

நடந்துகொள்பவளாய்த் தோன்றவில்லை; ஆனால், அவள் பால் நீ கொள்ளும் ஆசையோ அளவிடற்கரியது; கிடைத் தற்கரிய பொருள் ஒன்றின்மீது அளவிடற்கரிய ஆசை கொள்வதால் யாது நேரும்? அதைத் தாங்கும் ஆற்றல் நினக்கு உண்டா? இறுகிய கல்நெஞ்சமன்று நீ; இளகிய ஈர நெஞ்சு நீ, அவ்வாசையும நிறைவேறாது; அதை மற வாது போயின், நீயும் இடிந்து போவாய்; ஆகவே, அவள் பால் கொண்ட அந்நினைவை அறவே மறந்துவிடு.'' இவ் வாறு அறிவுரை கூறும் அவன், தாங்கும் ஆற்றல் அற்ற தன் நெஞ்சம், அரிய பொருள்மீது ஆசை கொள்வதைப் பசுமட்கலத்தில் பெயல்நீர ஏற்கும் மதியிலார் செய லோடு ஒப்பிட்டு, "நெஞ்சே! பச்சை மண்ணால் செய்யப் பெற்று, ஈரம்புலராத கலத்தில பெய்யும் மழைநீரைப் பிடித்துவைக்க முயல்வார யாரையேனும் கண்டதுண்டா? பிடித்துவைப்பராயின், அந்நீர், அதன்கண் நில்லாது ஓடி விடுதலோடு அக் கலத்தையும அழித்துவிடும என்பதை அறிவர்; ஆகவே, அறிவுடையோர் யாரும் அவ்வாறு செய் யார; நீ அத்தகைய செயலைச் செய்யத் துணிகிறாய்; என்னே நின் பேதைமை!'' என அறிவுரை கூறுவதாக ஔவையார் கூறும் திறம கண்டு மகிழ்தற்குரியதாம.

"பெயல் நீர்க்கு ஏற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி,
அரிது அவாவுற்றனை நெஞ்சே!"

இவ்வாறு உள்ளம வாடிய அவனும, இறுதியில அவ ளோடு உடனுறைவாழ்வை விரும்பினான், விரும்பினான் ஆயினும், அவளைக் கொடிய காட்டுவழியே அழைத்துச் செல்ல அஞ்சினான்; கோடையின் கொடுமையை அவள ஆற்றாள் என எண்ணிக் கொண்டுடன்சேறற்குத் தயங்கி னான்; தயங்கிய அவனுள்ளம் அறிந்தாள், தலைவியின் உயிர்த்தோழி; அவள் அறிவே உருவானவள்; அவள் தலைவனை அணுகி, "அன்புடையீர்! விரைவில் வாடும் மென்மை உடையதே குவளை மலர, என்றாலும, அது வளர்ந்திருக்கும் பாத்திகளில நீர் நிறையக் கட்டப்பெற்

றிருப்பின், எதையும் வறட்டும், கோடைகாலத்து வீசும் வறண்ட கொடுங் காற்றாகிய மேல்காற்றடிக்கினும் வாடாது வளம்பெறும்; அதைப்போல், தலைவி இயல்பால் மிகவும் மெல்லியளே என்றாலும், அவள் நின்னை நீங்கப் பெறாமல், நின்னோடு வருவாளாயின், அவளுக்கு உன் ஆரருள் இருக்கின்ற காரணத்தால், யானையும் வருந்தும் கொடுமையுடையதே எனினும், அக் கானம் கண்டு கலங்காள்; அக்கானமும் அவளுக்கு இனிக்கும்; ஆகவே, அவள் மென்மைகண்டு கைவிடாது, கொண்டுசென்று மணப்பீராக!'' எனக் கூறினாள். அவனும், அவளைக் கொண்டுசென்று மணந்தனன்.

"நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை,
கோடை ஒற்றினும், வாடா தாகும்;
யானை கைமடித்து உயவும்
கானமும் இனியவாம்; நும்மொடு வரினே."

அண்மையில் மணமகொண்ட மணமக்கள் அவர்கள்; இளமையின் இயல்பையும், இளமைக்கால இன்பத்தின் அருமையையும் அறிந்தவர், இன்பமும், இளமையும் இருந்து வாழாது, கழியும் இயல்பின; இளமைக் கால இன்பத்தினும், சிறந்த இன்பம் வேறு இல்லை; இளமை கழிந்தவழி, வாழ்வு அவர்க்கு இன்பம் தருவதும் இல்லையென்ப; இவ் வுண்மைகளை அறிந்தவர்கள்; அவர்கள், ஒருவர்பால் ஒருவர் கொண்டிருக்கும் அன்போ, வான்போல் வளர்ந்துள்ளது, ஆகவே, ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்து வாழ்வதோ இயலாது; அதை அவர்களும் விரும்பார; ஆகவே, பிரியாது வாழவே விரும்புகின்றனர்; எனினும், அவர்கள் உலகியலோடு மாறுபட வாழும் மாண்பிலர் அன்று; உலகியலோ, வினைமேற் சென்ற மனத்தினராய், வேண்டிய பொருள் சேர்ப்பதையே ஆடவர், தம பண்பெனக் கொள்ளுதல் வேண்டும் என்று அறிவிக்கிறது; இதையும் அறிந்தவர்கள் அவர்கள்; ஆதலின், அவன், ஒருவாறு தேறி, பொருள் வயிற்பிரிய எண்ணுகிறான்; பிரிந்தான்; பொருள் சேர்த்

தான்; மீண்டும்வந்து சேர்ந்தான்; வந்த அவனை நோக்கி, அவளும் அவள் தோழியும் வினவுகிறார்கள், "சென்ற விடத்து எங்களைப்பற்றிய எண்ணம், எப்போதாயினும் வந்ததுண்டோ?" என்று. அதற்கு அவன், "எப்பொழுதும் உங்கள் நினைவேதான்; உங்களை நினைக்குந் தோறும், நினைக்குந்தோறும் செயல்படுமனத்தராய்ச் செய் பொருட்கு அகல்வதே ஆடவர் பண்பு என அறிவுரை கூறிப், பிரிதற்கரியராகிய உங்களைப் பிரியுமாறு செய்த இவ்வுலகியலை நொந்துநொந்து என் அறிவும் மயங்கினேன்," என்று விடைகூறி மகிழ்வித்தான் என்று, அவ் விளங்காதலர்களின் வரலாறு கூறுவார்போல், மனைவியர் பால் மாறா அன்பும் கொள்ளுதல்வேண்டும்; அதே நிலையில் அவரோடு இடைவிடாது பிரிதலின்றி வாழ்தல் வேண்டும் என்று எண்ணாமல், உலகியலோடு ஒட்டிப் பிரிந்துசென்று, பொருள் தேடும் முயற்சியினையும் மேற் கொள்ளுதல் வேண்டும் என்பதை அறிவுறுத்தி,

> "மனைவிழைவார், மாண்பயன் எய்தார்; வினைவிழைவார
> வேண்டாப் பொருளும் அது." (திருக : கூ0க)

என்ற திருக்குறட்கு இலக்கியம் காட்டிய ஔவையார் அறிவுரை அகத்தேற்று அறிவுகொள்ளற் குரியதாம்.

> "உள்ளினென் அல்லனோ யானே? உள்ளி,
> நினைத்தனென் அல்லெனோ பெரிதே? நினைத்து
> மருண்டனென் அல்லெனோ உலகத்துப் பண்பே?"

தலைவனைப் பிரிந்து தனித்திருந்தகாலை, தலைவியின் உள்ள நிலையின் உயர்வையும், உறுதிப்பாட்டையும் விளக்க ஔவையார் கூறுவனவும் சிலவுள.

பொருள் தேடும் முயற்சியை முன்னிட்டுப் பிரிந்த தலைவன், தலைவியிடம் கூறிக்கொள்ளாமலே பிரிந்து போய் விட்டான் அதுகண்டு வருந்துகிறாள் தலைவி: அவளுக்கு ஆறுதல் கூற வருகிறாள் அவள்தோழி; வந்தவள், "கூறாது பிரிந்து சென்றவர், உண்மையில் அன்புடையார் அன்று," என அவனமீது பழிகூறத் தொடங்கி

ளுள், தன்முன், தலைவனைப்பழிப்பது காணப்பொறுள் தலைவி; உடனே, அவள் தன் தோழியை நோக்கி, "தோழி! அவர் அன்புடையர். ஆகவே, பிரியார் என்று தான் நானும் எண்ணியிருந்தேன்; ஆனால் உலகியல் அவரைப் பிரியச் செய்தது; அவர் பிரியுங்கால் அன்புடையராயின், கூறிப் பிரிந்திருக்கலாகாதா? என வினவுகிறாய்; அந்த உண்மையை நீ அறியாய்; தனித்திருக்க நான் ஆற்றேன்; அவர்பால் அத்துணை நிறையன்புடையேன்; இதை அவர் அறிவார்; ஆகவே, அவர் பிரிவுணர்த்தி யிருப்பராயின், நான் அதற்கு உடன்படேன் என்பதையும் அவர் அறிவார்; ஆகவேதான், கூறாது பிரிந்தார்; அன்பின்மையால் அன்று; அன்போடு கலந்த கடமையுணர்ச்சியால்;" என்று கூறித் தலைவனைப் புகழ்ந்தாள்.

"செல்வார் அல்லர் என்றுயான் இகழ்ந்தனனே;
ஒல்வாள் அல்லள் என்றுஅவர் இகழ்ந்தனரே."

பிரிந்துசென்ற தலைவன், விரைவில் வந்திலன்; அவன் கூறிச்சென்ற கார்காலமும் வந்துவிட்டது; எனினும், அவன் பிரிவுக்கு மனம கலஙகாது ஆற்றியிருக்கிறாள் தலைவி; அது, கற்புடை மகளிர்க்குக் கடன் எனக் கொண்டு ஆற்றியிருக்கும அவளைக் கண்டு, "அவரைப் பிரிநது, எவவாறு ஆற்றியுள்ளாய்?" என வினவுகிறாள் அவள்தோழி; அதற்குத் தலைவி கூறுகிறாள்: "தோழி! கார்காலம் தொடஙகியவுடனே, நம் தலைவர் சென்ற நாட்டிலும், கொன்றை மலரும்; அக் கொன்றைமலரைக் கண்டவுடனே, நம உடலை மறைத்துக் கொடுமை செய்யும் அவர் பிரிவால் உண்டாம் பசலைநோய், அவர்க்கு நினைவு வரும்; மேலும், தாம் செல்லும் இடந்தோறும, விலங்குகள் எல்லாம், பெண்ணொடு ஆண் கலந்து உறவாடும் காட்சியைக் காண்பரே அன்றி, பெண்ணைவிட்டுப் பிரிந்து தனித்து வாழும் ஆண்விலங்கினைக் காணார்; பெண்ணொடு ஆண் கலந்து வாழ்வதை விலங்குகளும் விரும்பும் கார் காலத்தில், அறிவுடை ஆண்மகனாகிய அவர், என்னைப் பிரிந்துறைய நினையார்; பிரிநது தனித்துவாழ அவரா

னும் இயலாது; விரைந்து மீள்வர்; இந்த உறுதியுள்ளமே என்னை ஆற்றியிருக்கச் செய்கிறது," எனத் தலைவன்பால் தனக்குள்ள, தளரா நம்பிக்கையை உணர்த்துகிறாள்.

"சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ,
நம்போல் பசக்கும் காலைத், தம்போல்
சிறுதலைப் பிணையின் தீர்ந்த, நெறிகோட்டு
இரலை மானையும், காணபாகொல்? நமரே."

"கார்காலம் தொடங்குவதற்கு முன்னரே வருவேன்" என்று தலைவன் சூளுரைத்துச் சென்றான்; கார்காலம் தொடங்கிவிட்டது; ஆனால், அவன் வந்திலன்; தலைவி, தன் உறுதி குலைந்து கலங்கத் தொடங்கினாள்; அந்நிலைக் கண், அவள் தோழி, "இது கார்கால மழையன்று; காலமல்லாக் காலத்துமழை; கார்காலம் இன்னும் தொடங்கப் பெறவில்லை," என்று பொய் கூறி அவளைத் தேற்ற முயலுகிறாள்; அது கண்ட தலைவி, "தோழி! மழைநீர் தாங்கி வரும் கரிய மேகங்கள் இடிக்கவும் தொடங்கிவிட்டன; மலையில் பெருமழை பெய்தும் விட்டது; வாடி வீழ்ந்து கிடக்கும் மலர்களை அடித்துக் கொண்டு அருவிகளும் பாய்ந்தோடத் தொடங்கிவிட்டன, அதோ காண்; ஆகவே, இது காலமல்லாக் காலத்து மழையன்று, கார்கால மழையேயாம்," என்று கூறினாள். உடனே, தோழி, "கார்காலமாயின், தலைவர் வந்திருப்பாரே; வந்திலரே; ஒரு வேளை வருவேன் என்று சூளுரைத்துச் சென்றது பொய்யோ?" எனக் கேட்டாள். அதற்குத் தலைவி, "இல்லை; இல்லை; வருவேன் என்று சூளுரைத்துச் சென்றார் என்பதும் பொய்யன்று; சூளுரைத்துச் சென்ற அவர் பொய்த்தலும் செய்யார்; அவர் தவறார்; பின், அவர் வந்திலரே எனின, 'தலைவி நிலையே வினையிடத்துரையார்' என்பர் பெரியோர்; எடுத்த காரியம் இனிது முடியும்வரை, தலைவர் பிறிதொன்றன் மீது கருத்துச் செலுத்துபவர் அல்லர்; அவ்வாறு செலுத்தலும் சரியன்று; ஆகவே, வேலையின் மிகுதியால், அவர் நம்மை மறந்திருக்கிறார்; இதுதான் உண்மை; மறவாதிருப்பின், சூளுரைத்துச்

சென்றவர் வாராதிரார் ; வந்திலர் ; அவர் சூளும் பொய்க்காது ; ஆகவே, அவர் நம்மை மறந்திருப்பவரே," என்று கூறி, தலைவன் தவறியவிடத்தும், தவறினன் என அவன் பால் குறை காணாது, அவன் தவற்றிற்கு ஒரு காரணம் கண்டு, தலைவன் தவறிலன் ; தவறான் எனக் கொள்ளும் அத் தலைவியின் உள்ளமே உள்ளம் !

"பெய்த குன்றத்துப் பூநாறு தணகலுழ்
மீமிசைத் தாஅய வீஇசுமந்து வந்து
இழிதரும் புனலும் ; வாரார் ; தோழி !
மறந்தோர மன்ற ; மறவாம் நாமே ;
கால மாரி ; மாலை மாமழை
இன்னிசை உருமின முரலும் ;
முன்வரல் ஏமம் செய்து அகன்றோரே."

(10) ஔவையார் எடுத்தாண்ட உவமைகள் :

பழந் தமிழ்ப் புலவர்கள் மேற்கொண்ட செய்யுள் அணிகளுள், உவமவணியே சிறப்புடையது ; அவர்கள் கையாண்ட அணி, உவமவணி ஒன்றே எனக் கூறினும் தவறில்லை ; பின்னர்த் தோன்றிய அணிகள் எல்லாவற்றையும், ஒருவாறு உவமவணியின் பகுதியாகவே கொள்வர் புலவர்கள் ; அதனாலேயே தொல்காப்பியர் உவமவணி ஒன்றிற்கு மட்டுமே இலக்கணம் கூறுவாராயினர்; இதனால், புலவர்கள் பிற அணிகளை அறியாதவர் எனபதல்ல பொருள் ; தாம சொல்ல விரும்பும பொருள்களைத், தெளிவாகவும் அழகாகவும் சொல்ல உவமவணி ஒன்றே போதும் எனக் கண்டனர். ஆகவே, அவர்கள் பிற அணி பற்றி எண்ணினர் அல்லர்.

ஆங்கிலம் கற்ற நண்பர்கள், ஆங்கிலப் பெரும புலவராய கோல்ட்ஸ்மித் போன்றார், அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுத்தாண்டிருக்கும் உவமைகள் சிலவற்றை வைத்துக் கொண்டே, ஆங்கிலப் புலவர் தம் புலமையை, அம மொழிக்கண் ஆளப்படும் உவமைகளின் சிறப்பை வானளாவப் புகழ்வதைக் காண்கிறோம் ; அவர்கள், பழந்

தமிழ்ச செய்யுட்கண் செறிந்து கிடக்கும் உவமைகளின் எண்ணிக்கையினையும், அவற்றின் உயர்வையும் உணர நேரின் வியப்பால் உணர்வற்றுப் போவர் உன்பது உறுதி. பழந தமிழ்ப் பாடல்களுள் பொதிந்து கிடக்கும் அவ் வுவமைகளுள், ஔவையார் எடுத்தாண்ட உவமைகள் சிலவற்றை ஈண்டுத் தருகின்றேன்.

> "பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
> நீலமணி மிடற்று ஒருவன் போல." (புறம். ௯௧)

ஔவையார் ஆண்ட உவமைகளில் இஃதொன்று; அதிய மான் அரிதின் முயன்று பெற்றான் நெல்லிக்கனி ஒன்றை; அக் கனியுண்டார் நோயின்றி நெடிதுநாள் வாழ்வர் என்ப; அதியமான், அதைத் தான் உண்டு நெடிதுநாள் வாழ் வதினும், ஔவையார் உண்டு நெடிதுநாள் வாழ்வராயின் அதனால் உலகிற்குப் பெரும் பயனும் என உணர்ந்தான்; அக் கனியை ஔவையார்க்குக் கொடுக்கத் துணிந்த அவன், அக் கனியின் இயல்பறியின், ஔவையார் அதைத் தாம் உண்ணாது இரவலர் புரவலனாய அவன் உண்ணவே வற்புறுத்துவா என அறிந்தானாகவே, அக் கனியின் இயல்பை அவர்க்கு முன்னர் அறிவியாது, அவர் உண்ட பின்னர் உணர்த்துவானாயினன்; அதியமானின் இச்செயல், ஔவையார் உள்ளத்தே, அளவிலா மகிழ்வெழச் செய்தது. எவரும் முதற்கண் தாம் வாழவே விரும்புவர்; தாம் வாழ்ந்த பின்னரே, பிறர் நல்வாழ்வு குறித்துக் கவலை கொள்வர்; இதுவே, உலகியல்; ஆனால், அதியமான் செயல் உலகியற் போக்கையே மாற்றிவிட்டது கண்டார்; தன் வாழ்வு பற்றிக் கவலை கொள்ளாது, பிறர் நல்வாழ்வில் நாட்டம் கொண்ட அதியமான் செயல், சிவபெருமான் செயல் ஒன்றை நினைவூட்டுவதாயிற்று.

சாவா மருந்தாகிய அமிழ்தினைப் பெறத் தேவர்கள் பாற்கடலைக் கடைந்த காலத்தில், முதற்கண் அதில், அமிழ்தத்திற்குப் பதிலாக, ஆலகாலப் பெருநஞ்சு தோன் றிற்று; அது கண்டு அஞ்சினர் அனைவரும; சிவன், அவர்

களுக்கு நேர இருந்த கேட்டைப் போக்க, அவ்வாலகால நஞ்சைத் தான் உண்டு, சாவா மருந்தாகிய அமிழ்தை அவர்களுக்கு அளித்தான்; அதனாலேயே, நஞ்சுண்ட நீல கண்டன் என்பதும் அவனுக்குப் பெயராயிற்று; இவ்வாறு கேட்டினைத் தான் தாங்கிக் கொண்டு, வாழ்வைப் பிறர்க் களித்தான் அவனும்; அதியமானும், நீடிய வாழ்வு தான் பெறுவதை வெறுத்து, ஔவையார்க்கு அளித்தான்; ஆகவே, அதியமான், நீலகண்டனுக்கு நிகராயினன்; நஞ் சுண்டும் சாவாது நெடுநாள் வாழ்ந்தான் சிவன்; அதைப் போன்றே, நெடுநாள் வாழ்வதை அதியன் வெறுத்தானாயி னும், அவன் நெடுநாள் வாழ்வன்; அவன் வாழ வேண்டும் என்று அவனுக்கு நல்வாழ்த்துக் கூறுகிறார் ஔவையார்.

அதியமானுக்கும், அரனுக்கும் உள்ள தந்நலந் துறந்த உள்ள வொற்றுமை கருதி, அதியமானை நீலகண்ட னுக்கு ஒப்பிட்ட ஔவையார், "நீலமணி மிடற்று ஒருவன் போல" என்று கூறினாலே போதும், அவர் அவ்வளவோடு நில்லாமல், "பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி" என்ற வேறோர் சிறப்பினையும் சிவனுக்கு ஏற்றிக் கூறியுள் ளார்; அவ்வாறு, அவனை விசேடித்துக் கூறியதால், துன் பத்தால் தேய்ந்து வந்தாரைத் தலையில் வைத்துப் போற்றிக் காக்கும் அவன் பண்பைக் குறித்தாராயிற்று; அதனால், நாம் பெறும் பொருள், சிவனோடு ஒப்புக் கூறப்படும் அதியமானும், பொருளால் வறியராய்த் தன்கண் வரும் புல வர்களைச் சிறப்பாக வரவேற்றுப் போற்றிப் பேணும் இயல் புடையான் என்பதாம். சிவனை அடைந்த திங்கள், அதிய மானை அடைந்து வாழும் புலவர்களுக்கு உவமையாகக் கூறப்பட்டுளது; அதனால், திங்கள் வளர்வதும் தேய்வ தும்போல, புலவர்களும், புரவலர்கள் பொருள் தருந் தோறும் செல்வராய்ப் பின்னர் வறியராய் வாழ்வர் என் பதும், திங்கள், தன்னை ஒருபால், பாம்பு கௌவிக் கொண்டு துன்புறுத்தும் காலத்தும், உலகிற்கு ஒளி செய்தலாகிய தன் கடமையில் தவறுதல் இல்லை; அதைப் போல, புலவர்களும் தாங்கள் வறுமையுற்ற காலத்தும்,

தம் வறுமையிற் செம்மையாம் குணத்தில் பிறழார் என்பதும், திங்கள் தன்னிடத்தே உள்ள இருளைப்போக்க முயலாமல், உலகிருளைப் போக்குவதேபோல், புலவர்களும் தம் துயர் களைவதைக் கருதாமல், உலகமக்கள் உயர உழைப்பதையே கடனாகக் கொள்வர் என்பதும், ஞாயிற்று ஒளி கண்டு பொங்காத கடல், திங்கள் ஒளி கண்டு பொங்குவதேபோல், வேந்தர் தம் வில்லாற்றலால் பெறமுடியாத ஒன்றைப புலவர்கள் தம் சொல்லாற்றலால் பெறுவர் என்பதும், திங்களைச் சேர்ந்த முயலும் பிறரால் தொழப் படுதல்போல், புலவரோடு சேர்ந்த அவர் தம் சுற்றத்தாரும் பிறரால் போற்றபபடுவர், பேணப்படுவர் என்பதும் பெறப்படும்; இனி, புலவர்க்குத் திங்களை உவமையாகக் கொண்டால், திங்கள்பால் உள்ள எல்லாக் குணங்களும் புலவர்பாலும் இருக்கும் எனக் கொள்ளுதல் கூடாது; உவமையெல்லாம் ஒருபுடை யொப்புமை யுடையனவே; புலிபோலப் பாய்ந்தான் எனின், அவனுக்கும், வாலும் நாலு காலும் இருக்கும் என எண்ணுதல் கூடாது; அது போலவே, திங்கள், வாழ வேறு வழியின்றி வலிய வந்து இறைவன் தாளில் பணிந்து அடைக்கலம் அடைந்தது; ஆனால், புலவர்கள் அவ்வாறு வாழ வழியின்றி அரசர்களை அடைந்தனர் அல்லர்; அரசர்கள் ஏற்றுப் போற்றப் பெருமையோடு வாழ்ந்தனர் புலவர் என்பதும், திங்கள், தன்னிடையே கறையுண்டாய விடத்தும், அது கண்டு கலங்குவதின்றி வாழ்கிறது; ஆனால், புலவர்கள் தம்இடையே பழியுண்டாக வாழார் என்பதும் பெறப் படும். ஆக இபபொருள் எல்லாம் அடங்க, "பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி, நீலமணி மிடற்று ஒருவன் போல" எனச் சுருங்கச் சொல்லி, விளங்கவைக்கும் முறையால் உவமை கூறிய ஔவையார் புலமைநலம் போற்றிப் புகழ்தற்குரியதாம்.

> "ஊர்க்குறு மாக்கள் ஆடக் கலங்கும்
> தாள்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்
> ஈர்ப்புடைக் கராஅத் தன்ன என்னை." (புறம்: ௧0௪)

'பணிதல் நம் கடன்' என அதியமான் பகைவர்க்கு அறிவுரை கூற விரும்பும் ஔவையார், அவன் ஆற்றலை விளக்க ஆண்ட உவமை இது.

ஒருவர் ஆற்றல், அவருக்கு ஏற்ற இடமாயின் மேலும் மிகுதலும், ஏலா இடமாயின் உள்ள ஆற்றல் குறைதலும் இயல்பு; இதை விளக்க, முதலை நீர்நிலையிடத்ததாயின் ஆற்றல் மிகும்; அந்நிலைக்கண், எதிர்த்த எதையும் அழித்தொழிக்கும் அதற்கு மாறாக எதிர்த்த எதையும் அழித்தொழிக்கும் ஆற்றல் வாய்ந்ததே யாயினும், யானை சேற்று நிலத்தில் சிக்கிக்கொள்ளின், அதை ஆற்றல் குறைந்த குறுநரியும் கொன்று வீழ்க்கும் என்றும கூறுவர் வள்ளுவர். "நெடும் புனலுள் வெல்லும் முதலை;" "கால் ஆழ் களரில் நரி அடும் கண் அஞ்சா, வேலாள் முகத்த களிறு."

நீர் நிலைக்கண் முதலைக்கு ஆற்றல் மிகும் என்று கூறும் வள்ளுவர், முதலை நீரில் வாழ்ந்து விடுவதினலேயே, அத்தகைய பேராற்றலைப் பெற்றுவிட்டதாகாது. வாழும் நீர்நிலையின் அளவும் அதற்குத் துணைசெய்தல் வேண்டும்; வாழும் நீர்நிலை, அளவில் பெரிதாய வழியே அம் முதலைக்கு அவ்வாற்றல் உண்டாம்; அதற்கு மாறாக அஃது அளவில் சிறிதாயின், முதலை அவ்வாற்றல் பெறுதல் அரிதே என்ற குறிப்புத் தோன்ற, "புனலுள் வெல்லும் முதலை" என்று மட்டும் கூறாது, "நெடும் புனலுள் வெல்லும் முதலை" எனப் புனலுக்கு நெடுமை அடை கூட்டிக் கூறினர். அதைப்போன்றே, யானை இடமல்லாஇடம் சேரின் ஆற்றல் குறையும என்று கூறவந்த வள்ளுவர், நிலத்தைவிட்டு நீரில் சென்று விடுவதாலேயே யானையின் ஆற்றல் குறையும் என்று கொள்வது கூடாது; அந்நீர் நிறைவிடம், அவ்யானையின் ஆற்றலைக்குறிக்கும் ஆற்றல் உடையதாதல் வேண்டும்; அது சென்ற இடம், வைத்த காலை ஆழ இழுத்துக்கொள்ளும சேற்று நிலமாக இருத்தல் வேண்டும்; அத்தகைய சேற்று நிலத்தில் சென்ருல் தான் யானையின் ஆற்றல் குறையுமேயன்றி, அது சென்ற இடம் இயற்கையாகவுள்ள சேருக மட்டும் இருப்பதா

லேயே ஆற்றல் குறைந்துவிடாது என்ற குறிப்புத் தோன்ற, "களிறில் நரி யடும்" என்று மட்டும் கூறாது, "காலாழ் களிரில் நரி யடும்" எனக் களருக்கு ஆற்றல் ஏற்றிக் கூறினார்.

ஆனால், அதிகன் புகழ் கூறவந்த ஔவையார், அதிய மானை முதலையோடும், அவன் பகைவரை முதலையால் ஈர்க்கப்படும் யானையோடும் ஒப்பிட்டார் எனினும், அம் முதலை நெடும்புனல் வாழ்முதலையும் அன்று; காலாழ் களரில் அகப்பட்ட யானையும் அன்று என்றே கூறியுள் ளார். முதலை, சின்னீரில் வாழ்வதே; பெருநீர்த் துணை யினைப் பெற்றது அன்று; யானை அகப்பட்ட இடம் சிறிய நீர்நிலையே; காலாழ் களரில் அகப்பட்ட துன்பநிலையால் துயருற்றதன்று; ஈர்க்கும் முதலையும் ஈர்க்கப்படும் யானையும் நிற்கும் இடம், சிறுவர் காலிட்டு ஆடுவதாலேயே கலங்கிவிடும் அளவு குறைநீர் நிற்கும் நிலையே; அச் சிறுநீ ரால், முதலை வேறுவலி பெறுவதுமில்லை; யானை உள்ள பலம் குன்றுவதுமில்லை; முதலையின் ஆற்றல் ஒன்றினா லேயே யானையின் முழுப்பலமும் குன்றி அழியும்.

அதைப்போலவே, அதியமான் பெற்ற பிறர்துணையும் குறைவே; இடத்தால் பெற்ற பெருந்துணை உடையா னல்லன்; அவன் பகைவர் பேராற்றல் பெற்றவரே; சூழ் நிலையால் ஆற்றல் குறைந்தவரும் அல்லர்; பெருந்துணை பெற்று, குறைவலிப் பகைவரை வெல்ல எண்ணுபவன் அல்லன் அதியமான்; பிறர்துணை எதையும் பெறாமல், குறைந்த தன் துணை ஒன்றைக்கொண்டே, பிறிதொன்றால் தன்வலி குன்றிக் குறையாத பெரிய பகையையும் வெல் லும் பேராற்றல் வாய்ந்தவன் அதியமான் என்ற இப் பொருள் எல்லாம் தோன்ற, அவ்வூர்ச் சிறுவர்கள் கூடிக் காலிட்டு ஆடுவதாலேயே கலங்கிவிடும அளவு குறைந்த நீரில் நின்றே, ஆற்றல் மிக்க யானையைக் கொன்று இழுக் கும் ஆற்றல் மிக்க முதலையோ டொப்பன் அதியமான் என்று உவமை கூறிய ஔவையார் திறம் கண்டு மகிழ்தற் குரியதாம்.

ஔவையார் எடுத்தாண்ட உவமைகள் அனைத்தையும் இவ்வாறே விரித்துரைப்பதாயின், நூல்விரியுமாதலின் இடச்சுருக்கம் கருதி, அவர் மேற்கொண்ட சிறப்புடை உவமங்கள் சிலவற்றைச் சுட்டிச்செல்கின்றேன்; படிப்போர் விரித்துப் பொருள் கொள்வாராக.

கற்றோர் சென்ற இடமெங்கும் சிறப்பே பெறுவர் என்பதற்குத் தொழில் வல்ல தச்சன், தன் தொழிற் கருவிகளோடு காட்டுளவிடப்படின், அவனுக்கு அக் காடு முழுதும் பயன் அளித்தலையும,

“மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே;
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே.”

தன்பால் வந்து பாராட்டிய புலவர்க்கு, அதியமான் பரிசில் அளித்தல் தவறாது என்பதைக் குறிக்க, யானை தன் கையில் கொண்ட பொருள், அதன் கோட்டளவும் சென்ற பின்னர், அதற்குப் பயன்படுதல் தப்பாது என்பதையும்,

“அதியமான் பரிசில்...... ..யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத்தது அது பொய்யா காதே.” (புறம்: ௧0௧)

புலவர்க்கு இனியனாய்ப் பகைவர்க்கு இன்னாய்த் தோன்றும் அதியமானுக்கு நீரிற்குளிப்புழி, சிறுவர்கள் தன் கொம்பைப் பிடித்துக் குதித்துக் கழுவினும் அவர்கள் பால் அன்பும், மதங்கொண்டவிடத்து எவரும் தன்னை அணுகுதற்கரிய சினமும் கொள்ளும் யானையையும்,

“ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறுபோல
இனியை பெரும! எமக்கே; மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய்; பெரும! நின்னொன்னா தோர்க்கே.” (புறம்: ௯௪)

பகைவரை வென்ற பின்னர் பிறந்த மகனைக் கண்டு நிற்கும் காலத்தும், வாடாத சினம்கொண்டு, கண் சிவந்து

கிற்கும் அதியமானுக்குப் புலியொடு போரிட்டு வென்று பின்னரும் சினம் மாறு யானையையும்,

"வரிவயம் பொருத வயக்களிறுபோல
இன்னும் மாறாது சினனே." (புறம் : ௧00)

பகைவர் படை கண்டு பதுங்காது பாய்ந்து தாக்கும் போர்வீரர்க்கு, அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எழுந்து கடிக்கும் பாம்பையும்,

"எறிகோல் அஞ்சா அரவின் அன்ன
சிறுவன் மள்ளா." (புறம் : அ௯)

பகைவர், அதியமான் படைகண்டு வலிமை மிக்க தற காப்பு முறைகளை மேற்கொள்ளினும், அவரைத் தவறாது அழிக்கும ஆற்றல் வாய்ந்த அதியமானுக்கு, வெண்கடுகுப் புகை எழுபபித் தடுப்பினும், தவறாது வந்து உயிர்களைப் பற்றிச் செல்லும் எமனையும்,

"ஐயவி புகைப்பவும் தாஙகாது ஒய்யென
உறுமுறை மரபில் புறம் நின்றுய்க்கும்
கூற்றத னையை." (புறம் : ௯அ)

அழிக்கமுடியா ஆற்றலும், திண்மையும் வாய்ந்த அதியமானுக்கு நாள் ஒன்றிற்கு எட்டுத் தேர் செய்ய வல்ல தச்சன் ஒருவன், ஒரு திங்கள்காறும செய்த ஒப்பற்ற திண்மை வாய்ந்த தேர் உருளையினையும்,

"வைகல் எண்தேர் செய்யும் தசசன்
திஙகள் வலித்த கால் அன்னோன்." (புறம் : அஎ)

தன்கீழ் வாழ் மக்களுக்கு எதிர்பாரா வகையில் இன்னல் நேர்நதால் தான் முன்னின்று காக்கும் பொருட்டெழினிக்கும் பாரம மிகுதியால், இடைவழியில் அச்சு முறிந்தவழி பயன்படுத்துதற்கென்றே அவ் வண்டியோடு கொண்டு செல்லும் சேம அச்சினையும்,

"சேமஅசசன்ன இசைவிளங்கு கவிகை நெடியோய்!"

கிடைத்தற்கரிய பொருள்மீது நெஞ்சம் அதிக ஆசை கொள்வதற்குப் பெய்யும மழைநீரைச் சுடப்படாத மட்கலத்தில் பிடிப்பார் செயலையும்,

"பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கா [1]வெள்ளம் நீந்தி
அரிது அவாவுற்றனை நெஞ்சே!"

கணவன் பொருள்வயிற் பிரியத் தனித்திருக்கும தலைவி, இரவில் துயில் இன்றித் துன்புறுதற்குப் போர்க்களத்தின் அண்மையில் வாழ்வார், போர் அச்சத்தால் இரவில் உறக்கமின்றி இன்னல் உறுவதையும்,

"கொன்முனை இரவூர் போல
இலவாகுக நீதுஞ்சும் நாளே."

ஒருவர் கூறிய கருத்தை அவ்வாறே ஏற்றுத் தழுவி, இசைவதற்குக் குட்டிக்குரங்கு தன் தாய்க்குரங்கை விடாது இறுகத் தழுவிக் கொள்வதையும்,

"மகவுடை மந்திபோல்
அகனுறத் தழீஇக் கேட்குநர்.

தலைவன் பிரிந்த பின்னர்த் தனித்திருப்பின் வாழோம்; இறந்து படுவோம் எனக்கண்டு, அவன் சென்ற வழியே தானும் சென்று தலைவனை அடைய எண்ணும் தலைவியின் செயலுக்கு, நீர் அற்ற இடத்தில் நின்று வாழாது, நீருறையிடம் நோக்கிச் செல்லும் மீனின் செயலையும் உவமை கூறியுள்ளார்.

"அழிநீர் மீன் பெயர்ந்தாங்கு அவர்
வழிநடைச சேறல் வலித்திசின்."

## (11) ஔவையார் காலத்து நாட்டு நிலை:

புலவர் எவரும் தாம் வாழுங் காலத்தில், தாம் வாழும் நாட்டின் நிலவளம் நீர்வளம், மக்கள் மேற்கொண்ட

1. வெள்ளம் - ஆசை.

தொழில்வளம், அவர்கள் நடாத்திய வாழ்க்கைமுறை, அன்று நிலவிய ஆட்சிநிலை, வாணிபவழிகள், செல்வச் சிறப்பு ஆகியவற்றைக் குறிக்காமல் பாடல் புனையார் ஆதலின், இலக்கியங்களை எழுந்த காலத்தின் நிலையைக் காட்டும் காலக் கண்ணுடி என்பர்; [1]தொலைதோற்றம் [2]தொலை நோக்கிபோன்ற தொலைநோக்கிகள் எல்லாம், இடத்தால் சேய்மையவாம் பொருள்களை மட்டுமே அண்மையில் கொணர்ந்து காட்டும் இயல்பின; ஆனால், இலக்கியத் தொலைநோக்கிகள், இடத்தால் சேய்மையான பொருள் களேயே அலலால் காலத்தால் சேய்மையான பொருள்களை யும் தெளிவாகத் தெரிவிக்கும் இயல்பினவாம; இஃது, எந்நாட்டு இலக்கியங்கட்கும பொதுப்பண்பாம்; அத் தகைய தொலைநோக்கிகளுள், ஔவையார் ஆக்கித் தந்த தொலைநோக்கியின் துணைகொண்டு நோக்கியவழி, நம் கண்ணிற்குப புலனுக அவர் வாழ்ந்த காலத்து நாட்டு நிலைக் காட்சியே கீழே காட்டப்பெறுவது.

தனக்கு வேண்டும் உணவிற்குப் பிற நாடுகளின் துணையை நாடும் இன்றையத் தமிழகம் போன்றதன்று பழந தமிழ்நாடு; செந்நெற் கதிர்கள் செழித்து வளரும் செந்தமிழ்நாட்டின் சிறப்பை ஔவையார், அகங்குளிரக் கண்டு அழகாகப் பாராட்டியுள்ளார். அவர் காலத்துத் தமிழர்கள், உழவின் சிறப்பறிந்து அத் தொழிலை மேற் கொண்டு வாழ்நததோடு அமையாது, நல்வாழ்விற்குத் துணைபுரியும் வேறு பல தொழில்களையும் பயின்று மேற் கொண்டிருந்தனர், பொதுவாக ஒரு நாட்டின் செல்வ நிலை சிறககவேண்டுமானுல், அநநாடு கைத்தொழிலாற் சிறந்து, கடல்வாணிபம் கொண்ட நாடாகத் திகழ்தல் வேண்டும்; தமிழகத்தின் கடற்றுறைகள் பலவற்றிலும், கடல்கடந்த நாடுகளினின்றும், பல்வேறு பண்டஙகளை ஏற்றிக்கொண்டு, வாணிபம் கருதிவந்த நாவாய்கள் பல நிற்கும். இக்கால நாவாய்கள், எண்ணெய் முதலாயின துணைகொண்டு பொறிகள் இயக்க இயங்குவதுபோல்

1. Television. 2. Telescope.

இல்லாமல், காற்றால் உதையுண்டே கடல் பல கடந்து ஒரு நாட்டினின்றும் ஒருநாடு போய்ச் சேரும் நாவாய்களைத் துணைகொண்டு புறநாட்டு வாணிபம் புரிந்தனர் அக்காலத் தமிழர்கள்; கடல்வாணிபம் மேற்கொண்ட தமிழர்கள், பல்வேறுவகைக் கைத்தொழிலாலும் சிறந்திருந்தனர்; எத் தொழிற்கும் இன்றியமையா இருமபை, ஏற்ற பொருள் களாக ஆக்கித்தரும இரும்புத் தொழிலாளரும் இருந் தனர்; அவர் பொதுவாகக் கொல்லர் என அழைக்கப் பெற்றனர்; அக் கொல்லர், தம இரும்புத் தொழிற்சாலை களை ஊரின் கோடியில், ஒதுக்குப்புறமாக உள்ள தனி யிடத்தே அமைத்துத் தொழிலாற்றுவர்; இவரேயன்றி நினைத்தால் நாள் ஒன்றிற்கு எட்டுத்தேரை செய்யும ஆற் றல வாய்ந்த தச்சரும இருந்தனர்; காட்டுமரம் எதை யும், ஏற்றவாறு பயன்படுத்தவல்ல முறைகளையும அவர் கள் உணர்ந்திருந்தனர், அவர்கள் கையாண்ட கருவி களில், மழுப்போன்ற சில கருவிகளையும் ஔவையார் அறிந் திருந்தனர்; தொழில வளர்ச்சிக்குத் துணை புரியும இரும்புக் கொல்லரும, மரத் தச்சருமேயன்றி, வாழ்வின் பயன்பெற உதவும அணிகள் பல ஆக்கித்தரும் பொற் கொல்லரும பணிபுரிந்து வாழ்ந்து வந்தனர்; அவர்கள் தொழிற்சாலையையும், அத் தொழிற்சாலைக்கண் பொன்னை அறுப்பதும, வெட்டுவதுமாகிய தொழில்களை நிகழ்த்துழி, அக் கருவிகள் எழுப்பும் இன்னோசைகளின் இயல்பையும அறிந்து பாராட்டியுள்ளார் ஔவையார்; நுண்ணிய நூலால் மெல்லிய ஆடைநெய்யும் நெசவாளரும், அவர் கள் ஆக்கித்தந்த ஆடைகளை மாசுபோக்கி வெளுத்துத் தரும் வண்ணாரும் வாழ்ந்திருந்தனர் ஔவையார் கண்ட தமிழகத்தில்; வெளுக்கும பணியினைப் பெரும்பாலும் அக் குல மகளிரே மேற்கொண்டிருந்தனர்; அவர்கள் உவர்நிலத்தே தோண்டிய கிணற்றுநீரில் ஆடைகளை வெளுத்துத் தருவர்.

இவ்வாறு தொழிலாலும், வாணிபத்தாலும் வளம் பெற்றுச் சிறந்த தமிழகத்தில், சேர, சோழ, பாண்டிய

ராகிய தமிழ் மூவேந்தர்களும், வேறு பல குறுநில மன்னர்களும் ஆண்டு வந்தனர்; அரசர், காவல் செறிந்த அரண்கள் பல அமைத்து ஆண்டு வந்தனர்; அத்தகைய அரண்களுள், தகடூர், பறம்பு என்ற இரு அரண்களை அறிந்திருந்தார் ஔவையார்; ஒருநாட்டு அரசன், பிறஅரசர்களிடம் திறைவாங்கிக்கொண்டு, அவர்களை அவர்கள் நாட்டை ஆளவிடும் பேரரசுமுறையும் அன்றையத் தமிழகத்தில் நிலவக்காண்கிறோம்; திறைகொடா அரசர்களை அழிப்பதோடு, அவர்கள் நாட்டையும் அழித்துக் காடாக்கும் காட்டுமிராண்டி முறையும் அங்கே கையாளப் பட்டுளது; அரசர், தம போர்முரசினை ஊர்ப்பொது விடத்தேயுள்ள மன்றங்களில் உயரே கட்டித் தொங்கவிட்டு வைப்பர்; படைக்கலங்களைப் போரற்ற காலங்களில், கொல்லனிடத்துக் கொடுத்துப பழுதுபாராதது, நீடிதது உழைக்க நெய்பூசி, நல்ல காவலமைந்த இடததே, அணியாகநிறுத்தி, பீலியும், மாலையும் சூட்டிவைப்பா; பெய்யும் மழைநீரைத் தான் ஏற்றுகொணடு தன்னைப்பிடித்து வருவார்மேல் படாமல் காக்கும் குடைகளைப்போன்று, பகைவர் அம்பும், வேலுமம தம் அரசர் மீது படாமல் தஙகள் மெய்யில் ஏற்றுக் கொண்டு தம் அரசாகளைக் காக்கும் உண்மைவீரம செறிந்த மறவர்களை அரசர்கள் தம் மெய்காப்பாளராகக் கொண்டு வாழ்ந்தனர்.

ஔவையார் கண்ட தமிழகத்தில், "மலையோ!" என்று கண்டார கண்களை மருளவைக்கும் மாடம் பல அமைந்த மாளிகைகளைக் கட்டி மகிழ்நது வாழ்ந்தனர்; அக்காலத் தமிழ்மக்கள், நுண்நூற் கலிங்கம் உடுத்து, பொற்கோல அவிர்தொடி அணிந்து, நரநதம் நாறி நெய் விரவு கறி சோற்றைப் பொன்னாலும் வெள்ளியாலும் ஆன கலஙகளில் பெய்து உண்டு, மணிகள் ஒலிக்க விரைந்து ஓடும குதிரைகள் பல பூண்ட தோ ஏறிச்சென்று விழாக் கண்டு மகிழ்வர்; விழாககாலத்தே மகளிர் தஙகளை, இலை ஆடைகளாலும், வேறுபிற அணிகளாலும், மலர்களாலும் அழகுமிக அணிசெய்து கொள்வதும் உண்டு; விழாக்

களத்தே ஆடவரும், மகளிரும், மற்போர் விளையாட்டும், துணங்கையும் ஆடிமகிழ்வர்; ஆற்றில் புதுப்புனல் வருங் கால், நீர்விழா நிகழ்த்துவதும் உண்டு.

இவ்வாறு செல்வவாழ்வு வாழும் தமிழர்களிடையே, நீர்ப்பாசியின் வேர்போல் நெகிழ்ந்து, கிழிந்துபோன ஆடையும், எண்ணெய்காணாது நாற்றம்நாறும் தலைமயிரும் அரிசி உணவு விரவுதல் இல்லாத வெறும் இலை உணவும் கொண்டு வாழும் வறுமைமிக்க தமிழர்களும வாழக்காண கிறோம்.

நம் அருந்தமிழ் மூதாட்டியார் அறியவாழ்ந்த தமிழர், குதிரைபூட்டிய தேர்களோடு, எருதுகள் இழுக்கும் வண்டி களையும் பெற்றே வாழ்ந்தனர்; இளைய, வலிய எருதுகள் பூட்டிய வண்டிகளில், உப்பினை ஏற்றிக்கொண்டு, ஊர்பல திரிந்து வாணிபம செய்யும் உப்புவணிகரும் இருந்தனர்; இவர்கள் எப்பொழுதும் பலர்சேர்ந்தே செல்வர்; எருதுகள் இளையன ஆதலாலும், ஏற்றிய பண்டம் மிகுதியாதலாலும், செல்லும்வழி, மேடும்பள்ளமும் பெருமணலும் சேர்ந்து செல்லுதற்கரியவாம் ஆதலாலும், இடைவழியில் வண்டி அச்சுமுறிந்து போயினும்போம என அஞ்சி, அவ்விடத்து உதவுவதற்காக, வேறு ஒரு அச்சினை அவ்வண்டியோடு எடுத்துச் செல்வதும் அவர்கள் வழக்கமாம்; அவர்கள் வண்டி மேற்கூடு பெறுவதில்லை; அவ்வுப்பு வணிகர் உமணர் எனப்படுவர்.

தமிழர், தம் மணவிழாக்காலத்தே, முரசும், சங்கும் ஒலிக்கச் செய்வர்; அவர்கள் அமரரைப் பேணினர்; வேள்விசெய்து ஆவுதி அருத்தினர்; பார்ப் பார்க்குப் பூவும், புனலும் சொரிந்து பொன்தானம் புரிந் தனர்; முத்தீ வளர்த்தனர்; அதை வழிபட்டனர்; குலமக ளிர்க்குக் குறை நேர்ந்தவழி, குறமகளிரை அழைத்துக் குறிகேட்டறிந்து அமைதி கொள்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்; போர்ப்புண்பெறாது வீரர் மடிந்தால், மறைந்த அவர் உடலைத் தருப்பைப்புல்மீது கிடத்தி, வாளால் வெட்டி, "வீரப்புண் பெற்று மாண்டாரைப்

போன்றே இவர்களும் வீரசுவர்க்கம் பெறுக!'' என வேண்டின் அவர்களுக்கும் அதுகிடைக்கும் என்பதையும் நோய்வாய்ப்பட்டு இறக்கும் நிலை எய்தியோர் அருகே, வெண்கடுகுப்புகை எழுப்பின், அப் புகைகண்டு அஞ்சி எமன் வாரான் என்பதையும் நம்பிவாழ்ந்தனர், ஔவையார் காலத் தமிழர்கள் ; அவர்கள் இறந்தோர் உடலைச்சுட்டும், கல்லைநட்டு, அக் கல்லிற்கு ஆடையும், பீலியும் சூட்டிச் சுட்டஇடத்தே, இறந்தவர் பீடும், பெருமையும பொறித்து வழிபாடு செய்தும் வாழ்நதனர் ; பிறநத மகன் முகத்தைத் தந்தை காண்பதையும், மாலையில் மகளிர் மாளிகைகளில் மணிவிளக்கேற்றுவதையும வழக்கமாகக் கொண்டனா அவர்கள். ஊரில்வாழும் இளஞ சிறுவர்கள், நீர்நிலை தேடிச் சென்று, அங் நீர்கலங்கக் குதிதது ஆடுவதோடு, அங நீர் நிலைக்கு நீராடவரும் அரசயானையின் கொம்புகளைப் பிடித் துக் குதித்து ஏறி அவற்றைக் கழுவி முடிப்பர் என அக் காலச் சிறுவர்களையும விடாது படம் பிடித்துக் காட்டி யுள்ளார் நம் பைந்தமிழ்ப் பாட்டியார்.

நாம் இப்போது கண்ட இத்தமிழகமே, ஔவையார் கண்டு மகிழ்நது பாராட்டிய பழநதமிழ்நாட்டின் படமாம்.

---

## ௩. ஔவையாரால் பாடப்பெற்றோர்

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பில்
வலவன் ஏவா வானவூர்தி எய்துப"

என்பதை நம்பியவர் நம் தமிழர்; "புலவர் பாடாது வரைக" எனப் புலவர் பாடாமை தமக்கு இழிவாம் என்று கொண்டனர் பழந்தமிழ்க் காவலர்; பழந்தமிழ்ப பாவலர்களும், "பாடறிந்தொழுகும பண்பினரை" யன்றிப் "பீடில் மன்னரைப்" பாடாமையைத் தம பண்பெனக் கொண்டு பாராட்டினர்; சிறந்த புலவர் பாடலைப் பெறுவது தமக்குப் பெருமையாம் என அரசர்கள் கொள்வதைப் போன்றே, பேரரசர்களைப் பாடி அவா பால் பரிசில் பெறுவதைத் தமக்கும பெருமையளிக்கும் செயலாகக் கொண்டனர் புலவர்களும். ஔவையார் பாக்கள துணை கொண்டு நோக்கியவழி, அதியமானும, அவன் மகன பொருட்டெழினியும், நாஞ்சிற்பொருநனும், சேரமான் மாரிவெண்கோவும், சோழன இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதியும அவர் பாடலை நேரிற்பெற்றுத், தாம் பெருமையுற்றதோடு, அவா வேண்டும் பரிசில் அளித்து அவரையும் பெருமைப்படுத்தினர் என்பது புலனும் தனக்குரிய பறம்புமலைக் குருவிகளை ஔவையார் பாராட்டினுர் என்ற புகழ் பாரிக்கு உரித்து; இவ்வாறு அக்கால அரசர்களைப் பாராட்டியதோடு, அருந்தமிழ்ப் புலவர்கள் சிலரையும் ஔவையார் பாராட்டியுள்ளார்; கபிலரும், வெள்ளிவீதியாரும் அவ்வாறு, அவர் பாராட்டுதலைப் பெற்ற புலவர்களாவர்; இவர்களையே அன்றி, கோசர் என்ற இனத்தாரையும் ஔவையார் பாராட்டியுள்ளார்; இங்குக் கூறிய இவர்கள் வரலாறு ஒவ்வொன்றும், விரிந்து நீண்டு கிடப்பதால், அவர் வரலாறு முற்றும் அறிவிக்காமல், அவர் பற்றி ஔவையார் கூறுவனவற்றை மட்டும் தொகுத்துரைக்க விரும்புகிறேன்.

(1) அதியமான் :

சேலமமாவட்டத்தில் தர்மபுரி என வழங்கும் தகடூரைத் தலைநகராகக் கொண்டு அதியர் என்ற குறுநில அரசர்கள் ஆட்சிபுரிந்து வந்தனர்; தகடூர், போரிடை வெற்றியல்லது தோல்விகாணப்போராண்மை யொன்றையே பெறற்கரும பேறாகக் கருதும் வீரர் பலர் வில்லேந்திக் காத்து நிற்கும் காவற்காடு சூழ்ந்தது; அந் நகருள், அரசர்புகழ் பாடிவரும இரவலர் வேண்டுமாறல் நுழைதல் இயலுமேயன்றிப் பகையரசர் எவரும, கனவிலும் நுழைய நினையார்; அத்துணைக்காவல் அமைந்தது அந்நகர்; அவ் வதியர் சேரமரபினரோடு உறவுடையவர்; அதனால், "போந்தை வேம்பே, ஆர் என வரூஉம் மாபெருந்தானை மலேந்த பூவும" எனக் கூறியவாறு, அச் சேரர்க்கு உரித்தெனப்பட்ட பனந்தோட்டையே இவர்களும் மாலையாகப் பெற்றிருந்தனர். பெறற்கரும பெருமைவாய்ந்த கரும்பைப் பிறநாட்டினின்றும் முதற்கண் இவன் கொணர்ந்த பெருமை, இவ்வதியர்க்கே யுரித்து கொல்லிக் கூற்றமும், குதிரைமலையும் இவர்க்கு உரியவாய் இருந்தன; கி. பி. இரண்டாம் நூற்றாண்டு எனப்படும் சங்ககாலத்தே வாழ்ந்த இவர்கள், கி. பி பன்னிரண்டாம நூற்றாண்டிலும், விசயாலயன் வழிவந்த பிற்காலச் சோழர்களுக்குத் துணைவர்களாக விளங்கினர் என அறியபபடுதலால், இவர்களும், மூவேந்தர்களைப் போன்றே நெடிதாண்ட பெருமரபினர் என்பது புலனும்.

இவ்வளவு பீடும் பெருமையும் மிக்க மரபிலே, அஞ்சி என்பான் ஒருவன் இருந்தான்; இவன் அதியர்மரபிலே வந்த பல்லோருள்ளும் சிறந்தோன் ஆதலின், கிழார் என்ற வேளாளர்குடியிலே பிறந்து சிறந்தமையால், பெரியபுராண ஆசிரியர் இயற்பெயரான் அன்றி, குலப் பெயரால் சேக்கிழார் என அழைக்கப்படுதலேபோல், இவனும் இயற்பெயரான் அன்றி, குலப்பெயரால் அதியமான் எனவும், அதியர் மரபிலே வந்த அரசருள் சிறந்தோன் என்ற பொருளில் அதியமான் நெடுமான் எனவும்,

அச் சிறப்புப்பெயர்களோடு இயற்பெயர் இணைய அதிய மான் நெடுமானஞ்சி எனவும், குலப்பெயர் தொடராது, சிறப் படை ஒன்றே தொடர, நெடுமானஞ்சி எனவும், இயற்பெயர் ஒன்றே தோன்ற அஞ்சி எனவும் அழைக்கப்பெறுவன்; சில இடங்களில், அவன் பெயர் எழினி எனவும் காணப்படு கிறது; இப் பெயர், பொதுவாக இவன் மரபைச் சார்ந் தோர்க்கும், இவன் பகைவராயினார்க்கும், வேறு பிறர்க் கும் வழங்கக் காண்கிறோம்; இப பெயர்க்காரணம் யாது என்பது அறியக்கூடவில்லை; கடையெழுவள்ளல்களுள் ஒருவனவன் எனப் பெருஞ்சித்திரனார் என்ற புலவர் பெருந்தலையாராலும், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்த னாராலும் பாராட்டப்பெற்றவன இவ்வதியமான் நெடுமா னஞ்சியே, இவனைப் பாடிய புலவர் பலராயினும், பாரி யைப்பாடிய கபிலர்போலவும், ஆயைப்பாடிய மோசிபோல வும், இவன் புகழ் விளங்க விரிவாகப் பாடியவர் ஔவையார் ஒருவரே

நீண்ட பெரிய தேர்; தலை உயர்த்தி நடக்கும் மதம் மிக்க களிறு; விரைந்து செல்லும் குதிரை; வேலேந்திய வீரர் ஆகிய நால்வகைப் படைகளாலும் நிறைந்தது அதிய மான் பெரும்படை; இந் நாற்படைகளே அன்றி, வாழ் வின் துணையென வில்லையன்றி வேறு காணுதவரும், எதிர்த்துவருவோர் எத்துணை ஆற்றல்வாய்நதோராயி னும், இன்னல்விளைவித்து இயற்கையொடு இரண்டறக் கலக்கச் செய்யாதுவிடாத இயல்பினரும் ஆகிய மழவர் என்ற ஒருவகைப் போர்வீரர் குழுவையும் பெற்றிருந்தான். மேலும், இவ்வாறு பெரும்படைத்தலைவனாய் விளங்கிய தோடு, அப் பெரும்படையைப் பணிகொள்ளும், பெருவீர னாய், அதற்கேற்ற ஆற்றலும், ஆண்மையும், முழவெனப் பருதத தோளும், முழங்கால் அளவும் நீண்ட கைகளும், அகன்ற வலிய மார்பும் கொண்ட, உறுதிமிக்க உடலமைப் பும் உடையவனாவன். தான் பெற்றிருந்த பெரும் படைத் துணையால், தன் நாட்டைச் சூழ ஆண்டிருநத அரசர் அனைவரையும் வென்று திறைகொண்டு வாழ்வானாயினன்;

இவ்வாறு, பெரும்படையும், பேரரசும் பெற்றிருந்தும், சிறந்த அரசுரிமையைப் பெற்றுள்ளோம் என்று பெருமை கொண்டு, அதுவே போதும் என அமைதிகொள்ளும் உள்ளத்தான் அல்லன்; தன் காலத்தில், தன்னினும் சிறந்தானாக ஓர் அரசன் உளன் என்ற நிலையிருத்தலை வெறுத்தான்; அவன் காலத்தில், திருக்கோவலூரில், மலையமான் வழிவந்த அரசன் ஒருவன் ஆண்டு வந்தனன்; அவன், தன் முன்னோர்களைப்போன்றே ஆற்றல் மிக்கோன்; தமிழ் வேந்தர் மூவரும், அவனைத் தம் படைத்துணையாகப் பெறுவதைப் பெரிதும் விரும்புவர்; மூவேந்தர்களிடையே மூளும் போரில், அவன் யார்பால் நின்று போர்த்துணை புரிவானோ, அவரே வெற்றி பெறுவர், அத்துணைப் போர்ப் பயிற்சி யுடையானவன்; இது அதியமானுக்கு, அளவிலாப் பொறாமையை உண்டாக்கிற்று; உடனே பெரும்படை கொண்டு, கோவலூரைத் தாக்கினான்; கோவலூர் முற்றும் அழிந்தது; மலையமானும் தோற்றான்; பின்னர்த்தான் அதியமான் போர்வேட்கை ஓர் அளவு தணிந்தது.

இத்தகைய போர்வேட்கை மிக்குடையனே எனினும், அவன்பால் சிறந்த குணங்கள் பலவும் செறிந்து விளங்கின; உலகம் வாழ வாழும் பெரியோர், "புகழ் எனின் உயிரும் கொடுப்பர்; பழி எனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்" என்பர் ஒரு பெரியார். "நல்லாறு எனினும் கொளல் தீது" என்றார் வள்ளுவர். "தென்புல மருங்கின் விண்டு நிறைய வாணன்வைத்த விழுநிதி பெறினும் பழி நமக்கு எழுக எனாய்" எனப் பிறர் கொடுக்கக் கொள்வதைப் பழி எனக் கொள்வர் பெரியோர் என்றார் மாங்குடி மருதனார். இவ்வாறு "கொள" எனக் கொடுப்பதன்றி, "ஈ" என இரத்தலாகிய இழிபண்பினை அதியமான் பால் காணல் இயலாது; அதியமான், ஏழரசர் ஆட்சியை எள்ளளவும் வழுவின்றி எய்தியும் அமைதி கொள்ளா நாடாசை கொண்டவனே எனினும், நாடுகளைப் போரில் வென்று கொள்வதல்லது, பிறர் கொடுக்க ஏற்றுக்கொள்ளும் இழிகுணமுடையானல்லன்; உயர்ந்த உச்சிகளை

யுடைய மலைவளம் நிறைந்த நாட்டைக் கொள் எனக் கொடுப்பினும் ஏற்றுக்கொள்ளா உயர்பேர் பண்பாளன் ஆவன் அதியமான். "கோடுயர் பிறங்கு மலைகெழீஇய, நாடுடன் கொடுப்பவும் கொள்ளாதோன்."

அதியமான்பால், புகழத்தக்க மற்றொரு பண்பும உண்டு; அவன் காண்பார்க்கு எளியன்; எளிய பண்புடை யான்; அடக்கம அமரருள் உய்க்கும்; பணியுமாம் என்றும் பெருமை என்பதற்கேற்ப, தன் ஆற்றல் அனைத்தை யும் பிறாக்குப் புலனாகாவாறு அடக்கிவைத்துக் கொள் பவன்; ஓடுமீன் ஓட, உறுமீன் வருமளவும் வாடியிருக் கும் கொக்கேபோல், ஏற்ற காலத்தை எதிர்நோக்கி யிருப் பார், அக்காலம் வரும்வரை, இந்தப் பூனையும் பால் குடிக் குமா என்பதைபபோல் ஏதும அறியாதார்போல் அடங்கி யிருப்பர்; காலம் வந்தவிடத்துப் புலியெனப் பாய்ந்து காரியத்தை முடிப்பர்; "கொக்கொக்க கூம்பும் பரு வத்து; மற்றதன் குத்தொக்க சீர்த்த விடத்து" என்பது வள்ளுவர் கண்ட போர்முறை; அதியமான் அப போர் முறை யுணர்ந்த பெருவீரன்; ஆகவே, தன் ஆற்றலை வெளியிடும் காலம் வருவதற்குமுன், தன்னிடம அவ்வாற் றல் இருப்பதாகவே காட்டிக்கொள்ளான்; ஆனல், அக் காலம் வந்துவிட்டது எனிலோ, தன் ஆற்றல் அவ்வளவை யும் வெளியாக்கி வெற்றிபெறுவன்; பழங்காலத்தில், மக்கள் தமக்கு வேண்டிய நெருப்பினை உண்டாக்க மேற் கொண்ட முறைகளுள், தீக்கடைகோலை, மரங்களுக் கிடையே இட்டுக் கடைந்து, தீ உண்டாக்குவதும் ஒன்றும்; கடைந்தவழிப் பெருநெருப்பை வெளியிடும ஆற்றல் வாய்ந்த அத் தீக்கடைகோல், தொழிற்படுதற்கு முன்னர், எத்த கைய தீங்கும் அற்ற நல்ல பொருளாகக் கருதப்பட்டு வீட் டுக் கூரைகளிலும் செருகி வைக்கப்பெறும். அத் தீக்கடை கோலைப் போன்றே, அதியமானும், மற்றக் காலங்களில் எவரிடத்தும் இனியனாய்ப் பழகி, தன் ஆற்றல் காட்ட வேண்டி வந்தவிடத்து, தீக்கடைகோலினின்றும் வெளி யாம் தீ, எல்லாக் கொடுமைகளுக்கும் நிலைக்களமாய் மாறு

வதேபோல், சினங்கொண்டு பகைவரைக் கொன்று குவிப்பதில் கூற்றினையொப்பன்.

இச் சிறப்புக் குணங்களுக்கு நிலைக்களனாய அதியமான், தன் புகழ்பரவும், புலவர்பெருமக்களைப் புரக்கும் பேருள்ளமும் கொண்டிருந்தான்; சிறிது நேரமும் ஒழியாமல், மாரிபோல் ஈயும் வண்மையுடையானவன்; அகமும், முகமும் மலர, அரசவையமர்ந்து அண்டி வருவோர்க்குத் தேர் பல வழங்கிய நாட்கள், அவன் வாழ் நாளில் பலவாம். விருந்தும், மருந்தும் மூன்றுநாள் என்பது வழக்காறு; நேற்று வந்தவரே, இன்றும் பிச்சை ஏந்திவரின், "என்றைக்கும் இதே ஊர்தானா? இன்றைக்கு இந்த ஊர்; நாளைக்கு அடுத்த ஊர் என்று போவது தானே!" எனச் சிறிதும் சிறந்தோரா வாழ்வதையே எங்கும் காண்கிறோம்; அதியன் அத்தகையானல்லன்; "ஒருநாள் அல்ல; இருநாள் அல்ல; பலநாள் தொடர்ந்து, பலரோடு சென்று இரப்பினும், அவ் விரவலர்பால், முதல் நாள் கொண்ட அன்பில் சிறிதும் குறையாத அன்பையே காட்டும் அருள் உள்ளத்தன; ஒருவேளை, பரிசில் அளிப்பதில், அவன் காலம் கடத்துவன் எனினும், அவன் பரிசில் அளித்தல் தவறாது; அளித்தே அனுப்புவன்; யானை, தன் கையில் பற்றிக்கொண்டு, தன் இரு கொம்புகளுக்கிடையே கொண்டுசென்ற உணவுப்பொருள், அதன் வாயினுள் செல்வது எவ்வளவு உறுதியோ, அவ்வளவு உறுதி, அதியமான் வாயில் வந்துநின்றோர், அவன் பரிசிலைப் பெறுவது; ஆகவே, அவன்பால் சென்றால், அவன் புகழ் பாடினால், பரிசில் அளிப்பானோ, மறுப்பானோ என மயங்குதல் வேண்டா" என, அவன்பால் பரிசில்பெற்றுப் பழகியோர் சிலர் கூறுவர்.

அதியமான், இத்தகைய பெருந்தகையாய்ப் புகழ் பரவ வாழ்ந்த காரணத்தால்தான், பரணர் பாடினார்; பெருஞ்சித்திரனார் புகழ்ந்தார்; அவன் அத்தைமகள் நாகையார், என்ற பெண்பாற் புலவரும் பாராட்டினார்; கடையெழுவள்ளல்களுள் ஒருவனவன என உயர்த்திக்

கூறினர், இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனர்; இவ்வாறு ஆண்மையும், அருளும் ஒருங்கே பெற்று, உயர்ந்தோர புகழ வாழ்ந்த காரணத்தால்தான், அவனபால் சென்று, அவனைப்பாடி, அவன் அளிக்கும் பரிசில்பெற விரும்பினர் ஔவையாரும்.

விரும்பிய ஔவையார், காடும், மலையும் பல கடந்து தகடூர் சென்று சேர்ந்தார்: அரண்மனைவாயில் அடைந்து, "ஔவை வந்துள்ளாள் அரசனைநாடி" என்று அறிவித்துச சிறிது இருந்தனர்; அதியமான், அவரை விரைந்து வரவேற்றன் இல்லை; ஔவையார்க்கு ஆத்திரம் மூண்டது: மதியாதார் கடைவாயில் மிதியாமை கோடியுறும் என்ற உயர் பேருள்ளம் உடையார். அவர் தம் பாடலைக் கேட்கப் பேரரசர் பலர் ஏங்கிக் கிடக்கின்றனர்; அவ்வளவு உயர்வுடையார் அவர்; அத்தகையார், அவன் அரண்மனை வாயிலில் வந்து நிற்பவும, வரவேற்கவில்லை எனின், அவர்கு ஆத்திரம் மூண்டதில் வியப்பொன்றும இல்லையன்றே! உடனே வாயில் காவலனை விளித்தார்; "உங்கள் அரசன் வாயிலில் வந்துநிற்கும் என்போன்ற புலவர்கள், பொருளால் வறியரே ஆயினும், புலமையால் வறியர் அல்லர்; அவர்கள் பாடிப் பிழைப்பர் எனினும், வழியில் போவார் எவரையும பாடி ஏமாறும் இழிவுடையாரல்லர்; வண்மையுடையாரை வரிசையான் அறிந்தே பாடுவா; அவர் பாடிய பாடல் பயனற்றுப்போனது இதுவரை இல்லை: வள்ளல்களைப பாடிய பாடல்கள், அப்புலவர்கள், உள்ளததே யுள்ளியதை முடித்துத் தருவதில் ஒருபோதும் தவறியது இல்லை; உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளமுடையோரே எனினும், புரவலர்பால் சென்று, பரிசில் பெறுவதில் பேரார்வம் கொண்டேநிற்பர்; அத்தகைய இரவலர்தமக்கு, 'இல்லை' என்றுகூறி அடைக்கும் வாயில் அன்று, உஙகள் அரசன் வாயில் என மதித்தே யானும இங்கு வநதேன்; ஆனல், அதியமான் அன்புடன் வரவேற்றன் இல்லை; என் உண்மை உயர்வை உள்ளவாறு உணரும் அறிவு இல்லையோ; அல்லது அவன்

தன் உண்மைநிலையை உயர்த்தி மதிப்பிட்டு விட்டானோ அறியேன்; எவ்வாறாயினும் ஆகுக; புலவர்தம் உயர்வை உள்ளவாறு உணரும் அறிவும், அவரை அன்புடன் ஏற்றுப் போற்றிக் காப்பதால் பெறும் புகழும் உடையவர் அனைவரும் அழிய, உலகம் வறுமை எய்திவிடவில்லை: ஆகவே, புறப்படுகின்றேன் வந்தவழிநோக்கி; மரத் தொழில் வல்ல மக்கள், ஏற்ற கருவிகளுடன், எந்தக் காட்டிற்குள் சென்றாலும், அவர்க்கு அக் காடுமுற்றும் பயன் அளிப்பதேபோன்று, நாங்கள் எங்குச் செல்லினும் மங்காது எங்கள் புகழ், கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு," என்று சினந்து கூறித் திரும்பினர்.

"வாயிலோயே! வாயிலோயே!
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித், தாம்
உள்ளியது முடிக்கும், உரனுடை உள்ளத்து,
வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க்கு அடையா வாயி லோயே!!!
கடுமான் தோன்றல், நெடுமான் அஞ்சி,
தன் அறியலன் கொல்? என் அறியலன் கொல்?
அறிவும், புகழும் உடையோர் மாய்ந்தென,
வறுந்தலை உலகமும் அன்றே; அதனால்
காவினெம் கலனே; சுருக்கினெம் கலப்பை;
மரங்கொல் தச்சன், கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே!
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே."

(புறம் : உ0௬)

அதியமான் காதிற்கு எட்டியது இச் செய்தி.

"குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது" (திருக்குறள்: உ௯)

என்பதை அறிந்தவன் அவன்; ஆகவே விரைந்தான் ஔவை இருந்த வாயில் நோக்கி; அகமும், முகமும் மலர அன்புமொழி கூறி வரவேற்றான்.

ஔவையார் வறுமையில்வாடி வருந்துபவர்; அரச வாழ்வில் அகமகிழ்ந்திருக்கும் மன்னன் தான் என்று வேற்றுமை பாராட்டினன் அல்லன் அதியமான்; அழுக்கேறி முடைநாறும் அவர் தலை, நீரில் வளர்ந்து முதிர்ந்த நீர்ப்பாசியின் வேர்போல் நெகிழ்ந்து கிழிந்துபோன அவர் ஆடை, இவைகண்டு அவரை அணுக அருவருப்புக் கொண்டானல்லன்; ஆண்டுமுதிர்வால் ஆடித்தளரும் அவரை அணைத்துக்கொண்டே அழைத்துச்சென்றான் அரண்மனையுள்ளே; அவர்தம் வழிநடைத்தளர்ச்சியும், உடல்மாசும் ஒருங்கேபோக நீராட்டினான். அழுக்கேறிய அவர் ஆடையை நீக்கி, மல்லிகைமலர்போல் மென்மையும், வெண்மையும் வாய்ந்த ஆடை அளித்தான்; இருக்கையில அருகே இருத்தி, திங்களைச் சூழ்ந்த உடுக்களே போன்று, பொன்னாலான சிறுகலம பல சூழ இடையே அமைந்த வெள்ளியாலான வெண்கலத்தில் கறிவிரவு நெய்சோறிட்டு, அதைக் கையாலெடுத்து ஊட்டினான்; மேலும் அவர் மகிழ்ந்து பாடுமாறு, மணம் வீசும் தேன்பல அளித்து மகிழ்ந்தான்; இவ்வாறு ஔவையாரை வரவேற்று ஆவனசெய்து வழிபட்ட அவன், அவரோடுவந்து, அவ்வூர்ப் பொதுவிடத்தே அயர்ந்து வதியும அவர் தம் சுற்றத்தாரையும் அழைத்து, அவர்க்கும், அவர்வறுமை நீங்கும அளவு வேண்டும் செந்நெற்குவியல் பல அளித்துச் சிறப்புச் செய்தான்.

அதியமான் வழிபட, அவன் அரசவைப்புலவராய் அமர்ந்திருந்தார் ஔவையார், ஒருநாள் அதியமானுக்கு அருமையான நெல்லிக்கனியொன்று கிடைத்தது; அதியமான் தகடூர்க்கணமையில் ஒருபெருமலை; அம மலையின் உச்சி அடைதற்கரிய உயரமும் அருமையும் உடையது; அங்கே உளது ஓர் அருமையான நெல்லிமரம்; அதிலுள்ள கனி, உண்டார் உடலை ஊறுஇன்றி நெடுநாள் வாழச் செய்யும் ஆற்றல் வாய்ந்தது; அக் கனியில் ஒன்றை அரும் பாடுபட்டுக் கொணர்ந்தான் அதியமான். அக் கனியுடன் அரண்மனை நுழைந்த அதியமான், அரண்மனையில் ஔவை

யார் இருப்பது கண்டான்; அவன் எண்ணம் மாறிற்று; தன்னினும் அவரே உலகில் வாழத்தக்கவர்; தான் வாழ்வதினும், அவர் வாழின் உலகிற்குப் பெரும்பயன் விளையும் என்று எண்ணினான். ஆகவே, அந் நெல்லிக்கனியினை ஔவையார்க்கே அளிப்பது என முடிவுசெய்தான். ஆனால், ஔவையார் அக் கனியின் அருமை அறியின் அதை அவர் உண்ண மறுப்பார்; தன்னையே உண்ண வற்புறுத்துவர் என்பதையும் அறிந்தான்; ஆகவே, அக் கனியின் அருமை பெருமைகளை அவர்க்கு முன்னர் அறிவியாதே, அதை ஔவையார்க்கு அளித்தான்; அன்புடையார் அளிக்கப் பெறுவன யாவையே யாயினும், அவற்றை இனிமை நிறைந்ததாகக் கொண்டு ஏற்றுக்கொள்வதே ஔவையார் பண்பாதலின், அது எளிதான நெல்லிக்கனி தானே என்று குறைவாக மதியாது, அன்புடன் வாங்கி வாயிலிட்டு உண்டார். அவர், அதை உண்டார் என்பதறிந்த அதியமான், ஔவையாரை நோக்கி, "அறிவுசான்ற ஔவையே! தாங்கள் இப்போது உண்ட நெல்லிக்கனி ஏனைய கனிகளைப் போன்றதன்று; உண்டார், கேடின்றி நீண்டநாள் இந்நில உலகில் வாழ்வர்; அவ்வளவு அருமையுடையது; மேலும் எளிதில் கிடைக்கக் கூடியதுமன்று; நானும், இவ் வுலகமும் வாழ்வது, தங்கள் அறிவுடைமையால்; தங்களைப்போன்ற பெரியோர்கள் வாழ்வதாலேயே உலகம் வாழ்கிறது; ஆகவே, தாங்கள் வாழவேண்டும் பல்லாண்டு என விரும்பினேன்; ஆகவே, தங்களுக்களித்தேன் இக் கனியினை; இக் கனியின் சிறப்பைத் தங்களுக்கு முன்னரே அறிவித்திருப்பின், அதைத் தாங்கள் உண்ண மறுத்து என்பால் கொண்ட அன்பின் மிகுதியால் என்னையே உண்ண வேண்டுவீர் என்று அறிந்தே, அதை முன்னர் அறிவியாது போனேன்," என்று அக் கனியின் அருமையினை ஔவையார் உணரச் செய்தான்.

அக் கனியினை உண்ட ஔவையார், அதியமான் அதைத் தான் உண்ண மறுத்ததோடு, அதன் அருமையை அறிவியாது அளித்த அவன் அன்பின் பெருக்கை அறிந்து

மகிழ்ந்து, அவனைப் பெரிதும் பாராட்டி, அவன் நெடுநா
வாழ வாழ்த்தினர்; மருந்து முதலாயின அளித்து ஒ
வரை வாழவைப்பதினும், நல்லோர் வாழ்த்துரை பெற்று
பிறரை வாழவைப்பதே சிறந்த முறையாம் என்பதை அற்
தவர் ஆதலின் அவனை வாயார வாழ்த்தி வாழச் செய்தா
அதியமானின் செயற்கரும் இச்செயல், ஔவையாராலேயே
அன்றி வேறு பலராலும் பாராட்டும் பெருமை பெறு
தாயிற்று. "மால்வரைக் கமழ்பூஞ்சாரல் கவினிய நெல்
அமிழ்துவிளை தீங்கனி ஔவைக்கு ஈந்த அதிகன்" என்.
பாராட்டினர் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனா
"இனிய கனிகள் என்றது, ஔவை உண்ட நெல்லிக்க
போல அமிழ்தாவனவற்றை" என்று பாராட்டின
பரிமேலழகியார்.

அதியமானுடைய அரசவைப் புலவராய் அமர்ந்
அவன் அன்பிற்குரியராய் இருந்த ஔவையார், அவ
புகழ் பாடுவது, அதற்கு அவன் அளிக்கும் பரிசி
பெறுவது என்பதோடு அமைதிகொள்ள விரும்பினரல்ல
பாடிப் பிழைப்பது ஒன்றே புலவர்தொழில் என
கொள்ளும் குறுகிய உள்ளம் உடையாரல்லர் அவ
தம்மை அன்புடன் ஆதரிக்கும் அரசனும், அவன் நாடுே
யன்றித் தமிழக முழுதுமே நல்வாழ்வு வாழ்தல் வேண்டு
என விரும்பி, அதற்குத் தம்மாலான தொண்டாற்றலு
தம்கடனே எனக் கொள்ளும் உயர் பேருள்ளம் உடைய
அவர்; ஆதலின், அதியமான் அரசியலிலும் பெரும்பங்
கொள்வதை விரும்பி மேற்கொண்டார் அவர். அதியமா
போர்வேட்கை மிக்க பெருவீரனாய் இருத்தலின், அவனு
குப் பகைவர் பலராயினர்; அப் பகைவரால் ஊறுநேருமே
அவனுக்கு என எண்ணும்போதெல்லாம் அவர் உள்ள
துணுக்குறும்; ஆகவே, அப் பகைவர் படையெடுப்
நிகழாவண்ணம் பார்த்துக் கொள்வதை அவர் பெரிது
விரும்பினர்.

அதியமான் ஆற்றல் மிக்கவன்; ஆற்றல்மிக்க பெரு
படை உடையான்; ஆதலின், அவன் படைவலி காட்

அவன் பகைவர்க்கு அச்சம் உண்டாகச் செய்தால் ஒரு வேளை போர் நிகழ்வதைத் தடுத்தலும் கூடும் என எண்ணினார்; ஆகவே, அதியமான் பகைவர்களை நோக்கிக் கீழ்வரும் அறிவுரைகளைக் கூறலாயினர்; "தன்பால்வரும் இரவலர்க்குப் பரிசாக அவன் அளிக்கும் தேர்களை, மாறுது பெய்யும் மழைத்துளிக்கு உவமை கூறுவர் புலவர் எனின் அவன் தேர்ப்படையின் பெருமை என்னல் கூறல் இயலாது; அவன் நாட்டுத் தச்சர் ஒவ்வொருவரும், நாள் ஒன்றிற்கு எட்டுத்தேர் செய்யும் அளவு தொழில் துணைபுரியும் இயல்பினர்; ஆதலின் அவன் தேர்ப்படை மிக்கோன் என்பது தெளிவு; கோடுகளிற் செறிக்கப்பெற்ற இரும்புத் தொடிகள் பிளவுறுமாறு பகைவர் கோட்டை வாயிற்கதவைக் குத்திக்குத்தி அழிக்கும் ஆற்றல் வாய்ந்தது அவன் யானைப்படை; போர்க்களத்தே பரந்து வந்து, ஒன்று கூடித் தாக்கும் வீரர்களின், மாலை யணிந்து மலர்ந்த மார்பு பிளந்து உருவழியுமாறு துதித்துப் பாய்ந்து ஓடுதலால், அவர்தம் இரத்தக் கறைபட்ட காலுடையன அவன் குதிரைப்படை; பகைவரை வெட்டி வெட்டி மழுங்கின வாள், பகைவரைக் குத்திக் குத்திக் கோடும், நுதியும் சிதைந்து, செப்பனிடப்பெற்ற வேல் ஆகியவற்றை ஏந்தி, அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எதிர்மண்டும் அரவினை யொத்த ஆற்றல் வாய்ந்து விளங்குவர் அவன் வீரர்கள்; அவன் படை பெரிதே எனினும், அப் படையினைப் பயன் கொள்ளும் அவன், அதற்குத் தகுதியிலனாயின்,

"நிலைமக்கள் சால உடைத்தெனினும், தானை
தலைமக்கள் இல்வழி இல்." (திருக்குறள்: ௭௭0)

எனக்கூறும் வள்ளுவர் வாக்கேபோல், அப் பெரும்படையால் பயன் இன்றும் என எண்ணத் தோன்றும். ஆனால், அதியமான் அத்தகையான் அல்லன்; அப் பெரும்படையினைப் பணிகொள்ளும் பேராற்றல் பெற்றவன்; அதற்கேற்ற உடற்கட்டும் உறுதியும் ஊக்கமும் உடையான்; படையைப்போன்றே அவனும் போர்வேட்கை மிக்கோனே; ஆகவே, பகைவீர்! 'அதியமான், இளையன்;

எளியன்' என்று இகழன்மின்! அவனோடு போரிட்டு யாமும் வெல்வோம் என்று எண்ணன்மின்! உங்கள் நாடும் ஊரும் உங்களுக்கே உரித்தாக விரும்பின், அவன் வேண்டும் திறைகொடுத்து உய்ம்மின்! மறுப்பின் அவன் விடான்; இவ்வாறு நான் கூறுவன கேட்டு நடவீராயின், நீங்கள், உங்கள் உரிமை மகளிரைப் பிரிந்து உயர்ந்தோர் உலகம் செல்வது உறுதி; ஆதலின் களம்புகல் கனவிலும் கருதன்மின்!''

இவ்வாறு, அவன் பகைவர்க்கு அறிவுரை கூறி, போர் நிகழாவண்ணம் முயன்ற ஔவையார் அவ் வறிவுரையினை அதியமானுக்கும் கூறத்தவறினாரல்லர். "புலியொன்று சீறி எழுந்தக்கால், அதை எதிர்த்துத் தாக்கவல்ல மானைக் கண்டார் யாரும் இலர்; செஞ்ஞாயிறு சிவந்து தோன்றிய பின்னரும், இருள் நீங்காது அதன்முன் நிற்பதுண்டோ? இல்லையன்றே! பாரும் அச்சும் ஒன்றோடொன்று பொருந்தி உராயுமாறு, மிக்கபாரம் ஏற்றப்பட்ட வண்டி மணலின்கண் ஆழப்புதைந்த வழியும், அப் பாரம் கண்டு சிறிதும் கலங்காது, தன்கால்பட்டு மணல் பரக்கவும், கல் பிளக்கவும் நடக்கவல்ல எருதிற்குப் போதற்கரிய வழியிது எனக் கூறத்தக்க வழியெதையும் காட்டல் இயலாது; அதைப்போன்றே, அரும்போர்வல்ல அதிய! நீ போர்க்களம் நோக்கிப் புறப்படின், நின்னை எதிர்த்துத் தாக்கவல்ல வீரரும் உளரோ? இல்லையன்றோ? ஆதலின் களம்புகல் கருதற்க!''

"மறப்புலி உடலின் மான்கணம் உளவோ?
மருளின் விசும்பின் மாதிரத்து ஈண்டிய
இருளும் உண்டோ, ஞாயிறு சினவின்?
அச்சொடு தாக்கிப் பார்உற்று இயங்கிய
பண்டச் சாகாட்டு ஆழ்ச்சி சொல்லிய
அரிமணல் ஞெமரக், கல்பக, நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ?
எழுமரம் கடுக்கும் தாள்தோய் தடக்கை,

வழுவில் வன்கை மழவர் பெரும!
இருநிலம் மண்கொண்டு சிலைக்கும்
பொருநரும் உளரோ நீகளம் புகினே?" (புறம்: ௯0)

என்று அதியமானுக்கும் அறிவுரை கூறினார் ஔவையார்.

ஆனால் அதியன் ஆத்திரம் அடங்குவோனாகத் தோன்றவில்லை; ஔவையார் அறவுரை அவன் காதில் நுழைந்திலது; அவன் போர்வேட்கையும், வெறியும் ஔவையார் அறிவுரையினையும் வெல்லும் ஆற்றல் வாய்ந்தன ஆயின; அவன், அவரை நோக்கி "அன்புடையீர்! பகைவர் என் படைவலி கண்டு பயந்து பணிந்துபோவர்; பாய்ந்து தாக்கார் எனறெல்லாம் கூறுகின்றீர்; ஆனால், பகைவர்பால் அப்பண்பு காணல் அரிது; அதோ பாரமின், அவர்கள் போருக்கான முன்னேற்பாடுகளை முறையாக மேற்கொள்கின்றனர்; நம யானைப்படை நடமாடல் கண்ட அபபகைவர், தங்கள் அரணைச் சேர்ந்த வாயில்கட்கெல்லாம், கதவும் கணையமரமும் புதியவாகப் பொருத்துகின்றனா; நம் குதிரைப்படையின் குளம்பொலி கேட்ட அவர்கள் அதைத் தடுத்து நிறுத்துமாறு, தம் காட்டு வாயில்களை எல்லாம் இரண்டிரண்டாகக் கவைத்த வேல முட்கொண்டு அடைக்கத் தொடங்கிவிட்டனர்; நம் வீரர் ஏந்திய வேற்படை கண்டு வெருண்ட அவர்கள், தங்கள் கேடயங்களுக்கெல்லாம் பிடி பொருத்தத் துணிகின்றனர்; இவை எல்லாவற்றிற்கும மேலாக, பேராண்மை மிக்க நம் போர்வீரர், போர்ப் பரணிப்பாடல் கேட்ட அவர்கள், தங்கள் அம்பறாத்தூணிகளில் அம்புகளை அடைக்கவுமாயினர்; இவ்வாறு நம் படைகண்டு பயந்துபோவதன்றி, அவற்றின் எதிர்ப்பை ஏற்று நடத்துதற்கான ஏற்பாடுகளை மேற்கொள்ளும் அவர்களா பணிநதுபோவர்? பணியார். அவரைப் போரிட்டுப் பணியவைத்தல் இயலுமே அன்றி அச்சங்காட்டிப் பணியவைத்தல் இயலாது; ஆதலின், அவரை வெல்லாது விடேன்," என வெகுள்வானாயினன்.

அதியன், அவ்வாறு வெகுண்டவிடத்தும், ஔவையார் அமைதிகாணும் ஆர்வத்தை விட்டார் அல்லர்;

"அதிய! நின்னை ஒன்று வினவுகின்றேன்: சினவாது விடை கூறுவாயாக; உயிர் போமளவு உடல்நலம் குன்றிய ஒருவர் அருகில் இருக்கும் அவர் உறவினர், வெண் கடுகுப் புகையினை அவர் இருக்கும் அறையில் எழுப்புகின்றனரே ஏன் தெரியுமா? அவன் உயிரைக் கவர்ந்துசெல்ல வரும் எமன், ஆங்கே ஐயவிப்புகை எழல்கண்டு அஞ்சி, அவன் உயிரைக் கவர அவ்வறையினுள் நுழையாதே திரும்பிவிடுவன் என்ற நம்பிக்கையால் அன்றோ அவர்கள் அப் புகை எழுப்புகின்றனர்? ஆனால், அவர்கள் அவ்வாறு செய்வது கண்டு எமன் அஞ்சி வாராமல் நின்றுவிடுவது உண்டோ? இல்லையன்றே? அதைப்போன்றே, நின் படைவலி கண்ட நின் பகைவர், தற்காப்புமுறைகளை மேற்கொள்கின்றனர் எனினும், அவர்களைத் தப்பாது அழிக்கும் ஆற்றல் நினக்குஉண்டு; அத்தகைய பேராண்மை வாய்ந்தோய் நீ: ஆதலின், அவர் செயல்கண்டு எள்ளி நகையாது, எதிர்த்துப் போரிட நினையாதே! போர் நிகழின், வளமிக்க நாடெல்லாம் நின்படையால் பாழாகும். அது கண்டாவது இரக்க உள்ளம் கொள்வாயாக," என்று வேண்டினார்.

அதியமானுக்கும், அவன் பகைவர்க்கும் அறிவுரை பலகூறி நாட்டில் அமைதிநிலவ முயன்ற ஔவையார், அஃதோடு நில்லாது, அதியமான் பகைவர்பால் தானே நேரில் சென்று அவனகூறி அமைதி காணவும் தயங்கினாரல்லர்; அதியமான் பகைவருள் ஒருவனும், தொண்டையர்குலத் தோன்றலும், பெரும்படை உடையானும் ஆய தொண்டைமான் என்னும் அரசன்பால், அதியமானுக்காகத் தூதுசென்று, அவனிடத்தே, அதியமான் பீடும் பெருமையும் தோன்றக்கூறி, அத் தொண்டைமானை அதியமானோடு போரிட அஞ்சுமாறு செய்து மீண்டார்.

இவ்வாறு, தம்மால் ஆகும்வரை முயன்றும் அமரைத் தடுத்தல் அவரால் இயலாது போயிற்று; அதியமானுக்கும், அவன் பகைவர்க்கும் கடும்போர் தொடங்கிவிட்டது

போரில் புறமுதுகுகாட்டி ஓடி உய்யுமாறு, அப் பகைவருள் ஒருவரையும் விடாது அனைவரையும் கொன்று குவித்தான் அதியமான்; எனினும், அப் பெரும்போரில், அவன் பகைவர் ஏவிய அம்பொன்றுபட்டு, அவன் மிடற்றில் புண் ஒன்று உண்டாகிவிட்டது; அப் புண்ணைக் காணக் காண, அதியமான், அடிபட்ட புலியெனச் சினந்து சீறி விழுவானாயினன்; எதிர்க்கும் பகைவர் ஒருவரும் இலராகவும், அவன் ஏந்திய வேலைக் கையினின்றும் கீழே வைத்தானல்லன்; காலில் கட்டிய வீரக்கழலையும் அவிழ்த்தானல்லன்; வியர்வை வழியும் மெய்யும், சினத்தால் சிவந்த கண்ணும் உடையனாய்ப் போர்க்கோலமே கொண்டு விளங்குவானாயினன்.

அதியமானின் அச் சினநிலை, அவன் பகைவர்க்கும் அவர் தம் நாட்டிற்கும் யாது கேட்டை விளைக்குமோ என அஞ்சினார் ஔவையார்; அதியமானை அணுகி, "அதியர் கோவே! விழுப்புண் பெற்றோம் என வீறுகொண்டு விரைந்து செல்கின்றனையே நீ, அங்குச்சென்று யாரொடு போரிடுவாய்? நின்னொடு போரிட அங்கே யார் உள்ளார்? நின் தூசிப்படைக்கு ஆற்றாது, தோற்று ஓடிப் பிழைத்தார் யாரேனும் இருப்பின் அன்றே, அவர்களைத் தேடிப் பிடித்தாவது போரிடல் இயலும்? நின்னால் புண்பெறாது பிழைத்து ஓடினார் அவருள் ஒருவரும் இலர்; நீ ஒருவன் மட்டுமே புண் பெற்றனை என நினையாதே; நின் பகைவர் அனைவரும், ஒருவர் விடாமல் நின் படைபட்டுப் புண் பெற்றவரே; நீயாவது புண்பெற்றும் இறவாது பிழைத்துளளாய்; ஆனால், புண்பெற்றுப் பிழைத்தார் நின் பகைவருள் ஒருவரும் இலர்; அவர்களனைவரும் நின் அம்பேறுண்டு அழிந்தே போயினர்; ஆதலின், ஆறுக நின் சினம்! அடங்குக நின் ஆத்திரம்! தணிக நின் போர் வெறி!" என்றுகூறி அவன் சினம் மாற்றுவராயினர்.

பகை வளர்தல் அதியமானுக்கு ஆபத்தாம் என்பதறிந்தே, அப் பகை வளராவண்ணம், ஔவையார் எவ்வளவோ முயன்றார் எனினும் முடியவில்லை; முடிவில்

அவன் பகை வளர்ந்தேவிட்டது; அதியமான் போர் வேட்கை, அவனுக்குப் பார்க்குமிட மெங்கும் பகைவர்களைத் தோன்றச் செய்துவிட்டது; இறுதியில் அவன் பகைவர் அனைவரும் ஒன்றுகூடி அதியமானை எதிர்க்கத் துணிந்தனர்; பகைவர் பலரும் ஒன்றுசேர்ந்துவிட்டமையால், அவர் வலிமை, தன் வலியினும் பெரிதாகிவிட்டது தெரிந்த அதியமான், அப் பகைவரை எதிர்த்துத் தாக்குவதைவிட்டுத் தன் தகடூர்க் கோட்டையின் உள்ளே தங்கியிருக்கலாயினன்; அஞ்சி, பகைவர்க்கஞ்சித் தகடூர்க் கோட்டையினுள் அடங்கியது கண்டும், அடங்கினரல்லர் அவன் பகைவர்; அழிக்கலாகா அரண்பல அமைந்தது அவன் தகடூர்க்கோட்டை என்பதையும் எண்ணினரல்லர்; யானைப்படையாலும், குதிரைப்படையாலும் சிறந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்பான் துணைபெற்று அதியமான் அரண்மிக்க தகடூரைத் தாக்கி, அதையும் அழித்து, அவனையும் கொன்று வென்றனர்.

அமர்க்களத்தில் அல்லலுறும் அந்நிலையிலும், தம்பால் வந்து இரந்தாரைப் புரக்கவல்ல அதியமான், அந்தோ! மறைந்துவிட்டான்; அருநெல்லிக்கனியினை ஔவையார்க்கீந்த அதியமான், அந்தோ! மறைந்துவிட்டான்; அரும்பெறற் கரும்பை இவண் கொணர்ந்த அதியர் குலத்தோன்றல் அதியமான், அந்தோ! மறைந்துவிட்டான். அவன் உடலை ஈமத்தீயிட்டு எரித்து, எரித்த அவ்விடத்தில், அவன் பீடும் பெருமையும் பொறித்த கல்லைநட்டு, அக் கல்லிற்குப் பீலியும், மாலையும் சூட்டி வழிபட்டுக் கல் நாட்டு விழாவும் செய்துமுடித்தனர்; அதியமான் அழிவு தன்னால் தடுக்க இயலாதுபோனது காண ஔவையார் உள்ளம் ஆராத்துயரில் ஆழலாயிற்று; அவன் பிரிவு கண்டு அவர் அழுது பாடியபாடல், அனைவரையும் அழச் செய்யும் இரக்கமும் உருக்கமும் வாய்ந்தன.

அதியமான் மறைய, அவனை நினைந்து நினைந்து வருந்தும் ஔவையாருக்கு வாழ்ந்த காலத்தே அவன், அவர்க்குச் செய்தன எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாய் நினைவிற்கு

வரவே, அவர், அவற்றை எண்ணி எண்ணி இரங்குவா ராயினர்.

"கிடைத்த மது சிறிய அளவினதாயின், அது முழு தையும் எமக்கே தந்துவிடுவான். இவ்வாறு, தனக்கென வரையாது எனக்கே கொடுக்கும் அவ் வன்புடையாளனை இனி எங்கே காண்பன்? அளவால் மிக்க மது கிடைப் பின், அதை முதலில் எமக்குக் கொடுத்து, யாங்கள் உண்டு மகிழ்ந்து பாடுவதுகண்டு தான் மகிழ்ந்து, பின்னர் எஞ்சிய மதுவைத் தான் உண்பான்; இப்போது, எம மகிழ்ச்சி தன் மகிழ்ச்சி எனக்கொள்ளும் அவ் வருள் உள்ளம் உடை யானை இனி எங்கே காண்பன்? பெருஞ்சோறு கிடைத்த வழியேயன்றி, சிறுசோறு கிடைத்த வழியும், பலரையும் கூட்டி உடன்வைத்து உண்ணும் உயாவுடையான்; இனி, அவ்வாறு உணவளிக்கும் உயர்வுடையார் யாருளர்? உண் ணும் சோற்றில், கிடைக்கும் எலும்பையும், கறியையும் எடுத்து எமக்கே தருவன், இவ்வாறு விருமபுவன அறிந்து கொடுக்கும் அன்பொடுகலந்த அறிவுடையானை எங்கே காண்பன்? போர்க்களம் புகுந்தால், வேலும், அம்பும் விரைந்து பாயும் இடம் எங்கே என்று கண்டு அங்குச் சென்று போரிடும் ஆற்றலுடையான்; அத்தகைய ஆண் மையாளனை இனிக் காணல் இயலுமா? நரந்தம் பூமணம் நாறும் தன் கையால், புலால் நாறும் என் தலையைத் தட விக் கொடுப்பான் அதியமான்; அத்துணை அன்புடை யாளனை இனிக் காண்டல் அரிதினும் அரிதே; அந்தோ! அவன் பகைவர், அவன் மார்புபிளக்க அம்பு எய்துவிட்ட னரே; அவர் எய்தஅம்பு அதியமான் மார்பிலா தைத்தது? அன்று, அன்று; என்னைப்போன்று இரப்போர்தம் கையில் ஏந்திய உண்கலத்தை உடைத்து, அவர் கையைத்துளைத்து, ஊடுருவிச்சென்று, அதியமானால் புரக்கப்பட்டோர் கண் கள் நீர்மல்க, அருஞ்சொற்கொண்டு அழகிய பாடல் புனை யும் புலவர்தம் நாவிலன்றோ சென்று தைத்துவிட்டது! எனக்கும், என்போன்ற புலவர்க்கும் பற்றுக்கோடாய் விளங்கிய அவன் யாண்டுளன் கொல்லோ? இனிப் பாடும்

புலவரும் இரார்; அவர் பாடல்கேட்டு மகிழ்ந்து பரிசில் அளிக்கும் புரவலரும் இரார்; அதியமான் இறந்தான் என்பதுகொண்டு இரங்குகின்றீர்களே, அவனைப்போல் மறைந்தார் பலர் எனக் கூறத்தோன்றும்; அதியமான் மறைவு, அவர் மறைவு ஆகாது; நீர்த்துறையில் மலர்ந்தும், பிறரால் சூடப்பெறாமல் பயனற்ற பகன்றைப்பூப் போல, பிறர்க்குப் பயனின்றி வாழ்ந்து இறந்தோராவர் அவரெல்லாம்; ஆகவே அவர் மறைவுகுறித்து வருந்துவார் யாரும் இரார்; அத்தகையானல்லன் அதியன். ஆகவே, அதியமான் மறைந்தபின்னர், அவனையின்றிக் கழிகின்ற காலையும் மாலையும் இனி எனக்கு இல்லையாகுக; அவனையின்றி வாழ்வதால் எனக்கும் யாதொரு பயனும் இல்லையாதலின், என் வாழ்நாள் வளராது இன்றோடு ஒழிக," என்றெல்லாம் கூறிப் புலம்பித் துன்புற்றார் ஔவையார்.

"சிறியகள் பெறினே, எமக்குஈயு மன்னே!
பெரியகள் பெறினே,
யாம்பாடத், தான்மகிழ்ந்து உண்ணு மன்னே!
சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே!
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே!
என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்குஈயு மன்னே!
அம்பொடு வேல்நுழை வழியெல்லாம் தான்நிற்கு மன்னே!
நரந்தம் நாறும் தன்கையால்,
புலவு நாறும் என்தலை தைவரு மன்னே!
அருந்தலை இரும்பாணர் அகல்மண்டைத் துளையுரீஇ,
இரப்போர் கையுளும் போகிப்,
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்று,அவன்
அருநிறத்து இயங்கிய வேலே;
ஆசுஆகு எந்தை யாண்டுளன் கொல்லோ?
இனிப், பாடுநரும் இல்லை; பாடுநர்க்கு ஒன்று ஈகுநரும்
பனித்துறைப் பகன்றை நறைக்கொள்மா மலர். [இல்லை;

சூடாது வைகியாங்குப், பிறர்க்கு ஒன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே." (புறம், உ௩௫)

"இல்லா கியரோ காலை மாலை;
அல்லா கியர்யான் வாழும் நாளே." (புறம்: உ௩உ)

(2) பொகுட்டெழினி:

அதியமான் பிரிவால், அவன் வழிவந்தார் வருந்தித் துன்புறுங்கால், ஔவையார் அவன் தகடூரைவிட்டு நீங்கினரல்லர்; அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல் உற்றுழித் தீர்வார் உறவல்லர் என்பதை உணர்ந்தவர் ஔவையார்; அதியமான் மகன், மிக இளையபொகுட்டெழினியோடிருந்து, அவனுக்கும் தம்மாலான துணைபல புரிந்து வாழ்ந்து வந்தார்; அதியமான் மறைவால் அல்லற்பட்டு ஆற்ருது அழும் அவன் நாட்டுமக்கள் நிலைகலங்கி மனந்தளராது, அவன் பிரிவால் நேர்ந்த துன்பம் மறந்து மகிழும் வண்ணம், நாடாள் திறம்பெற்று விளங்கிய நல்லோன் ஆயினன் பொகுட்டெழினி; பொகுட்டெழினியின் இவ் வாட்சித்திறம் கண்டுவியந்த ஔவையார், அவனைப், 'பாரம் மிகுதியாலும் வழிஅருமையாலும் இடைவழியில் வண்டியின் அச்சுமுறிந்துபோயின், அவ்விடத்து உதவுக என்றே எடுத்துச் செல்லும் சேமஅச்சிற்கு ஒப்பாவன்' என்று கூறிப் பாராட்டுவாராயினர்:

"எருதே இளைய; நுகம்உண ராவே;
சகடம்·பண்டம் பெரிதுபெய் தன்றே;
அவலிழியினும், மிசையேறினும்
அவணது அறியுநர் யார்என, உமணர்
கீழ்மரத்து யாத்த சேமஅச் சன்ன
இசைவிளங்கு கவிகை நெடியோய்!" (புறம்: ௧0உ)

பொகுட்டெழினியும், அவன் தந்தை அதியமானைப் போன்றே, பேராற்றலும் போர் வேட்கையும் உடையான்; பகைமன்னர் பலரை வென்று அவன் அரண்களைக் கைக் கொள்வதோடு, அமையாது, ஆங்கு இறந்துவீழ்ந்த வீரர்

களின் உடலினின்றும் வெளிப்போந்த குருதியால் ஈரம் பட்ட நிலத்தில், கழுதை ஏர்பூட்டி உழுது, வெள்ளை வரகும் கொள்ளும் விதைத்து, அப் பகைவர் நாட்டைப் பாழாக்கிப் பார்த்து மகிழும் போர்வெறியும் உடையான்.

பொருட்டெழினி, போர்வேட்கை மிக்குடையனே எனினும், அவனும், அவன் தந்தை அதியனைப்போன்றே, தன்பால் பாடிப் பரிசில் பெறவரும் பாணரையும், பாவலரையும் அன்புடன் ஏற்று, அவர் வறுமைபோகப் பரிசில் பல அளிப்பதோடு, அவரைத் தம்மோடு பலநாள் இருத்தி, உடனிருந்து உண்டு மகிழும் மனநலனும் உடையன்; பொருட்டெழினி, அதியனைப்போன்றே ஆட்சித்திறனும், அருள் உள்ளமும், போர்ப்பயிற்சியும் பெற்ற ஆண்டகையாய் விளங்குவது கண்டு, இனி அவனைக் குறித்துக் கவலை கொள்ள வேண்டுவதின்று என்ற துணிவுடையராய்த் தகடூர் நீங்கிச் செல்வாராயினர் ஔவையார்.

(3) மூவேந்தர்

தகடூர் நீங்கிப் புறப்பட்ட ஔவையார், தமிழகம் முழுதும் சுற்றிவருவாராயினர்; அந்நிலையில், அக்காலத் தமிழ்நாடாண்ட தமிழரசர்களாய, சேரமான் மாரி வெண்கோவும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், வழக்கத்திற்கு மாறுகப், பகை நீங்கி உறவுடையராய் ஒருங்கே இருக்கக்கண்டார்; அக்காட்சி, ஔவையார் உள்ளத்தை, உவகைப் பெருங்கடலுள் ஆழச் செய்தது; அவர்கள் உறவு, தமிழகத்தின் உயர்விற்கு உறுதுணை புரியும் என்பதை உணர்ந்தவர்; ஆகவே, அவ்வொற்றுமை நீடித்துவாழ நினைந்தார்; தம் உள்ள வேட்கை நிறைவேற அவர்க்கு அறிவுரைகூறத் தொடங்கினர்; "தமிழ்ப்பெரு வேந்திர்! தாங்கள் மூவரும், உங்கள் பகைமறந்து உறவுடையராய் ஒன்று கலந்திருக்கும் இக்காட்சி, அந்தணர் வளர்க்கும், ஆகவனீயம், காருகபத்தியம், தென்திசையங்கி என்ற முத்தீயை நினைப்பூட்டுகின்றது; முத்தீயில் ஒன்று குறையினும், அந்தணர் கடனாற்றல் இயலாது;

அஃதே போன்று, மூவரில் ஒருவர் பகைத்து நீங்கினும், தமிழக வாழ்வு தழைக்காது; ஆகவே, நீங்கள் மூவரும் இன்றேபோல் என்றும் கூடி வாழ்வீராக; உங்களுக்கு நான் அறிந்த உலகியல் குறித்து உணர்த்த விரும்புகின்றேன்; அவற்றை உளங்கொளல் வேண்டுவல், ஆளும் உலகம் உயர்ந்தோர்வாழ் தேவருலகொப்ப உயர்ந்ததே ஆயினும், இறந்து போவுழி உடன் வருதல் இல்லை; அன்றியும், தம் வாழ்நாள் உள்ள வரையிலாவது, அந் நாடு தம் ஆட்சியின் கீழ் மாறுதிருக்கும் என்று கூறுவதற்கும் இல்லை; ஆதலின், இங்கு வாழும் வரையில், தம்பால் வந்து ஏற்போர்க்குப் பூவும் பொன்னும் புனல் வார்த்துக் கொடுத்து உதவி, அவர்க்கு வேண்டுவன அளித்து மகிழ்ந்து வாழ்தல் வேண்டும்; இறந்து மறைந்து போவுழி, நாம் இவ் வுலகில் வாழுங்காலத்துச் செய்த இதுபோன்ற இந்நல்வினையல்லது, இந்நாடோ, இந்நாட்டுச் செல்வமோ நமக்குத் துணையாகா; நல்வினையே நற்றுணையாம் என்பதை உணர்ந்து வாழ்மின்." என்று வாழ்த்தி விடைபெற்றுப் போயினர்.

"நாகத் தன்ன பாகார் மண்டிலம்
தமவே யாயினும், தம்மொடு செல்லா;
வேற்ருே ராயினும் நோற்ருேர்க்கு ஒழியும்:
ஏற்ற பார்ப்பார்க்கு ஈரங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனலபடச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய
நாரரி தேறல் மாந்த, மகிழ்சிறந்து,
இரவலர்க்கு அருங்கலம் அருகாது வீசி
வாழ்தல்வேண்டும் இவண் வரைந்த வைகல்:
வாழச் செய்த நல்வினை யல்லது
ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை;
ஒன்றுபுரிந்து அடங்கிய இருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக இருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்!
யானறி அளவையோ இதுவே; வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும், இம்மென
இயங்கு மாமழை உறையினும்
உயர்ந்து மேந்தோன்றிப் பொலிக நும் நாளே!"

(புறம்: கூசுஎ)

## (4) நாஞ்சிற் பொருநன் :

ஔவையார் காலத்தே, நாஞ்சில்நாட்டு நாஞ்சில்மலைக் குரியோன் ஒருவன் இருந்தனன். அவன் நாஞ்சிற்பொரு நன் எனவும், நாஞ்சில்வள்ளுவன் எனவும் அழைக்கப் பெறுவன்; பெரிய வீரன்; சிறந்த கொடையாளி; அவன் பால் பரிசில் பெற விரும்பும் புலவர்கள், அவன் நாடு கடத்தற்கரிய கொடு வழிகளை இடையில் உடையது என் பதையும் எண்ணுமல், அவற்றைக் கடந்துசென்று அவனைப் பாடிப் பரிசில் பெறுவர்; மூவரைப் பாடிப் பரிசில் பெற வேண்டுமென விரும்பாதவரும், இவனைப் பாடிப் பரிசில் பெறுவதை, விரும்புவர் என ஒரு புலவர் கூறுகின்றூர் எனின், அவன் பெருமையை மேலும் எடுத்துக் கூற வேண்டியதின்று; அவனைப் பாடிப் பரிசில் பெற விரும் பிஞர் ஔவையார்; பலாமரம், பல வளர்ந்து வளம் பெற் றிருக்கும் அவன் நாஞ்சில்மலை யடைந்து அவனைக் கண்டு பாராட்டிஞர்: அவன், தன் பெருமை தோன்றப் பெரிய யானை ஒன்றைப் பரிசாக அளித்தான்; அதைப் பெற்றுக் கொண்ட ஔவையார், அவனைப் பாராட்டிய பாடல் மிகவும் நயமுடையது. அவனைப் பாடிய புலவர்களை நோக்கி, "புலவர் பெருமக்களே! 'எங்கள் நாக்கு, செம்மையான நாக்கு; தகுதியில்லோர் செல்வம் வியத்தல் செல்லாப் பெருமை மிககது எங்கள் நாக்கு' என்றெல்லாம் பெருமை கொள்கிறீர்களே, அவ்வாறு பெருமை கொள்ளும் நீங்கள், கடைசியில் அறிவிற் குறைந்த இவனைப் போய்ப் பாடினீர் களே; இவன் அறிவின்மைக்கு ஓர் எடுத்துக் காட்டுக் கூறுகிறேன் கேளுங்கள்; வீட்டில் அரிசியில்லாக் குறை யால், பெண்கள், கொல்லையில் விளைந்திருக்கும் கீரையைப் பறித்துக் கொணர்ந்து உணவாக்கி வைத்திருந்தனர்; அக் கீரை உணவை மட்டும் உண்ணுவதா என்ற எண்ணத்தால், இந் நாஞ்சிற் பொருநன்பால் சென்று, சிறிது அரிசி வாங்கி வருவோம் என்று அவன்பால் சென்று பாடினேன்; அவன் என்ன கொடுத்தான் தெரியுமா? பாலை நிலத்திற் கிடையே படுத்திருக்கும் பெருமலை போன்ற பெரிய யானை ஒன்றைக் கொடுத்தான்; அதைக்கண்ட நான், 'ஐய! எங்க

ளுக்கு இப்போது வேண்டுவது அரிசி ; அரிசியில்லாமை யால் பசியால் வருந்துமெங்களுக்கு யானையைக் கொடுக் கிறீர்களே, இது முறையா? இதைக் கொண்டு போய் நாங்கள் என்ன செய்வது? எங்கள் சிறு வயிற்றிற்கே உணவின்றி வாடும் நாஙகள், இப் பெரிய யானையை எவ்வாறு பேண வல்லேம்?' என்று குறை கூறினேன். அவ்வாறு கூறியும் அதைப் புரிந்து கொள்ளும் அறிவு அவன்பால் இருப்பதாகத் தெரியவில்லை ; அதற்கு அவன் கூறினான் : 'நீங்கள் உங்கள் நிலைக்கு ஏற்ற பொருளை என்பால் வேண்டினீர்கள் ; அதைப் போன்றே, நானும் என்னுடைய தகுதியை எண்ணி, யானையைப் பரிசாக அளித்தேன் ; அவ்வாறு கொடுப்பதுதான் என் தகுதிக் கும், பெருமைக்கும் உரியது' என்றான்; இவ்வாறு யாருக்கு எதைக் கொடுப்பது என்பதையும், தன்னுடைய கடமை யாது என்பதையும் எண்ணிப் பாராமல் நடக்கும் இவனை அறிவுடையான் என்று எவ்வாறு கொள்வது? இவன் உண்மையில் அறிவற்றவனே ; அறிவற்ற இவனைப் பாடி னீர்களே ; உங்கள் நாக்கும ஒரு நாக்கா?'' என்று கூறி அவன் புகழ் விளங்கப் பாடினார்.

"தடவுநிலைப் பலவின் நாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற : செந்நாப் புலவீர் !
வளைக்கை விறலியா படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக, யாம்சில
அரிசி வேண்டினெ மாகத் தான்பிற
வரிசை அறிதலின் தன்னும் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கியோனே ; அன்னதோர்
தேற்றா ஈகையும் உளதுகொல்
போற்றார் அம்ம ! பெரியோர்தம் கடனே." (புறம்:கசo)

இவ்வாறு அரசர்களைப் பாடிய ஔவையார், தம்மைப் போன்ற புலவர்களாய, கபிலர், பரணர், வெள்ளிவீதியார் முதலியோரையும் பாராட்டிப் பாடியுள்ளார் ; அவர் குறித்து ஔவையார் பாராட்டியதை, 'ஔவையார் வரலாறு' என்ற தலைப்பின்கீழ்க் கண்டுகொள்க.

## ௬. ஔவையார் சென்ற தூது

பிறநாட்டு அரசரவையில், தூதுவராயமர்ந்து தொழி லாற்றப் பெண் ஒருத்தி சென்றாள் என்ற பெருமையை முதற்கண் பெற்ற நாடு, நம் பைந்தமிழ் நாடே; ஒரு நாட்டு அரசியல் தூதுவர், பிறநாடுகளில் தொழிலாற்றுவதை இன்று நாம் காண்கிறோம் என்றாலும், இன்று தூதுவர் அனுப்பப் பெறுதல், பகைவர் வாழ் நாடுகளுக்கு அன்று; இரு நாடுகளுக்குமிடையே பகையின்றி யாதேனும் ஒரு வகையால் உறவுடைய நாடுகளுக்கு மட்டுமே, அன்னார் அனுப்பப் பெறுகின்றனர்; அந் நாடுகளோடு நட்புறவு அற்றுப் பகை தோன்றிவிட்டது; இனிப் போர் மூண்டு விடும் என அறிந்தவுடனே, அந் நாடுகளுக்கு அனுப்பப் பெற்றிருந்த அரசியல் தூதுவர் திருப்பி அழைக்கப்பட்டு விடுவர்; ஆகவே பகை தோன்றா வரை, அது தோன்றா திருக்குமாறு பார்த்துக் கொள்வதே, இக்கால அரசியல் தூதுவர் ஆற்றும் பணியாம்; உள்ள பகையைப் போக்க உழைப்பதன்று அவர்கள் தொழில்; ஆனால், பண்டைக் காலத்தில், தூதுவர், நட்பரசர் அவைக்கு அனுப்பப்படுவதி னும், பகையரசர் அவைக்கு அனுப்பப்படுதலே மிகுதியாம் உள்ள உறவை வளர்த்துப் புதுப் பகை தோன்றாமல் பார்த் துக் கொள்வதினும், உள்ள பகையை ஒழிக்க முயல்வதே அக்காலத் தூதுவர் ஆற்றவேண்டிய அரும்பணியாம்; ஆகவே, இக்காலத் தூதுவர் தொழிலினும், அக்காலத் தூதுவர் தொழில், தொல்லை நிறைந்தது என்பது தெளிவு; தொல்லை தரும் அத் தொழிலினைத்தான் துணிந்து மேற் கொண்டார் ஒருவர்; அவர், பெருமையும், உரனும் பிறவிக் குணமாய்க் கொண்ட ஆடவர் இனத்தைச் சார்ந்தவர் அன்று; அச்சமும், நாணும், மடனும் ஆயவற்றை அணி யெனக் கொண்ட பெண் குலத்திலே பிறந்தாரொருவர்; என்றால், அது, பெருமைக்குரிய செயலன்றோ? செயற் கரிய செய்வாரன்றோ பெரியார்? அவ் வரும்பெரும் செயல் செய்த பெண்டிர்ப் பெருந்தகையார் ஔவையா ராவர்.

வேற்று வேந்தர்பால் தூதுரைக்கச் செல்பவர், தாம் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவான், ஓலை கொடுத்து நிற்பான் என மூன்றுவகையினராவர். தம் அரசரிடத்தும் தாம் பிறந்த நற்குடியிடத்தும நிறைந்த அன்புடையராதல், தூதுவர்பால் அமையவேண்டிய முதற்பெரும் பண்பாம். நற்குடி என்ற புகழைப் பெறுதற்கேற்ற குணங்கள் எல்லா வற்றாலும் நிறைநத குடியில் பிறந்தாரையே, தூதுசெல் தொழிற்கு மேற்கொள்வர் அக்கால அரசர்கள். பெயர் கேட்ட அளவிலேயே, தம் அரசராலும், பகையரசர்க ளாலும் விரும்பிப் பாராட்டத்தக்க பண்புடையராதலும் தூதுவர்க்கோர் இலக்கணமாம்.

தூதுரைக்கச் செல்வோர், தம அரசனுக்குத் தமமால் ஆவன யாவை என்பதை இயல்பாகவே உணரும் நல்லறி வோடு, கற்கவேண்டுவன யாவை என அறிநது, கற்று உணடான நூல்அறிவும் உடையராதல், அவா மேற் கொண்ட தொழிற்கு இன்றியமையாததாம் ஒருவன் நற்குண நற்செயலகளைக் கேட்டு அறியாதாா, முதற்கண் அவனைககாண நேரின், அவர் மனததிடை அவனைப்பற்றிய விருபபு வெறுப்புக்களைத் தோற்றுவிப்பது அவன் உடல் தோற்றமே ஆம்; ஆதலின், தூதுவர், கண்டாரால் விரும் பப்படும் தோற்றப் பொலிவுடையராதலும் வேண்டும்.

தம்மொடு மாறுபடுவார் அனைவரையும் கொன்று ஒழித்தலையே தொழிலாகக் கொள்வது வேநதர் இயல்பு; அத்தகையார் ஒப்பாத ஒன்றை ஒபபவைக்கவே தூதுவர் செல்வர்; ஆதலின் தூதுவர்பால் எடுத்த எடுப்பிலேயே பகையரசர் சினங்கொண்டு சீறிவிழுவர்; ஆதலின், அவ் வரசரிடையே தூதுரைக்கச் செல்வார், இதைக்கூறின், நம் உயிர்க்கும், உடற்கும் ஏதம்பல உண்டாகுமே என அஞ் சாது, தம் அரசற்கு ஆவனவற்றை எடுத்து இயம்பவல்ல அஞ்சாமை உடையராதலும் வேண்டும.

பொதுவாக அரசர் எவர்க்கும் பொறுமை என்பதே இராது; வேற்றரசர் விடுத்த தூதுவன் கூறுவனவற்றை அவர்கள் காதுகொடுத்துக் கேட்பர் என எதிர்பார்த்தல்

கனவிலும் இயலாது ; ஆதலின், தூதுரைக்கச் செல்வோர், சுருங்கககூறி விளஙகவைக்கும் வல்லமை உடையராதல் வேண்டும் ; அன்றியும், அவனிடத்தில, தம் அரசனுக்கு ஆகவேண்டுவன அவ்வளவையும், ஒன்று, இரண்டு என எண்ணிட்டுக் கூறுதல் கூடாது ; இவ்வளவுமா விட்டுக் கொடுப்பது? என்ற எண்ணம, இயல்பாக அவனுக்குத் தோன்றத் தாம் சென்ற காரியம் கைகூடாமற் போக விடுதல் கூடாது ; ஒன்றைக் கூறவேண்டும் ; அவ் வொன் றிற்கு அவன் இசைவதிலேயே, தமக்கு ஆகவேண்டுவன அவ்வளவும் நிறைவேறுவதாகவும் இருத்தல் வேண்டும் ; "இஃது ஒன்றுதானே" என எண்ணி, அவன் இசையினும் இசைவன்.

மேலும், வேற்றரசரிடையே சென்று, தம் அரச னுக்கு வேண்டுவனவும், அவனுக்கு வேண்டாதனவும் ஆகிய செயல்களைக் கூறும் தூதுவர், தம் சொல்லின்கண், அப் பகையரசர் காது வெறுக்கும் கடுஞ்சொல் ஒன்று கூடக் கலவாது இருப்பதில் கருத்தைச் செலுத்தவேண்டும்; கடுஞ்சொல் கலவாது இருப்பதுமட்டும அன்று ; வெல்லத் தில் நஞ்சு கலந்து கொடுபபதேபோல், அவனிடம் எதிர் பார்ப்பது, அவன் விரும்பாத ஒன்றே ஆயினும், சொல்லும் போது, "இதற்கா இசைவது?" என எண்ணம், அவன் சொல்லும் பொருள்மீது செல்லாது, சொல்லும் சொல்லின் நயத்திலே நின்று சொக்கி மயங்கி இசையுமாறு இன்சொல் கூறும் ஆற்றலும் அவர்க்கு இருத்தல்வெண்டும்.

தூதுரைக்கச் செல்வோர், பகையரசர் அவையிலும், அரசியல் உணர்ந்த அறிஞர் பலர் இருப்பர் என்பதை உணர்ந்து, தாம், அவரினும் வல்லாராய் இருத்தல் வேண்டும் என்பதை மறத்தல் கூடாது. இவ்வளவு பெரிய பொறுப் பான செயலை மேற்கொண்டு செல்லும தூதுவர், உள்ளத் தூய்மையற்றவராயின், அவர், ஆசைகளுக்கடிமையாய்த் தம் அரசனுக்கு ஆகாதன செய்ய இசையினும் இசைவர் ; ஆதலின், உளளத்தூய்மை உடைய உயர்பேரொழுக்க முடையாரையே தூதுவராக மேற்கொள்ளுதல் வேண்டும்,

இறுதியாகப் பகையரசர் அவையிலே நின்று, அவர்க்கு ஆகாதன கூறுவதே, தூதுவர் இயல்பாம் ஆதலின், அத் தூதுவர்பால் அரசர்க்குச் சினம் பிறத்தல் இயல்பே; அவ்வாறு சினம்கொண்ட நிலையில், பகையரசர், தம அரசவையில் நிற்கும் அத்தூதுவர்க்கும் கேடுவிளைக்க எண்ணுதலும் கூடும். அந்நிலைக்கண், அவ்வரசர்க்கு, "இதற்குக் காரணமாயவன், இவன் அரசனேயன்றி, இவ னல்லன;" எனத் தூதுவர் இயல்புகூறி அக்கேட்டினின் றும் மீட்கவல்ல நல்ல துணைவர்களைப் பகையரசர் அவையி லேயே தேடிக்கொள்ளும் ஆற்றலும் அத்தூதுவர்பால் இருத்தல் வேண்டும்.

தூதுவர்பால் காணவேண்டிய, அன்புடைமை, ஆன்ற குடிப்பிறத்தல், வேந்தவாம் பண்புடைமை, அறிவு, உரு, அஞ்சாமை, தொகச்சொல்லல், தூவாத நீக்கல், நகச் சொல்லல் ஆகிய ஆராய்நத சொல்வன்மை, நூலாருள் நூல்வல்லனுக்கும் ஆராய்ந்த கல்வி, தூய்மை, துணை உடைமை ஆகிய அவ்வளவு பண்புகளும் ஔவையார்பால் அமைந்திருந்தன ஆதலின், தொண்டைமானுழைத் தூது செலலும் அப்பெருந் தொண்டை அவர்பால் ஒப்படைத் தான் அதியமான்.

தொண்டைமானுழைத் தூது சென்றுள்ளார் ஔவை யார்; ஔவையார் வந்துள்ளதன் நோக்கத்தைக் குறிப் பான் அறிநதுகொண்டான். அவனும், அதியமானினும், தான் படைவலியால் குறையுடையானல்லன் என்பதை ஔவையாருக்கு அறிவித்துவிடின், அவர், தாம் எடுத்த காரியம் இனிது முடியாது என்பதை, அஃது ஒன்றைக் கொண்டே உணர்ந்து, வந்த காரியத்தை உணர்த்தாதே மீள்வர் என எண்ணினான். எண்ணிய அவன், அதை வாயால் அறிவித்தானல்லன்; தான் அக்கருத்துடையான் என்பதையும் ஔவையார் அறிதல் கூடாது என எண்ணினான்; அதற்கு அவன் கையாண்டமுறை மிக மிக அருமையானது; வந்த ஔவையாரை, வந்தது ஏன் என வினவாதே, தன் அரசவை நாடிவரும் புலவர் பெருமக்களை

விரும்பி வரவேற்பதே போன்று வரவேற்று, அவர்க்குத் தன் அரண்மனை முற்றும் சுற்றிக் காட்டுவான்போல், அழைத்துக்கொண்டே சென்று, படைக்கலங்களை அழகாக அணிசெய்து வைத்திருக்கும் தன் படைக்கலச்சாலைக்குள் அவரோடு நுழைந்து, ஆங்கே, அடுக்கிவைக்கப்பெற்றிருக்கும் அவ்வளவு படைக்கலங்களையும் பார்க்குமாறு செய்துவிட்டான். ஆனால், அந்தோ! அவன் எண்ணியது ஒன்று; நிகழ்ந்தது வேறு; முற்றிலும் எதிர்பாரா ஒன்று.

தொண்டைமான் உட்கருத்தை உணர்ந்துவிட்டார் ஔவையார்; இங்கே உள்ள படைக்கலங்களின் வரிசையைப் பார்க்கிறார், அவற்றின் எண்ணிக்கைப் பெருக்கையும் அளவிடுகிறார்; அங்கே, தகடூர்க்கண் உள்ள அதிகமான் படைச்சாலை. அவர் மனப்பார்வைமுன் வந்துநிற்கிறது. அப் படைக்கலங்களின் பாழ்பட்டுப பயன்படாநிலையும், பழுதுபார்க்கவேண்டிக் கொல்லன்குடிசையில் குவிந்துகிடக்கும் காட்சியும தோன்றுகின்றன அவர் மனக்கண்ணிற்கு. இவ் வேற்றத்தாழ்வு, அவர் நெஞ்சைக் கலக்குகிறது; என்றாலும், அவர் அதை வெளிக்குக் காட்டினாரல்லர்; ஏற்றத் தாழ்வு இருப்பினும், எண்ணியதை முடியாதுவிடேன்; அதியமானுக்கு வில்லின்துணை வேண்டிய அளவு இல்லாது இருக்கலாம; ஆனால், என்சொல்துணை அவனுக்கு உண்டு: வில்லினும சொல வன்மையுடையது; என் சொல்லாற்றலால் இவன் வில்லாற்றலை வீழ்த்திவிடுகிறேன் என்று முடிவு செய்கிறார்.

ஆயுதப்பெருக்கைக் கண்ட ஔவையார் உள்ளம் அஞ்சி, அதியமானுக்கு அறிவூட்டும் எனற அகமகிழ்ச்சியில் திளைத்துப் பெருமிதம் தோன்ற நிற்கின்ற தொண்டைமானை அருகி, “அரசே! இவ்வேலின் காம்புகள் எவ்வளவு அழகும், அருமையும், திண்மையும் அமைய ஆக்கப்பட்டுள்ளன! வேலின் இலைகள்தாம் எவ்வாறு தீட்டப்பெற்றுப் பளபள என மின்னுமாறு நெய் பூசப் பட்டுள்ளன! இவையனைத்தும், அழகாக, வரிசையாக, நிறுத்தப்பெற்று, மாலையாலும், மயிற்பீலியாலும் அணி

செய்யப்பெற்றுக் காணும் காட்சியே காட்சி! இறுதியாக இவை வைக்கப்பெற்றுள்ள கற்கோட்டைபோன்ற இவ்விடத்துக் காவலின் கடுமையே கடுமை! இவ்வளவு சீரிய, பெரிய படையுடைய உன் பெருமையே பெருமை!" எனப் பாராட்டுவாராயினர்; இப்பாராட்டுரையினை உண்மைப் பாராட்டெனக் கொண்டு மயங்கி மகிழும் தொண்டைமான் அறிவை மேலும் தன்பால் இழுக்க, அவன் காது இனிக்க மேலும் சில கூறுவாராயினர்.

அரசர்கள், தங்கள்முன்பாகத் தங்களைப் பாராட்டுவதைக் கேட்பதினும், தங்கள் முன்பாகவே தங்கள் பகைவர்களைப் பழித்துரைப்பதைக் கேட்பதினாலேயே மிகவும் மகிழ்வர் என்ற உண்மையை அறிந்தவர் ஔவையார் ஆதலின், தொண்டைமான் காது குளிர, அதியமானை இழித்துக்கூறத் தொடங்கிவிட்டார் "அரசே! அதியமான் படைக்கலத்தின் நிலை நினக்குத் தெரியுமா? கூறுகின்றேன் கேள்; அவனிடம் உடையாத வேல் ஒன்றுகூடக் கிடையாது; ஒன்றின் நுனி மடங்கிப்போய் இருக்கும் என்றால், மற்றொன்றின் காம்பு ஒடிந்துபோய் இருக்கும்; இப்படியே, அவன் பெற்றிருப்பன அனைத்தும் முற்றும் பாழ்பட்ட படைக்கலங்களே; அவை அரண்மனையிலாவது வைத்துக் காக்கப்பட்டுள்ளனவா என்றால், அதுவும் இல்லை; ஊர்க்கோடியில், ஒதுக்குப்புறமாக உள்ள, கொல்லன் தன் தொழிற்சாலை வைத்திருக்கும் சிறிய குடிசையிலே, கேட்பாரற்றுப் போடப்பட்டுள்ளன; அவ்வளவு பாழ்பட்டது அவன் படைநிலை," என்று அதியமான் படைகளைப் பழித்துரைத்தனர்; இதைக் கேட்ட தொண்டைமான் உள்ளம், மகிழ்ச்சியால் துள்ளும் என்பதைக் கூறவும் வேண்டுமா?

என்ன! அதியமான் ஆட்சிநலம் கருதி, தொண்டைமானிடம் தூதுசென்ற ஔவையார், இவ்வாறு பகையரசனைப் பாராட்டித், தன்னைப் போற்றிய பேணும் அரசனைப் பழித்தார் எனின், அவர் பண்புடையார் எனப் பாராட்டற்குரியார் அல்லர்; பழிபாவங்களுக்கு அஞ்சாப் பாதகர்

எனப் பழிக்கவே தோன்றும். ஆனால், ஔவையார், அவ்வளவு அறைபோகும் அறிவுடையாரல்லர்; கடமையில் தவறும் கயவரும் அல்லர்; எடுத்த காரியத்தை இனிது முடிக்கும் ஆற்றல் உடையவரே; அவர் அதைத் தவறாதும் செய்து முடித்துள்ளார் எனபது, அவர் சொற்களை உற்று நோக்க வல்லாரால் உணரப்படும்.

தொண்டைமான் படைக்கலம்பற்றி அவர் கூறியன யாவை? காவல் நிறைந்த கோட்டையின் உள்ளே, காப்பாற்றிவைக்கப்பட்டுள்ளன; இலையும், காம்பும் பழுதின்றி உள்ளன; பீலியும், மாலையும சூட்டிப் பெருமைப் படுத்தப் பட்டுள்ளன; பூசிய நெய் புலராமலே உள்ளன; இவை. இதனால் என்ன புலப்படுகிறது? அப் படைக்கலங்கள், போரில் பயன்பட்டுப் பழகாதன; போர்க்களத்தையே எட்டிப் பாராதன; பூவும், புகையும் காட்டிப் பூசிக்கத் தக்கனவே ஒழிய, போரிற்குப் பயன்படாதன; தாம் பிறரைக் காக்கும் ஆற்றல் அற்றன; தமக்கு இடமாகக் காவல் செறிந்த இடத்தைத் தேடுவன; இவைதானே அவர் கூறியுள்ளன; அவன் ஆண்மையை, எவ்வளவு அழகாக, ஆனால் சிறிதும் அஞ்சாமல் எள்ளி நகையாடியுள்ளார் நோக்குங்கள்.

தொண்டைமான் படைக்கலத்தைப் பழித்துக்கூறிய ஔவையார், அதியமான் படைக்கலங்களைப் பாராட்டாமலாவது விட்டாரா எனின், அதுதானே இல்லை; அவனைப் பழித்துக்கூறிய அதே நாவால், அவன் முன்பாகவே, அவன் பகையரசன், அதியமானைப் போற்றிப் புகழவும் செய்துள்ளார்; அதியமான் படைக்கலம் குறித்து அவர் கூறினவற்றை உற்று நோக்குங்கள்! உண்மை விளங்கும். அவர் என்ன கூறினார்? அதியமான் படைக்கலங்கள் அவ்வளவும், அடியும், நுனியும் சிதைந்தன; கொல்லன் குடிசையிலே கிடப்பன; இது அவன் படைக்கலங் குறித்து அவர் கூறியது; இதனால் புலனாவது என்ன? அவன் படைக்கலம் பழுதுபட்டவை? எப்படிப் பழுதுபட்டன? ஏன் பழுதுபட்டன? பலகால் போரில் பயன்படுத்தப்

பட்டன ஆதலின், அங்கே பகைவர், தேர், யானை, குதிரை, காலாள் என்ற நால்வகைப் படைகளையும தாக்கித் தாக்கிப் பழுதுபட்டன ; ஆகவே, போர்ப் பழக்கம் பெற்றவை ; மேலும், பயன்படாதன எனக் கழிக்கப்பெற்றால் குப்பையில் அன்றோ போட்டிருப்பர்? கொல்லன் குடிசையில் அவை கிடப்பானேன் ? அங்கே அவற்றிற்கு என்ன வேலை? மீண்டும் போர் வரின், பயன்படும வகையில் பழுது பார்க்கவே அவை அங்கே அனுப்பப்பட்டுள்ளன ; அவற்றைப் பழுது பார்க்கும் கொல்லரும் அங்கே ஏராளம் ; அவர்கள் அதற்கு எப்போதும் தயார் ; இவைதானே அவர் கூறுவதினின்றும் பெறலாகும் பொருள் ? கேட்ட தொண்டைமான் உள்ளம்—ஏன் கேட்டவர் யாவராயினும் அவர் உள்ளந்தான் என்ன—அஞ்சி நடுங்காமல் இன்பப் பெருக்கிலா ஆழும் ? காதிற்கினிய சொற்களால், அவன் மனதை மருட்டும் கருத்துரைகளைக் கூறிய ஔவையார் தம் கல்வியின் பெருமையே பெருமை !

அம்மட்டோ ? தொண்டைமான் வேல் பற்றிக் குறிப்பிடும்போது, எவ்வளவு இழிவாக, " அட ! இந்த வேலா ?" என்று தொனிக்குமாறு, இழிவுப் பொருள் குறிக்கும் சுட்டோடு கூட்டி, " இவவே " எனக் கூறி, அதியமான் வேல் பற்றிக் குறிப்பிடும்போது, கூரிய முனையை உடைய வேல் என்று பொருள்படுமாறு, " வைந்நுதிவேல் " எனச் சிறப்பித்துக் கூறியுள்ளார். மேலும், தொண்டைமான் படைக்கலம்பற்றிக் கூறுமிழி, அவனைப்பற்றி ஒன்றும் கூறாது கொன்னேவிட்டு, அதியமான் படைக்கலம்பற்றிக் கூறுமிழி, பொருள் நிறைய உள்ளவழி, அவற்றைத் தனக்கென ஓம்பாது, வருவோர்க்கெல்லாம் வாரி வழங்கியும, பொருட் குறையுண்டான காலத்து, வாரி வழங்க இயலாதாயினும், வருவோரை உடன் வைத்து உண்டும், பொருளால் வறியர் ஆயினோர் பலரைத் தனக்கு உறவாக உடையவன் ; அவன் அன்பிற்கு அடங்கியோராக, எண்ணற்ற பலர் உளோம் ; அத்தகைய தலைமைப் பண்புடைய அவன் எங்கள் வேந்தன் ஆவான் ; இத்தகு சிறப்புடையான் படைக்கலம் என,

அவன் படை, தன்னளவிலே பெற்ற பெருமையோடு அவற்றைக் கொண்டான் பெருமையும் உடையன என்றும் புகழ்ந்துள்ளார்.

இவ்வளவோடு நில்லாமல், அதியமான் பெற்றுள்ள மற்றோர் பெருவலி ஒன்றையும் குறிப்பாக எடுத்துக் காட்டித் தொண்டைமானைத் துணுக்குறச் செய்துள்ளார். ஒருவனுக்கு, அவன்மாட்டு அன்பு குறையாத சுற்றத்தார் பலர் கிடைப்பாராயின், அவனுக்கு மேலும் மேலும் வளர்தற்கு வழியாம் செல்வம் பல கிடைக்கும்.

"விருப்பறாச் சுற்றம் இயையின், அருப்பறா
ஆக்கம் பலவும் தரும்." (திருக்குறள் : ௫௨௨)

அவ்வாறின்றி, ஒருவன், கோடிகோடியாகப் பொருளைக் குவித்திருந்தும், உள்ளம் கலந்து உறவாடும் சுற்றத்தாரைப் பெறானாயின், கரையற்ற குளத்தில், நீர் நில்லாது வெளியே போய்விடுதல்போல், அப்பொருள் விரைவில் அழிந்துபோவது உறுதி.

"அளவளா வில்லாதான் வாழ்க்கை, குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று." (திருக்குறள் : ௫௨௩)

இஃது உலகியல்; அதியமான் பொருளை அள்ளி அள்ளிக் கொடுத்தமையால், அன்புள்ள சுற்றத்தாராக, ஏற்போர் பலரைப் பெற்றுள்ளான்; ஆகவே, அவனழிவு, அவ்வளவு எளிதன்று; அவன் அழிய அவர் பார்த்திரார்; பக்கத்துணையாகப் பரிந்து வருவர்; ஆனால் உனக்கு அத்தகைய பெருஞ் சுற்றம் இருப்பதாகத் தோன்றவில்லை; சுற்றமற்ற உன்வாழ்வு, பெருவாழ்வாகத் தோன்றினும், இறுதியில் அழிதல் உறுதி; அதை அழியாமல் தடுத்து நிறுத்துவார் யாரையும் காணேன்," என அவன் அஞ்சுதற்கான மற்றொரு காரணத்தையும் எடுத்துக் கூறியுள்ளார். இனிய சொற்கூறும் இயல்பிலே, ஈடு இணையற்றிருந்த காரணத்தால், இவ்வளவும் கூற முடிந்தது.

இவ்வளவு பொருளும் செறிய, அவர் கூறியன கேட்ட தொண்டைமான், அவ்வளவோடு ஒரு முடிவிற்கு வந்திருப்

பின் நன்றும். ஆனால், அவன் அவ்வாறு செய்யவில்லை. அதியமான் போர்வன்மையை உள்ளவாறு அறியவிரும்பினான்; விரும்பிய அவன், ஔவையார்க்கு மகிழ்ச்சி உண்டாகுமாறு, அவரைப் போற்றிப் புகழ்ந்தால், ஒருவேளை அவர், தனக்கு ஆவன கூறுவார் என எண்ணினானோ யாதோ? ஔவையாரை, அவர்க்கு அழகு செய்யும் அணிகளின் சிறப்பு, அவர் தம் பெண்மை நலம் பண்பு, மைதீட்டிய அவர் கண்கள், அறிவொளி வீசும் நுதல் ஆகியவற்றின் பெருமை கூறிப் பாராட்டினான்; பின்னர், "அம்மையே! இவ்வளவும் கூறினையே, உங்கள் நாட்டிற்கான போரில் பெரும்பங்கு கொள்வார் யார்? உங்கள் நாட்டுப்படை, கைக்கூலி பெற்றுக் கடமைக்குப் போரிடும் கூலிப்படையா? அன்றி, உங்கள் நாட்டு வீரர், போரை விரும்பி மேற்கொள்கின்றனரா? எவ்வளவு துன்பம் வருவதாயினும் தாங்கிக் கொண்டு எவ்வளவு பெரும் படையையும் தாக்கும் உறுதியான உள்ளம் அவர்க்கு உண்டா? அல்லது, பகைவர் படை பாய்ந்து தாக்கிய உடனே, பின்வாங்கிவிடுவரா? யாது நும் வீரர் இயல்பு? உம் அரசன், போர்க்கள நிகழ்ச்சியைப் படைவீரர்பால் ஒப்படைத்து ஓய்வுகொள்ளும் இயல்புடையனா? அல்லது அவனே நேரிற் போரிற்கலந்து கொள்ளும் பெரு வீரனா?" எனக் கேள்வி பல கேட்கலாயினன்.

இவ்வாறு கேட்ட அவ்வரசன் செயல், ஔவையார்க்கு நகைப்பை அளித்தது; அவ்வரசன் அறியாமை காண அவர்க்கு அவன்பால் இரக்கமும் தோன்றிற்று; நாம் அவ்வளவு கூறியும், பகைவர் படைவலியை அறிந்துகொள்ளும் பக்குவமற்றவனாய் உளனே! இவனும் ஓர் அரசனா? இவனுக்கும் ஒரு படையா? இவனுக்கேன் இப்பெரும்படை? என்ற எண்ணம் தோன்றிற்று; அவ்வெள்ளப் பொருள் தோன்ற அவனைப் "பொருபடை வேந்தே" என வேடிக்கையாக விளித்துக் கூறத் தொடங்கினார்.

"பாம்பைக் கோல்கொண்டு தாக்கினால், அடங்கிவிடாது அப் பாம்பு; அடிக்கும் அக்கோலுக்கு அஞ்சாது,

அடிக்கத் தாழ்த்திய கோல், உயரே எழுவதற்கு முன்பே, தான் விரைந்தெழுந்து, அடித்தாரைக் கடிக்கவே முயலும்; அதைபபோல், பகைவர் படைக்கலம் கண்டு பயநது பதுங் காது, பாம்பெனபபாய்ந்து தாக்கும் பண்புடைப் பெரு வீரர்களே எங்கள்நாட்டுப போர்வீரர்; ‘ஆற்றல் மிக்க பெரும்படை நமக்குளது; ஆகவே, போர்ககளம் போக வேண்டிய தொல்லை நமக்கின்று’ என அரண்மனையகத்தே அடங்கிக் கிடக்கும் இயல்புடையான் அல்லன் அரசனும்; போர் என்றவுடனே பூரிக்கும் தோள் உடையான் எங்கள் அரசன்; அவன் போர் வெறிக்கு ஓர் எடுத்துக்காட்டுத் தருகிறேன் கேள்! ஊர் நடுவே அமைநத மன்றில் உயரத்தே தொங்கவிடப்பட்டிருநதது எஙகள் நாட்டுப் போர்ப்பறை; ஒருநாள், பெருஙகாற்று அடித்ததால், அம் முழவு அப்படி யும, இப்படியுமாக ஆடத்தொடஙகிற்று; அவ்வாறு ஆடியபொழுது, யாதோ ஒன்று, அம முழவின் கண் ணிடத்தே பட்டுவிட்டது; உடனே எழுந்தது ஒரு பேரொலி; அவ்வொலியைக் கேட்டானோ இல்லையோ, ‘அதோ போர்ப்பறை ஒலித்துவிட்டது; போர் மூண்டு விட்டது; போர்க்களம் நோக்கிப் புறப்பட்டுவிட்டேன்’ எனக் கூறிக்கொண்டே புறப்பட்டுவிட்டான்.

“அவ்வளவு போர் வேட்கையுடையான்; ஆகவே, எங்கள் நாட்டு அரசனும் ஆண்மையாளன்; வீரரும் போர் விருப்புடையார்; படைககலங்களோ, பல போர்கண்டு பழகியவை; அத்தகையாரொடு எதிர்த்துப் பகை கொள் ளின், யாது நேரும் என்பதைச் சற்று எண்ணிப் பார்ப்பா யாக,” எனப் பக்குவமாக, ஆனால், பயன்விளையும் வகையில், எடுத்துக் கூறித் தம் கடமையைத் திறமையாக முடித்து மீண்டார் ஔவையார்; இவ்வளவு பொருளும் பொதிய அவர் பாடிய பாடல்கள் புறநானூற்றிலே காணப்படு கின்றன; அவை இதோ:

“இவவே, பீலி அணிந்து மாலைசூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்தி, நெய் அணிந்து,
கடியுடை வியன் நகரவவே; அவவே,

பகைவர்க் குத்திக், கோடுநுதி சிதைந்து,
கொற்றுறைக் குற்றில மாதோ? என்றும்,
உண்டாயின், பதம் கொடுத்து,
இல்லாயின், உடன் உண்ணும்,
இல்லோர் ஒக்கல் தலைவன,
அண்ணல், எம் கோமான், வைந்நுதி வேலே."

(புறம்: ௯௫)

"இழையணிப் பொலிந்த, ஏந்து கோட்டல்குல்,
மடவரல், உண்கண், வாள்நுதல், விறலி!
'பொருநரும் உளரோ, நும் அகன்தலை நாட்டு?' என
வினவல் ஆனாப் பொருபடை வேந்தே!
எறிகோல் அஞ்சா, அரவின் அன்ன,
சிறுவன் மள்ளரும் உளரே: அதாஅன்று,
பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை,
வளிபொரு தெண்கண் கேட்பின்,
'அதுபோர்' என்னும் என்னையும் உளனே."

(புறம்: ௮௯)



## ரு. ஔவையாரைப் பற்றிய கதைகள்

உலகோர் போற்றும உயர்பேரறிவும், புலமையும செறிந்த அரும்பெரும்பாடல்களை ஆக்கும் ஆற்றலைப் புலவர்கள், பலநூல்களைப் பல்லாண்டு, பலகால், பலரோடு பயினறே பெற்றனராகவும், அவ்வருமையை மனதிற் கொள்ளாது, "ஆண்டவன் அருள் பெற்றவர் அவர்; ஆகவேதான் அவரால் அப்படி அழகாகப பாடமுடிகிறது; காளி கருணைசெய்தாள்; ஆகவேதான், கன்னித்தமிழில் அவரால் கவிமழை பொழிய முடிகிறது; அவர் தெய்வப் புலவர்; ஆகவேதான், திததிக்கும் நடையில் செநதமிழ்ப் பாக்களைப் பாடினர்," என்று கூறி, அப் புலவர்தம் புலமைக்கு மாசுதேடுவதை வழக்கமாகக் கொண்டு விட்டனர் இடைக்காலத்தார் சிலர். அப்புலவர்களைத் தெய்வத் தன்மை பொருந்தியவராகவோ, தெய்வ அருள்பெற்றவ ராகவோ கருதிய அவர்கள், அதற்கேற்றவாறு, அப புலவர் கள் வரலாற்றோடு அற்புத நிகழ்ச்சிகள் சிலவற்றைத் தொடர்புபடுத்தவும் தொடங்கிவிட்டனர்; இநத இடர்ப் பாட்டினின்று ஔவையாரும் மீண்டவா அல்லர்; ஔவை யார் பிறப்புக் குறித்தும, அவர்தம் வரலாறு குறித்தும் வழங்கும், அவ்விடைக்காலத்தார் கற்பிதத கதைகள் சில வற்றை இனிக் காண்போம.

(1) பிறப்பு :

ஔவையார் பிறப்புக் குறித்துக்கூறும் நூல்கள், **திருவள்ளுவர் கதை, கபிலரகவல, ஞானமிர்தம், புலவர் புரா ணம, விநோதரச மஞ்சரி, பன்னிருபுலவர் சரித்திரம்** முதலா யின ஆகும்.

(க) **திருவள்ளுவர் கதை :** ஆதிகாலத்தில் பாண்டி நாட்டு மதுரையில், சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்து வாழ்ந்த புலவர்கள், தம் கல்விச்செருக்கால் சிவபெருமானை மதியாது இகழ்ந்தனர். அவ்விகழ்ச்சியைப் பொறுக்க மாட்டாச் சிவன், அப்புலவர்தம் செருக்கை அடக்குவதற்

காகவே, நான்முகனைத் திருவள்ளுவராகவும், திருமாலை, இடைக்காடராகவும், கலைமகளை ஔவையாராகவும் உலகில் திருவவதாரம் செய்ய அருளுள்ளம் கொண்டார்.

நான்முகன் செய்த வேள்வியொன்றில், குறுமுனிவராகிய அகத்தியர் தோன்றினார்; அவர் கடற்கன்னியொருத்தியை மணந்து, பெருஞ்சாகரன் என்ற மகனைப் பெற்றார்; அப் பெருஞ்சாகரன் திருவாரூர்ப் புலைச்சி ஒருத்தியை மணந்து பகவன் என்பானை ஈன்று, கலைபல கற்பித்து வளர்த்து வந்தார்; இது நிற்க. பிரம்ம வம்சத்தில் வந்த தவமுனி என்பவரொருவர் அருண்மங்கை என்ற அம்மையாரொருவரை மணந்து, பெண்மகவு ஒன்றைப் பெற்றுப் பெற்ற இடத்திலேயே விட்டு விட்டுத் தவஞானம் மேற்கொண்டு விராலிமலை நோக்கிச் சென்றுவிட்டனர், அப் பெண்குழந்தையை, உறையூர்ச் சேரியில் வாழ் பெரும் பறையன் என்பான் கண்டெடுத்துப் பேணிவளர்த்து வருவானாயினன்; அப்போது எதிர்பாராமல், அங்குத் தோன்றிய மண்மாரியால், அப் பெண்குழந்தை ஒன்று நீங்க, அச் சேரி முற்றும் அழிந்து போயிற்று; அப் பெண் மட்டும் எவ்வாறோ பிழைத்து அவ்வூரையடுத்த மேலூர் அகரத்தில் வாழும் நீதியையன் என்பான் வீட்டில் வளர்ந்து வருவாளாயினள்.

இந்நிலையில், எல்லாக் கலைகளையும் கற்றுத்துறைபோய பண்டிதராய்க் கங்கைநீராடக் காசிநோக்கிச் செல்லும் பகவன், இடைவழியில், அம் மேலூர் அகரம்வந்து, ஆங்கேயுள்ள அறச்சாலை யொன்றில் தங்கி, ஒருநாள் இருந்து போக எண்ணினன். ஆங்கே, அவன் நாட்கடன் முடித்து, உணவிற்கு ஆவன ஆக்கிக் கொண்டிருக்குங்கால், அவ்வறச்சாலையின் காப்பாளரான, அந் நீதியையனின் வளர்ப்புப் பெண்ணாகிய அப் பெண் ஆங்கேவந்தாள்; பகவன், அவளைக்கண்டு, சினங்கொண்டு "யார் நீ?" புலைச்சியோ, வலைச்சியோ? ஏன் இங்கு வந்தாய்?" என்று அதட்டித் தன்கையிற் பிடித்திருந்த சட்டுவத்தால் அவள் தலையில் இரத்தம் பெருக அடித்துத் துரத்திவிட்டான்.

ஆண்டுகள் சில கழிந்தன; காசிசென்ற பகவன், கங்கைநீர் கையிற்கொண்டு மீண்டு வரும்போது, அதே அறச்சாலையில் தங்க, விதி கடைக் கூட்டிற்று; அப்போது இளமை அளித்த ஈடிலா அழகோடு விளங்கும் அதேபெண், அங்குவர, பகவன், அவளைக்கண்டு காதல்கொண்டு கருத் திழந்து நிற்பானாயினன். அவனை, அந்நிலைக்கண் கண்ட நீதியையன், பகவனை அடுத்து, "ஐய! அவள் என்பெண்; விரும்பினால் மணம் முடித்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்; அவனும் இசைந்தனன்; திருமணம் இனிது நடந்தது; திருமணத்தன்று ஐந்தாம் நாள் நிகழ்ந்த எண் ணெய் நீராட்டின்கண், அவள் தலையில் சட்டுவத்தால் ஏற் பட்ட வடு இருப்பதுகண்டு, அவள் வரலாறு கேட்டறிந்து, தன் கையால் அடியுண்ட ஆதியாள் (அப் பழைய பெண்) அவள் என்பதறிந்து, அவளோடு வாழமறுத்து வெளி யேறிச் செல்லலாயினன்; அன்றுமுதல் அப் பெண்ணிற்கும் ஆதி என்பதே பெயராயிற்று.

அவன், தன்னை வெறுத்துச் செல்லுகிறான் எனினும் அவள் அவனைவிடாது பின்பற்றிச் செல்லத் தொடங் கினாள்; ஏதுகூறியும் விடாது பின்தொடரும் அவளை, இடைவழியில் மறுத்து, "பெண்ணே! நான் எவ்வளவு கூறியும் நீ நிற்க மறுக்கிறாய்: உனக்கு உண்மையில் என் பால் அன்பிருக்குமாயின், நான் கூறியவாறு கேட்டல் வேண்டும்; அஃதாவது, உனக்குக் குழந்தைகள் பிறக்கு மாயின், அவற்றைப் பிறந்த இடத்திலேயே விட்டுப் பின் தொடர்ந்து வருதல் வேண்டும்; இதற்கு இசைவையாயின், நின்னையான் ஏற்றுக்கொள்வேன்" என்றனன்; அவளும் அதற்கு இசைந்து அவனுடன் சென்றாள்; இடையில் பாணர் சேரியில் ஒருநாள் இரவு தங்கினர்; அங்கே அவள் வயிற்றில், அரன் கட்டளைப்படி, கலைமகள், ஔவையாராக வந்து பிறந்தாள்; கணவன் கட்டளைக்குப் பணிந்து, குழந்தைகளை விட்டுப்பிரியும் அவள், குழந்தையின் எதிர் காலம் நோக்கி எண்ணி இரங்கி ஏங்குவாளாயினள்; தாயின் துயர்நிலைகண்ட அக் குழந்தை,

"இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதி
விட்டசிவ னும்செத்து விட்டானோ?—முட்டமுட்டப்
பஞ்சமே ஆனாலும், பாரம் அவனுக்கு; அன்னாய்'
நெஞ்சமே அஞ்சாதே நீ"

என்று பாடி அவள் கவலையைப் போக்கிற்று; அப் பாடலைக் கேட்ட ஆதியும் அகம் மகிழ்ந்து, மனந்துணிந்து அக் குழந்தையை விட்டுச்சென்றனள்; இவ்வாறே, ஔவையாருக்கு இளையோராக, **உப்பை, அதிகமான், உறுவை, கபிலர், வள்ளி, வள்ளுவர்** ஆகியோர் பிறந்தனர்; அக் குழந்தைகளையும், அவர்கள், அபபடி அப்படியே விட்டுச் சென்றனர்; அக் குழந்தைகளும், ஒவ்வையாரைப்போன்றே, ஒவ்வொரு பாடல் பாடிப், பெற்றாள் மனத்துயர் களைந்து மகிழச்செய்தன.

(உ) **கபிலரகவல்:** அருந்தவ மாமுனியாம் பகவற்குக் கருவூர்ப் புலைச்சியாகிய ஆதிவயிற்றில் கபிலர்முதலா எழுவர் மக்கள் பிறந்தனர்; அவருள் ஆண்பால் மூவர், பெண் பால் நால்வர்; அவருள் ஔவையார் பாணர் அகத்தில் வளர்ந்தனர்.

(௩) **ஞானாமிர்தம்:** யாளிதததன் என்னும் முனிவன், தன்னால் வெட்டுண்டு, கிணற்றில் தள்ளப்பட்ட ஆதப் புலைச்சி யென்னும் அறிவில்லாத சண்டாளப் பெண்ணை, ஒரு பிராமணன் எடுத்துக்கொண்டுபோய் உத்தரபூமியிலே வளர்த்துப் பின்பு தனக்கே மணம் செய்துகொடுக்கக் கொண்டு, கபிலர் முதலாக ஏழு மக்களைப் பெற்றான்.

(ச) **புலவர் புராணம்:** நான்முகன் அம்சமான பகவன் என்னும் அந்தணனும், கலைமகள் அம்சமான ஆதி என்பவளும், ஒவ்வோரிடத்தில், ஒவ்வோர் குழவியாக ஏழு குழவிகளைப் பயந்தனர்; அக் குழவிகளுள் முதற்குழவியே ஔவையார்; ஔவையைப்போல் பண்படைந்தவர் பிறரில்லை; வள்ளுவர், கபிலர், சேரமான் என்னும் மூவரும், தம் புலமை உலகில் விளங்கி நிற்குமாறு செய்தனர்; மற்றைப் பெண்கள் மூவரும் தம் இயல்பினை வெளிக் காட்டாதிருந்து விட்டனர்.

(ரு) **விநோதரச மஞ்சரி :** ஒளவையார், மதுரையில் கடைச்சங்கமிருந்த காலத்தில் உறையூர் என்னும் பட்டணத்தின் ஒரு சாவடியில் ஆதி என்பவளுக்கும், பகவன் என்னும் அந்தணனுக்கும் ஜேஷ்ட புத்திரியாகப் பிறந்தனர்.

(சு) **பன்னிரு புலவர் சரித்திரம் :** வேதமொழி என்பாருக்குப் பேராளி என்று ஒரு மகன் பிறந்தான்; அம் மகனுக்குப் பன்னிரண்டாம யாண்டு நிகழ்கையில், அவ்வூரில் வாழ் ஓர் இழிகுலத்தானுக்குப் பெண் மகவொன்று பிறநதது; அப பெண் பிறந்தமையால், ஊர்க்கு அழிவுண்டாம் எனக்கொண்டு ஊரார் அப் பெண்ணைக் கொல்லத் துணிநதனர்; ஆனால், வேதமொழியார், அப் பெண்ணை, ஒரு பேழையுள் வைத்துக் காவிரியில் விடுத்தார்; ஆற்றில் வந்த அப் பெண்ணை, அநதணன் ஒருவன் எடுத்து வளர்த்தான்; சில ஆண்டு கழித்து, தீர்த்த யாததிரை குறித்து அங்குவந்த பேராளியார், அப்பெண்ணை மணம் செய்து கொண்டார்; மணம முடிந்த பின்னர், அவள் தன் தந்தையால் ஆற்றில் விடப்பட்ட இழிகுலப் பெண்ணே என்பதறிந்து அவளை விட்டுப் பிரிநதுபோயினர் பேராளியார்; அப் பெண் தன்னைக் காத்துவந்த அநதணன் விட்டுச் சென்ற பெரும் பொருளோடு காசி சென்று, ஆங்கே அறச்சாலை யொன்று அமைத்து, ஆங்கு வருவோர்க்கு அன்னமிட்டு, அவர்பால் தன் வரலாறு கூறி அழுது வருவாளாயினள்; ஒருநாள், பேராளியார் அங்குவர, அவள் அவர்க்கும அன்னமிட்டு, வழக்கமபோல் தன் வரலாறு கூறி அழுதாள்; அந் நிலையில், அவர், அவள் நற்குணம் கண்டு, அன்று முதல் அவளோடு வாழத் தொடஙகினர்; பின்னர் அவர்களுக்குப பிறநத மக்கள் எழுவரில் ஒளவையாரும் ஒருவர்.

ஒளவையார், பிறந்த முறைகுறித்தும், அவர் பெற்றோர் குறித்தும் வழஙகும் கதைகள் இவை.

## (2) ஒளவையாரும் விநாயகரும் :

ஒளவையார், நாள்தோறும் காலையில் எழுந்ததும், கடவுளரில் முதல்வராகக் கருதப்படும் விநாயகரை வழி

பாடு செய்தல் வழக்கம். ஒரு நாள், தம்பிரான் தோழ ராகிய சுந்தரமூர்த்தி அடிகளாரும், சேரமான் பெருமாள் நாயனாரும் சிவபிரான் திருமுன், சேரமான் பெருமானார் இயற்றிய பொன்வண்ணத் தந்தாதியையும், ஆதியுலாவை யும் அரங்கேற்றம் செய்ய கைலைமலை நோக்கிச் செல்லத் தொடங்கினர்; செல்லத் தொடங்கிய அவர்கள், "நாங்கள் கைலை செல்கிறோம்; தாங்களும் உடன் வருகின்றீர்களா?" என ஔவையாரையும் அழைத்தனர்; அவர்கள் அழைத்த போது, ஔவையார் விநாயகரை வழிபட்டுக் கொண்டிருந் தனர்; அவர்களுடன் கைலை சென்று அங்கு நிகழ இருக் கும் அரங்கேற்றத்தைக் காண வேண்டும் என்ற பெரு விருப்பால், விநாயகர் வழிபாட்டை விரைந்து செய்யத் தொடங்கினர்; ஔவையார்தம் விரைவுகண்ட விநாயகர், அவரை நோக்கி, "ஔவையே! வழக்கம்போல் விரை வின்றி வழிபாடு செய்க; அவர்க்கு முன் நின்னை அங்கே சேர்க்கின்றேன்" என்றனர். அது கேட்ட ஔவையார், நாள்தோறும் நடத்துவதேபோன்று, "சீதக் களபச் செந் தாமரைப்பூம" எனத் தொடங்கும் அகவற்பா பாடி அவரை வழிபட்டு நின்றனர். அந் நிலைக்கண், அவ் யானை முகக்கடவுள், ஔவையாரைத் தம் துதிக்கையால் தூக்கிக் கைலையில் ஆண்டவன் திருமுன் விட்டனர்; அவர் அங்குச் சேர்ந்து சின்னேரம் கழிந்த பின்னரே, சுந்தரரும் சேர வேந்தனும் அவண் வந்து சேர்ந்தனர்; தங்களுக்கு முன் ஔவையார் அங்கே வந்திருப்பது காண அவர்கட்கு ஒன்றும தோன்றவில்லை; தாங்கள் வரும்போது, வழிபாடு மேற்கொண்டிருந்த அவர், தங்களுக்கு முன் அங்கு வந்து சேர்ந்தது எவ்வாறு என்பதறியத் துடித்தனர்; அவர்கள் துடிப்பும் வியப்பும் கண்ட ஔவையார், அவர்களை அணுகி, நிகழ்ந்தது கூறி,

"மதுரமொழி நல்லுமையாள் சிறுவன் மலரடியை
முதிர நினைய வல்லார்க்கு அரிதோ? முகில்போல் முழங்கி,
அதிர வருகின்ற யானையும், தேரும் அதன்பின் சென்ற
குதிரையும் காதம்; கிழவியும் காதம்; குல மன்னனே!"

என்ற பாட்டையும் பாடினர்.

(3) ஔவையாரும் முருகனும் :

ஒரு நாள் ஔவையார், தாம் செல்லக் கருதிய ஓர் ஊருக்குச் செல்பவர், காடொன்றைக் கடந்து செல்ல வேண்டியதாயிற்று ; அப்போது முருகன், ஔவையாரின் அறிவுத் திறன் கண்டு அக மகிழ எண்ணினன் ; உடனே அவன் எருமைக்கன்று மேய்க்கும் இடையர்குலச் சிறுவன் போல் உருவெடுத்து, ஔவையார் வரும் வழிக்கண் உள்ள, நாவல்மரத்தின் நிழலில் மாடுகளை மேயவிட்டு, மரமேறிக் கனி பறிப்பான்போல் அமர்ந்திருந்தான்; கோடை வெயில் கொளுத்தும் அக் காட்டு வழியில், ஆண்டு முதிர்ச்சியால், நடை மெலிந்து களைத்து வந்த ஔவையார், அந் நாவல் மரத்தையும், மரத்தில் கொத்துக் கொத்தாகக் காய்த்துத் தொங்கும் கருநாவற் கனிகளையும், அக் கனிகளைப் பறித்து உண்ணும் சிறுவனையும் கண்டார் ; நாவறட்சி, நாவற் கனியைக் கண்டதும் மிகுதியாயிற்று ; அச் சிறுவனை அன்புடன் அழைத்துச் சில கனிகளைப் பறித்துப் போடு மாறு வேண்டினர் ; உடனே, அச் சிறுவன், "பாட்டி! இங்கே இரண்டு வகைப் பழங்கள் உள்ளன ; ஒன்று சுடும் ; மற்றொன்று சுடாது ; அவற்றுள் உனக்கு எது வேண்டும் சொல்," எனக் கேட்டனன் ; ஔவையார்க்கு அவன் கேள்வி வியப்பை அளித்தது ; நாவற்கனியில் சுடுபழம், சுடாப்பழம் என இருவகையிருப்பதாக, அவர் அன்றுவரை அறிந்தவரல்லர் ; ஆண்டிலும், உலக அனுபவத்திலும் முதிர்ந்த தனக்குத் தெரியாத ஒன்றை, அச் சிறுவன் அறிந்திருப்பது காண ஔவையார்க்கு நாணம் மிகுந்தது ; அதை ஒருவாறு அடக்கிக்கொண்டு, அப் பையனை நோக்கி, "அப்பா! கொளுத்தும் வெயிலின் கொடுமையை என்னல் தாங்க இயலவில்லை ; இதற்கு மேல் சுடுபழம் உண்பது கூடாது ; சுடாப்பழமாயின் நாவறட்சியையும் தணிக்கும் ; ஆதலின், சுடாப்பழமாகவே பறித்துப் போடு," என்றனர். உடனே சிறுவன் நன்கு கனிந்த கனிகள் சிலவற்றைப் பறித்து ஔவையார முன்னே மணலில் வீசினன்; பழங்கள் நன்கு பழுததிருந்ததால், மணல் மீது விழுந்த உடனே,

அப் பழங்கள் சிறிது நசுங்க, அவ்விடத்தே மணல் சிறிது ஒட்டிக் கொண்டது; அப் பழங்களைக் கையில் எடுத்த ஔவையார், அப் பழத்தில் படிந்து கிடக்கும் மணலைப் போக்க, எல்லோரும் செய்வதேபோல், வாயால் ஊதினார்; உடனே சிறுவன், "பாட்டி! நீ கேட்டது சுடாப்பழமன்றோ? நான் சுடும்பழம் போட்டுவிட்டேன்போல் இருக்கிறதே! பழம் மிகவும் சுடுகிறதோ? ஊதிஊதித் தின்கிறாயே!" என்று நகைத்துக் கேட்டனன்; உடனே ஔவையார்க்கு, அச் சிறுவன் கூறிய சுடுபழம், சுடாப்பழம் யாவை? என்பது புலனாயிற்று; அரும்பெரும் புலவராலும் பாராட்டப் பெறும் அறிவிலே சிறந்த தன்னை, ஆடு மாடு மேய்க்கும் அறியாச் சிறுவன் ஒருவன், அறிவுப் போட்டியில் வென்று விட்டானே என்று வெட்கி, வேதனைப்பட்டுக்,

> "கருங்காலிக் கட்டைக்கு நாணாக் கோடாலி,
> இருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானில்,
> கார் எருமை மேய்க்கின்ற காளைக்கு நான் தோற்றது,
> ஈரிரவும் துஞ்சாது என்கண்."

என்ற செய்யுளைப் பாடினார்; வீணே அவர்க்கு வேதனை தந்தோம்; விளையாடியது போதும் என்று எண்ணிய முருகன், ஔவையார் முன் தோன்றித், தான் இன்னான் என்பதறிவித்து மகிழ்வித்தான்; பின்னர்க் 'கொடியது யாது? இனியது யாது? பெரியது யாது? அரியது யாது? என்று கேட்ட அம் முருகன் ஐய வினாக்களுக்கு விடையாக, அழகிய கருத்து நிறைந்த ஆசிரியப் பாக்கள் நான்கு பாடினார் ஔவையார்.

### (4) ஔவையாரும் பாரிமகளிரும்:

"கொடுக்கிலாதானைப் பாரியே எனக் கூறினும் கொடுப்பாரிலை," எனச் சுந்தரரால், கொடை வள்ளல்களிற் சிறந்தோன் எனச் சிறப்பிக்கப்பெற்ற பாரி, பறம்பு மலைக்கும், அதைச் சூழ உள்ள முந்நூறு ஊர்களைக் கொண்ட

பறம்பு நாட்டிற்கும் உரியோனவன்; குறுநில மன்னனாகிய அவன், புகழ் பெருக வாழ்தல், பேரரசர்களாகிய தங்கள் பெருமைக்கு ஏற்றதன்று என்று எண்ணிய தமிழ் மூவேந்தர் எப்படியோ அவனை அழித்துவிட்டனர்; அவன் இறந்த பின்னர், அவன் உயிர் நண்பராகிய கபிலர், அவன் மகளிர் இருவரையும் உடன் அழைத்துக் கொண்டு விச்சிக்கோன், இருங்கோவேள் என்ற இரு குறுநில மன்னர்பால் சென்று "மணம் செய்து கொள்ளுங்கள் இம் மகளிரை," என மன்றாடியும், பாரிக்கும், மூவேந்தர்க்கும் உண்டாய பகை கண்டு அஞ்சி, அவர்கள் மறுப்பது கண்டு, மனம் மிக நொந்து, மகளிர் இருவரையும் தமக்கினிய பார்ப்பார் சிலர் பால் ஒப்படைத்துப் பாரியின பிரிவாற்றாது வடக்கிருந்து உயிர் விட்டார்.

பார்ப்பார் இல்லத்தில், அவ்விள மங்கையர் வாழ்ந்திருந்தகாலை, ஒரு நாள், பெருமழை பெய்து கொண்டிருக்கையில், ஔவையார் முழுதும் நனைந்த மேனியராய் அவ்வில்லுள் நுழைந்தனர்; வந்தவர் ஔவையார் என்பதை உணர்ந்த அம் மகளிர், ஔவையாரை அணுகி, நனைந்த அவர் ஆடையை அகற்றினர்; உடுத்துக் கொள்ள அவர்க்கு வேறு ஆடை இன்மை அறிந்து, தங்கள் நீலச் சிற்றாடை கொடுத்து நடுங்கும் அவர் குளிர் போக்கினர்; கொல்லையில் கொழுந்துவிட்டு வளர்ந்திருக்கும் கீரையைப் பறித்துக் கொணர்ந்து, சுவைபடச் சமைத்துச் சூடுடன் அளித்து, ஔவையார் பசியையும் போக்கி, அவர் உடற்கும், உள்ளத் திற்கும் ஊக்கம் ஊட்டினர்;

"இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு." (திருக்குறள் : ௨௨௪)

என்ற குறள் உரையைப் போற்றாது, வந்தவர் இன்முகம் காணும் வரை பொருள்களை வாரிவழங்குவதே வாழ்வின் பயன் எனக் கருதியதாலேயே அவர்கள் தந்தை உயிர் துறந்தான்; அவர்கள் அதை அறிந்திருந்தார்கள்; அறிந்திருந்தும்,

"எந்தை நல்கூர்ந்தான் இரப்பார்க்கு ஈந்து என்று, அவன்
மைந்தர், தம் ஈகை மறுப்பரோ—பைந்தொடீ!
நின்று, பயன் உதவி, நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவும் கனி." (நன்னெறி : கள)

என்பதைப்போல், தந்தையை இழந்து, தனித்துயர் உற்றுத் தவிக்கும் அந்நிலையிலும், தமக்கு ஆடையும் உணவும் அளித்துப் பேணிய அவ் விளமகளிர் செயல், ஔவையார் உள்ளத்தில் அளவிலா மகிழ்ச்சியை உண்டாக்கிற்று ; அது, ஔவையார் வாழ்க்கையில் நிகழ்ந்த மூன்று பெரும் நிகழ்ச்சிகளை நினைவூட்டச் செய்தது.

பாரிபால் பரிசில்பெறச சென்றார் ஔவையார்; ஔவையார் தம் அருமை பெருமை அறிந்த அவ் வள்ளற் பெருந்தகை, அவரோடு நெடுநாள் இருந்து பழக விரும்பினான் ; அதனால், அவர்க்கு வேண்டும் பரிசிற்பொருளை, உடனே அளிக்காது நீட்டிப்பானாயினன் ; ஓரிடத்தே இருந்து வாழ்வதினும், வேந்தர் பலர் அவைக்குச் சென்று பாடி வாழ்வதையே புலவர் விரும்புவர் ; ஔவையாரும் அந் நோக்குடையவரேயாதலின், பாரியைப் பிரிந்து, வேறிடம் செல்ல விரும்பும் தம் எண்ணத்தைக் குறிப்பால் வெளியிட்டனர் ; வாய்திறந்து கேட்ட பின்னரும் வழங்குவன வழங்காது வாழ்வது வள்ளல் தன்மைக்கு இழுக்காம் என எண்ணினான்; அவர்க்கு வேண்டும் பொன்னும பொருளும் கொடுத்து வழிவிட்டான் ; என்றாலும், அவர் பிரிவுத் துயர் அவனால் பொறுக்க இயலாதாயிற்று ; அவருடன் மேலும் சில நாட்களாவது இருந்து மகிழாதுபோயின், மனம் அமைதிகொள்ளாது என்பதை உணர்ந்தான் ; உணர்ந்து யாதுபயன்? அவரோ போய்விட்டார் ; இருந்தாலும், அவ்வாசையை அடக்க அவனால் இயலவில்லை ; ஏதேதோ எண்ணி இறுதியில் ஒரு முடிவிற்கு வந்தான் ; தன் ஆட்கள் சிலரை அழைத்தான். "பொன்னும் பொருளும் நிறையக்கொண்டு ஔவையார் செல்கிறார் ; நீங்கள் வழிப்பறியாளர்போல் சென்று அவர்க்கு ஒரு கேடும் செய்யாது, அவர் கைப்பொருளைக் கவர்ந்து வருதல் வேண்டும் ;

உங்களை ஏவியோன் நான் என்பதும், அவர்க்குத் தெரிதல் கூடாது,'' என எச்சரித்து அனுப்பினான்; அவர்களும் அவ்வாறே செய்து முடித்தனர்; காட்டு வழியில் கைப் பொருள் இழந்த ஔவையார், பாரிபால் சென்று நடந்தன கூறி மீண்டும் பரிசில் பெற்றுச் செல்லலாம் என எண்ணி, அவன்பால் மீண்டும் வந்து நிகழ்ந்தன கூறி நனிவருந்தினர்; பாரி, அவர் துயர்க்கு வருந்துவான்போல் காட்டிக் கொண்டு அவர் மீண்டதுகண்டு அகத்தே மகிழ்ந்து, அவரை மேலும் சிலநாள் தன் அரசவையில் இருத்தி மகிழ்ந்து, பின்னர் அவர்க்கு வேண்டுவன அளித்து வழி அனுப்பினான். இஃது ஒரு நிகழ்ச்சி.

பெண்ணையாறு பாயும் திருமுனைப்பாடி நாட்டைத் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தவன் மலையமான் திருமுடிக்காரி என்பவன்; போரில் போராற்றல் வாய்ந்த பெருந்தகை; தமக்குத் துணையாக இவனைப் பெறுவதில், மூவேந்தரும் போட்டியிடுவர்; இவன் யார்க்குப் படைத்துணை அளிக்கின்றானோ அவரே வெற்றி பெறுவர்; அத்தகைய ஆண்மையாளன்; மேலும் பெருங் கொடைவள்ளல்; புலவர் பலர் புகழ வாழ்ந்தவன்; அவனைப் பாடி அவன்பால் பரிசில் பெறச் சென்றிருந்தார் ஔவையார். அவனும், பாரியைப்போன்றே அவரை எளிதில் விட்டுப் பிரிய விரும்பாது, பரிசில்கொடாது நீட்டித்தான்; ஔவையாருக்கோ வேறிடம செல்ல விழைவு; ஒருநாள் காரி, அவன் கொல்லையில் பயிர்களுக்கிடையே தோன்றிய களைகளைக் கொத்திப் போக்கிக் கொண்டிருந்தான்; தன் விருப்பத்தை அறிவித்து விடைபெறவேண்டி அவ்விடம் சென்றார் ஔவையார்; அவர் அங்கு வந்ததன் காரணத்தைக் குறிப்பால் அறிந்த அவன், ஔவையாரை நோக்கிப் "புலவர்ப்பெருந்தகையீர்! நிலமோ அளவிற் பெரிது; களையோ கணக்கின்றி முளைத்துள்ளன; போக்கும் ஆட்கள் கிடைப்பதோ அரிதாக உளது; ஆகவேதான், நானும் இத் தொழிலை மேற்கொண்டேன்; தாங்களும் தங்களால் இயன்ற அளவு சற்றுத் துணைபுரியின் நலம்,'' எனக் கூறிக்

கொண்டே அவர் கையிலும் களைபோக்கும் கருவியொன்றைக் கொடுத்தனன்; அவன் வேண்டுகோளை மறுக்க மாட்டாத ஔவையாரும் அவன் அளித்த பணியை ஏற்றுக்கொண்டு அவனுக்குத் துணைபுரிந்தனர்; பின்னர் நாள்பல கழித்து அவன் அளித்த பரிசில்பெற்று மீண்டார்; மற்றொரு நிகழ்ச்சி இது.

சேர வேந்தன் அவையில் சிறப்புடன் வாழ்ந்திருந்தார் ஔவையார்; அப்போது, அங்குப் பெரியதோர் விருந்தொன்று நடைபெற இருந்தது; விருந்துண்ணப் பலரும் வந்து, தமக்கென அளிக்கப்பட்டிருந்த இடங்களில் அமர்ந்துவிட்டனர்; அவர்களுள் ஒருவராய் ஔவையாரும் அமர்ந்திருந்தார்; அது சேரமானுக்குப் பிடிக்கவில்லை; ஔவையாரைத் தன்னோடு இருத்திக் கலந்துண்ண விருப்பம் என்றாலும் அமர்ந்தவரை எழுப்புவது நன்றன்று; எழுப்புவதாயின் யாது கூறி எழுப்புவது என எண்ணிக் கொண்டிருந்தான்; அந்நிலையில், சிறந்த விருந்தினர் ஒருவர் வந்து சேர்ந்தார்; ஆனால் அவர் இருக்க இடம் இல்லை; அவர்க்கு இடம் அளிக்க வேறு யாரையும் அழைத்தல் கூடாது; இடம் ஒழித்துத் தருமாறு உரிமையோடு அழைக்கக்கூடியவர் ஔவையார் ஒருவரே என்பதை உணர்ந்தான்; அதனால், வந்தவர்க்கும் இடம் கிடைக்கும்; தன் ஆசையும் நிறைவேறும; ஆகவே, அவரை விளித்து "ஔவையே! வாராய்; பின்னர் நாம் இருவரும் ஒருங்கிருந்து உண்ணலாம," என உரிமையோடு அழைத்தான்; அவரும் எழுந்து, வந்தோர்க்கு இடம் அளித்துப் பின்னர்ச் சேரனோடு இருந்து உண்டு மகிழ்ந்தனர்; இது அவர் வாழ்வில் நிகழ்ந்த வேறொரு நிகழ்ச்சி.

இம் மூன்று நிகழ்ச்சிகளையும், தம்மனக்கண்முன்னே கொண்டுவந்து நிறுத்தி, அவற்றோடு, வாழ்வுகெட்ட தம் வறுமை நிலையிலும், அவ்விள மங்கையர், தமக்கு அளித்த நீலச் சிற்றாடைப் பரிசிலை ஒப்பிட்டு நோக்கி, உயர்த்திக் கூறிக் கீழ்வரும் பாக்களைப் பாடிப் பாராட்டினர்.

“வெய்தாய, நறுவியதாய், வேண்டளவும் தின்பதாய்,
நெய்தான் அளாவி, நிறையிட்டுப்—பொய்யே
அடகு என்றுசொல்லி அமுதத்தை யிட்டார்
கடகம் செறியாதோ கைக்கு.”

“பாரி பறித்த பறியும், பழையனூர்க்
காரி அன்று ஈந்த களைக்கொட்டும்—சேரமான்
‘வாராய்’ என அழைத்த வார்த்தையும்; இம்மூன்றும்,
நீலசிற் றாடைக்கு நேர்.”

தம்பால் அன்புகாட்டி ஆதரித்த அம் மகளிர் மணப் பருவம் எய்திய மங்கையராதலின், அவர்க்கு மணம் முடித்துவைத்தலே, தம்முடைய தலையாய கடன் என எண்ணினார் ஔவையார்; அம் மகளிர்க்கு மணம செய்து வைக்க முயன்று தோற்றார் கபிலர் என்பதையும் அவர் அறிவார் ஆதலின், அவர்களை, அவ்வரசர்பால், மீண்டும் அழைத்துச்செல்ல விரும்பவில்லை; பாரிமகளிரை மணந்து கொள்ளத்தக்க பீடும், பெருமையும், அறிவும், ஆற்றலும், ஆண்மையும், அழகும், ஒழுக்கமும், உயர்வும் உடையான் யாவன் என எண்ணிப்பார்த்து, இவ்வளவு உயர் குணங் களும் ஒருங்குடையான், பெண்ணையாறு பாயும் திரு முனைப்பாடி நாட்டுத் திருக்கோவலூர் அரசன், தெய்வீகனே என்பதறிந்து, அவன்பால் அவ்விரு மகளிரையும் அழைத் துச் சென்று மணம் முடித்துக்கொள்ளுமாறு வேண்டினார்; புலவர் வேண்டுவனவற்றைக் குறிப்பான் அறிந்து, அவர் அகமும், முகமும் மலர அள்ளி அள்ளிக் கொடுக்கும அருள் உள்ளத்தனாகிய அவனும், ஔவையாரின் வேண்டு கோளை ஏற்க மறுத்தான்; ஔவையார்க்குச் செய்வ தொன்றும் புலப்படவில்லை.

“ஆடவர் கண்டால் அகறலும் உண்டோ?
பேடியர் அன்றோ பெற்றியில் நின்றிடின்?”

(மணிமேகலை: ௩-௨௪-௫)

என்று பாராட்டுதற்கேற்ற பேரழகும், சீரிளமையும் வாய்ந்தவர் பாரிமகளிர்; குலத்தால், குணத்தால் குறை யுடையாரல்லர்; அறிவிலும், அன்பிலும் அனைவரினும்

சிறந்தவர்; இவ்வளவும் இருந்தும் இவர்களை மணக்க மன்னர்கள் மறுப்பானேன்? மன்னர்கள் ஒருவேளை, மகளிர் முகத்தையே காண மறுக்குமளவு துறவுள்ளம் கொண்டு விட்டனரோ என்றால், இல்லை; அரசன் ஒருவன்பால் அழகுள்ள மகள் ஒருத்தி உள்ளாள் என அறிந்தால் போதும்; அவள் இசையினும் இசையாவிடினும் அவளை மணந்துகொள்ளத் துடிப்பர்; பெற்றோரும், உற்றோரும் மறுப்பின் பெரும்படைகொண்டு அவர் நாட்டையும், கோட்டையையும் அழித்து, அவளை வலிதிற்பற்றி கொணருமளவு வெறிபிடித்தவர்கள்தான் அக்கால அரசர்கள்; என்றாலும், அவ்வரசர்கள், அழகிற்சிறந்த ஆரணங்குகள், அவர் அரண்மனைவாயிலில் வந்து காத்துக்கிடப்பினும், அவர்களை ஏற்றுக்கொள்ள மறுப்பானேன்? என்று எண்ணி யெண்ணிப் பார்த்தனர்; ஒன்றும் விளங்கவில்லை; "மறுப்பது ஏன்?" என்று அரசனையே கேட்டனர். தெய்வீகன், "புலவர் பெருந்தகையீர்! இவ்விள மங்கையர் இருவரையும் மணந்துகொள்ள மறுக்கும உள்ளம் எவர்க்கும் எளிதில் உண்டாகாது என்பது உண்மையே; என்றாலும், இவர்களோ பாரியின் மகளிர்; பாரியோ, பேரரசர்களாகிய சேர, சோழ, பாண்டியர் பகைவன்; அதனாலேயே, அவனை அழித்தும் ஒழித்தனர்; இப்போது நான் இம் மகளிரை மணந்துகொள்வேனாயின், அம் மூவேந்தர் பகையை இருகையேந்தி வரவேற்றவனாவேன்; இன்பம் எனக் கருதித் துன்பத்தை மேற்கொள்ளேன்; இன்று இவர்கள் இன்முகம் கண்டு இரங்கி, இவர்களை ஏற்றுக்கொண்டால், மூவேந்தர்படை நாளை எங்கள் நாட்டின்மீது போர் தொடுக்குமே; அப்போது அதைத்தடுத்து என்னைக் காப்பார் யார்? ஆகவேதான், இவர்களை மணக்க மறுக்கிறோம்," என்று தன் மனத்திடை ஒருங்கே மண்டிக்கிடந்த ஆசையையும், அச்சத்தையும் வெளியிட்டான்.

பாரிமகளிரை மணக்கப் பாரரசர் மறுத்ததற்கான காரணத்தின் உண்மையை உணர்ந்த ஔவையார், அதற்கு யாது செய்வது என எண்ணிப் பார்த்தனர்; அவர்க்கு ஒரு

வழி தோன்றிற்று; வேந்தர் மூவரும் தன்பால் பேரன்புடையவர்; தான் விரும்பும் எதையும் செய்யும் நெஞ்சப் பாங்குமுடையவர்; அவர்களிடத்தே பாரிமகளிர் நிலைகூறி அவரை மணக்கவிரும்பும் மன்னர்பால், பகைகொள்ளுதல் கூடாது என்று வேண்டின் அவர்கள் மறுக்கமாட்டார்கள் மனம் ஒப்புவர்; ஆதலின், அவர்கள் இசைவினைப் பெற்றுத்தர உறுதிமொழி அளித்து, அரசனை, அம் மகளிரை ஏற்குமாறு செய்தல்வேண்டும் என எண்ணினர். அரசனும் அதற்கு இசைந்தான்; உடனே ஔவையார், தெய்வீகன் பாரிமகளிரை மணந்துகொள்ள இசைந்ததை அறிவித்து, அம் மணவிழாவிற்கு வந்து, மணமக்களை வாழ்த்திச் சிறப்பிக்குமாறு, அம் மூவேந்தர்க்கும் கீழ் வருமாறு அழைப்புச் செய்யுட்களை அனுப்பினர்.

"சேரலாகோன் சேரல் செழும்பூந் திருக்கோவல்
ஊராளவும் தான் வருக! உட்காதே;—பாரிமகள்
அங்கவையைக் கொள்ள அரசன் மனம் இயைந்தான்
சங்கவையையும் கூடத் தான்."

"புகார்மன்னன், பொன்னித் திருநாடன், சோழன்.
தகாதென்று தான் அங்கு இருந்து—நகாதே,
கடுக வருக! கடிகோவ லூர்க்கு
விடியல் பதினெட்டாம் நாள்."

"வையைத் துறைவன, மதுராபுரித் தென்னன்,
செய்யத் தகாதென்று தேம்பாதே,—தையலர்க்கு
வேண்டுவன கொண்டு விடிய ஈரொன்பான்நாள்
ஈண்டு வருக! இசைந்து."

அழைப்பு அனுப்பிய ஔவையார், பின்னர்த் திருமணத்திற்கான செலவு வகைகளுக்கு வேண்டும் பொன்னும், பொருளும் ஏராளமாகத் தேவை என்பதை உணர்ந்து அவற்றைப் பிற அரசர்பால் இரந்து பெறுவதினும், தன் ஆற்றலால் தானே தேடலே சிறப்பாம் எனக் கொண்டு வருணனை நோக்கி,

"கருணையால் இந்தக் கடல் உலகம் காக்கும்
வருணனே! மாமலையன் கோவல்—திருமணத்தில்
மும்மாரி பெய்யும் முதுவாரி மையாற்றிப்
பொன்மாரி யாகப் பொழி."

என்ற பாடலைப் பாடினார்; உடனே, அவ்வூரார்க்கும், அம் மணவினைக்கும் வேண்டுமளவு பொன்மழை பெய்து, மக்கள் மனதில் மகிழ்ச்சியை விளைத்தது; இனி, மண விழாக் காண வருவோர்க்கு மனம் விரும்பும் ஆடையும், உணவும் அளித்தல் மணமக்கள் கடனாதலின், அவற்றைப் பெறுவதற்காக,

"பொன்மாரி பெய்யும் ஊரா, பூம் பருத்தி ஆடையாம்;
அந்நாள் வயலரிசி ஆகும் ஊரா—எந்நாளும்
தேங்குபுக ழேபடைத்த சேதிமா நாடதனில்
ஓங்கும் திருககோவ லூரா."

"முத்தெறியும் பெண்ணை முதுநீர் அதுதவிர்ந்து
தத்திய நெய், பால், தலைப்பெய்து—குத்திச
செருமலைத் தெய்வீகன் திருக்கோவ லூர்க்கு
வருமளவும் கொண்டோடி வா."

என்ற இரு பாடல்களைப் பாடினார்; உடனே, அந்நாட்டில் விளைந்திருக்கும் பருத்திச் செடிகள் எல்லாம், ஆடை யாகவே காய்த்தன; அந் நாட்டு நன்செய் வயல்களில் வளர்ந்திருக்கும் செந்நெற் பயிரகளெல்லாம் அரிசியாகவே விளைந்தன. அத் திருக்கோவலூரை அடுத்துப் பாயும் பெண்ணையாற்றில் நீர் ஓடுவது நீங்கி, நெய் ஒருபாலும், பால் ஒருபாலுமாகப் பெருக்கெடுத்து ஓடத் தொடங்கின.

இவ்வாறு திருமணத்திற்கான எல்லாம் இனிது நிறை வேறின. மணநாளும் வந்துற்றது; முடியுடை மன்னரும், குறுநிலமன்னருமாக எல்லா அரசர்களும் அங்குவந்து சேர்ந்தனர்; மணவிழாத் தொடங்கவேண்டிய நேரத்தில் தெய்வீகனுக்கு அளித்த வாக்குறுதியின்படி, "அங்கவை, சங்கவை ஆகியோரை அவன் மணம்செய்து கொள்வதைத் யாம் தடுக்கவில்லை; அதுகுறித்து அவனோடு பகை கொள் ளோம்; இம் மணநிகழ்ச்சியில் எங்களுக்கும் விருப்பமே," என அறிவிக்குமாறு ஔவையார் மூவேந்தரையும் வேண்டி னார்; அவர்கள், ஔவையாரை நோக்கி, "அன்புடையீர்! இம் மணம் எல்லோராலும் ஏற்கத்தக்கதாயின், இம் மணப்

பந்தலில் ஏதேனும் ஓர் அற்புதம் நிகழ்தல்வேண்டும்; அவ்வாறாயின், இத் திருமணத்திற்கு எங்கள் இசைவினையும் தருவோம்: மணமக்களையும் வாழ்த்திப் போற்றுவோம்," என்றனர்; உடனே ஔவையார், அம் மணப்பந்தலுக்குக் காலாக நிற்கும் பனந்துண்டு ஒன்றை நோக்கி,

"திங்கட் குடையுடைச் சேரனும், சோழனும், பாண்டியனும்
மங்கைக்கு அறுகிட வந்துநின் றார்மணப் பந்தரிலே
சங்கொக்க வெண்குருத்து ஈன்று, பசசோலை சலசலத்துக்
கொங்கிற் குறத்தி குவிமுலை போலக் குரும்பைவிட்டு,
நுங்குக்கண் முற்றி, அடிக்கண் கறுத்து, நுனிசிவந்து,
பங்குக்கு மூன்று பழம்தர வேண்டும் பனந்துண்டமே!"

என்ற பாடலைப் பாடினார்; உடனே, வெட்டுண்டு உலர்ந்து போன அப் பனந்துண்டு, உயிர்பெற்றது; வெண் குருத்து வெளிவந்தது; பின்னர்ப் பச்சோலையாக மாறி ஒலித்தது; ஒருபால் பனங்குலை தோன்றி, நுங்கு முற்றிக் காயாகி, காய் கனியாகி, வேந்தர் ஒருவர்க்கு மூன்றாக, மூவேந்தர்க்கு மாக ஒன்பது கனிகளை ஈந்தது. ஔவையாரின், இவ்வரும் பெரும் செயல்கண்டு, அச்சமும் வியப்பும் கொண்டு, மண வினைக்கு மேலும் தடையாக இருத்தல் தகாது எனக் கொண்டு மணவிழாவை முன்னின்று முடித்து, மண மக்களை வாழ்த்தி மகிழ்ந்தனர்; இவ்வாறு, இரவலர் இன் முகம் காணுமளவும் ஈதலே கடனாகக்கொண்டு இறந்து போன ஒரு வள்ளலின் மகளிர்க்குத் துணைபுரிதலே, அவன் பால் பொருள்பெற்று வாழும் புலவர்கள் கடனும் என்ற உயர் பேரெண்ணம் உடையவராய்ப் பாரிமகளிர்க்கு மணம் முடித்து மகிழ்ந்தார் ஔவையார்.

## (5) பலாத்தழைக்கப் பாடியது:

குறவன் ஒருவனுக்கு மனைவியர் இருவர்; அவருள் இளையாள்மீதே அவனுக்கு மாறா அன்பு; அவன் தன் வீட்டு வாயிலில் பலாமரம் ஒன்றை மிகவும் அருமையாகப் பேணி வளர்த்து வந்தான்; ஒருநாள் வேற்றூர் போகும் அவன், அப் பலாவைப் பேணிக்காக்கும் பணியை இரு

மனைவியர்பாலும் ஒப்படைத்துச் சென்றான்; அவன் மீண்டும் வருவதற்குள், இளையாள் அம் மரத்தை வெட்டி வீழ்த்திவிட்டு, மூத்தாள்மீது பழி சுமத்தத் துணிந்தாள்; இளையாள்பால் கொண்டிருக்கும் அன்பால், அவள் கூறு வதையே அவனும் உண்மையெனக் கொள்வன்; அவனுக்கு அப் பலாமீது இருக்கும் ஆர்வத்தால் தன்னை யாது செய் வானோ என அஞ்சி அழத்தொடங்கினாள்; அப்போது அவ்வழியாக வந்த ஔவையார், அழுதுகொண்டிருக்கும் அவள்பால் சென்று, அவள் துயர் கேட்டறிந்து, அவள் பால் அன்பும் இரக்கமும் கொண்டு, அவள் அளித்த ஒரு படி தினையைப் பெற்றுக்கொண்டு,

"கூரிய வாளால் குறைத்திட்ட கூன்பலா,
ஓரிதழாய்க், கன்றாய், உயர்மரமாய்—சீரியதோர்,
வண்டுபோல் கொட்டையாய், வண்காயாய்த், தின்பழமாய்ப்,
பண்டு போல் நிற்கப் பலா.

எனப் பாடி, அப் பலாமரத்தைப் பண்டேபோல் தழைத்து நிற்கச்செய்து, மூத்தாள் துயர் துடைத்துச் சென்றார்.

## (6) ஔவையாரும், கம்பரும்:

ஔவையாருக்கும், கல்வியிற் பெரியாராகக் கருதப் படும் கம்பருக்கும் யாது காரணத்தாலோ பகை உண்டாகி விட்டது; அதன் காரணத்தால் கம்பரையும், அவர் பாடல் களையும் பழிப்பதை வழக்கமாகக்கொண்டார் ஔவையார்; கம்பரை அரசவைப் புலவனாகக்கொண்டு பெருமை செய் யும் சோழ அரசன், அவர் பாடலைப் புகழ்ந்து பாராட்டு வதைக் காணப்பொறாமல், ஔவையார், "கம்பன் பாடல் கற்றோர் போற்றுதலைப்பெறும் பெருமை வாய்ந்ததன்று; அவர், பாராட்டப் பெறுதற்குப் பேரரசன் ஒருவனைச் சார்ந்து பெருவாழ்வு வாழ்வது காரணமேயன்றி, அவர் அறிவோ, புலமையோ காரணமாகா; அறிவுடையோர் இல்லாவிடத்தேதான் அவர் பாட்டுப் பெரும் பாட்டாகப் பாராட்டப்பெறும்; கற்றோர்முன்னர் அவர் புகழ் அற்றுப் போகும்," என வசைபாடி வருவாராயினர்; மேலும்,

அப் பகை காரணமாகவே, சிலம்பி என்ற பெண் ஒருத்தியிடம் ஐந்நூறு பொன் பெற்றுக்கொண்ட கம்பர், அவள் மீது பாதிப்பாட்டே பாடிவிட்டுவர, ஔவையார், அவள் அளித்த கூழ் உணவிற்காகவே, அப் பாட்டின் பின் இரண்டு அடிகளைப் பாடிமுடித்து, அவளைப் புகழ்ந்ததோடு, ஏழை அளிக்கும் கூழுக்கும் பாடும் எளியவள் ஔவை எனத் தனக்குப் புகழையும், கைந்நிறையப் பொருள் பெற்றும், குறைபாட்டுப் பாடும் செருக்குடையோன் கம்பன் எனக் கம்பர்க்குப் பழியையும் பெற்றுத் தந்தாள். இவ்வாறு தன்னைப் பழிப்பதையே தொழிலாகக்கொண்டிருக்கிறாள் ஔவை என்பதறிந்த கம்பன், ஔவையார்பால் சினங்கொண்டு, அவரை "அடி" என அழைத்து இழிவு செய்தாராக, ஔவையார், கம்பன் தன்னை ஒரு சொல்லால் இழிவுபடுத்தியதற்காக அவரை, அவலட்சணம், எருமைக் கிடா, கழுதை, குட்டிச்சுவர், குரங்கு என்ற இழிசொற்கள் பல கூறி அழைத்துத் தாழ்வுபடுத்தினார்.

மேலும், வேளூர்ப்பூதன் விருந்தின் சிறப்பு, கோரைக்கால் ஆழ்வான் கொடையின் இழிவு, சோமன் கொடை அருமை ஆக இவை குறித்தும் ஔவையார் அழகிய பாடல்கள் பல பாடினார் எனவும் தமிழ் நாவலர் சரிதை நமக்கு அறிவிக்கிறது. இவையேயன்றி, ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி முதலாய நூல்களையும் ஔவையாரே பாடினார் என்றும் கூறுவர்.

---

## ௯. ஔவையார் கதைகளின் ஆராய்ச்சி

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு." (திருக்குறள்: ௪௨௩)

என்ற பொருளுரையை மேற்கொண்டு, கூறும் ஆளின் தகுதி திறமைகளை நோக்காது, அவர் கூறிய, பொருளின் உண்மை அன்மைகளை அறிந்துகொள்வதை விடுத்து, கூறிய பொருளின் உயர்வுதாழ்வுகளை உள்ளவாறு உணர்ந்து மதிக்க மறுத்து, கூறிய ஆளின் தகுதி, தகுதியின்மைகளுக்கேற்ப, அவர் கூறும் பொருளை ஏற்பதும் தள்ளுவதும் ஆகிய இழிநிலைக்கு நாடு வந்துவிட்டது; நாட்டின் நிலை இதுவென அறிந்துகொண்ட காரணத்தால், தம் மனத்திடை மலர்ந்த எண்ணங்கள் நல்லன ஆயினும் சரி, தீயன ஆயினும் சரி, அவற்றை நாட்டு மக்கள் ஏற்க வேண்டும் என்று எண்ணியவர்கள், அவ்வளவு பேரும், அவை தம் கருத்தே, தம் உள்ளத்திடை உதித்தனவே என்று கூறுவதற்குப் பதிலாக, அன்று, அந் நாட்டு மக்கள் மனத்தில் இடம்பெற்றிருக்கும் மதிக்கத்தக்க பெரியார் ஒருவரைக் காட்டி, அவர் கூறிய கருத்து இது, என்று கூறுவதை வழக்கமாக மேற்கொள்வாராயினர்; "அவர் கூறினாரா? சரி; அது நல்லதாகத்தான் இருக்கும்; அதை நாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்;" என்று எண்ணி ஏமாந்து விடுகின்றனர் மக்கள்; எப்படியோ "நம் கருத்து, நாட்டு மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டதே," என்பதிலே அக் கருத்தாளர்களுக்கு அகமகிழ்ச்சி. இந்த வழக்கம் இன்று மட்டும் காணக்கூடியதன்று; எத்தனையோ நூறு ஆண்டுக்காலமாகவே, இவ்வழக்கம் நாட்டில் இடம்பெறத் தொடங்கியுள்ளது.

இடைக்காலத்தில் யார யாரோ பாடல் புனைந்தனர்; அப் பாடல்கள், எத்தனையோ பொருள்களை அடிப்படையாகக் கொண்டு பாடப்பெற்றுள்ளன; ஆனால், அப் பாடல்களைப் பாடிய புலவர் யார்? என்பதை இப்போது அறிதல் இயலாது; பாட்டைப் பாடிய புலவர்கள், அப் பாடல்கள்,

தம்மால் பாடப்பெற்றனவே என்பதை, அக்கால மக்கள் அறிந்தால், அவற்றை ஏற்க மறுப்பரோ என அஞ்சினர்; ஆகவே, அவர்கள், அக்கால மக்களால் மதித்துப் போற்றப் பெறும். மறைந்துபோன புலவர் சிலர் பெயரைக் கூறி, "அவர்கள் பாடிய பாடல் இவை; இன்ன இடத்தில் கண்ட ஏட்டில் கண்டவை இவை" எனக் கூறினர்; அதனால், அக்கால மக்களும் அவற்றை ஏற்றுப் போற்றினர்; அன்று முதல், புலவர் ஒருவர் பாடாத பிறர் பாடிய பாடல்கள் பல, அப்புலவர் பாடியனவாகத் தமிழ்நாட்டில் உலவலாயின; ஏமாறுவதும், ஏமாற்றுவதும் ஆகிய இந்நாடகம், இங்ஙனம், எங்கும் நிகழத்தொடங்கவே, அந்நாடகம் மேலும் வளர லாயிற்று; பாடாத பாடல்களைப் பாடினர் என்பது ஏற்றுக் கொள்ளப்படவே, "இப்பாடல் பாடியது இன்ன காலத்தில்; இன்ன காரணத்திற்காக; இப்பாடல் பாடியதால் விளைந்த பலன் இது' எனச் சில கதைகளை இட்டுக் கட்டிக்கூறவும், அவற்றை நம்பவும் மக்கள் தொடங்கிவிட்டனர்; இவ்வழி யாகப் பண்டைப் புலவர்கள் பாடாத பல பாடல்கள், அவர் பாடியனவாகக் கருதப்பட்டதோடு, அவர்கள் வாழ்க்கை யில் நடைபெறா நிகழ்ச்சிகள் பலவும், அவர்கள் வாழ்க்கை யோடு தொடர்பு படுத்தவும் பட்டுள்ளன. முற்பகுதியில் கூறப்பட்ட ஔவையார் வரலாறு குறித்த கதைகள் எல்லாம், இம்முறையாகத் தோன்றியனவே ஆதலின், அக் கதைகளின் உண்மை அன்மைகளை உள்ளவாறு அறிய முயலுதல் தமிழறிஞர் கடனாகும்.

ஔவையார் பிறப்புக் குறித்தும், அவரோடு உடன் பிறந்தாராகக்கொள்ளும் உப்பை, அதிகமான், உறுவை, கபிலர், வள்ளி, வள்ளுவர் முதலியோர் பிறப்புக் குறித்தும் வழங்கும் கதைகளை, ஒரு முறை நோக்கினாரும், அக் கதை களுக்கிடையே ஒருமைப்பாடு இல்லாமையை உணர்வர்.

திருவள்ளுவர் சரித்திரம், அகத்தியர் புதல்வர் பெருஞ் சாகரர் என்பவருக்கும் திருவாரூர்ப் புலைச்சி ஒருத்திக்கும் பிறந்தவர் பகவன் என்றும், தவமுனி என்பவருக்கும், அருள்மங்கை என்னும் பார்ப்பனப் பெண்ணிற்கும்

பிறந்து உறையூர்ப் பெரும்பறையனாலும், நீதி ஐயன் என்னும் பார்ப்பனனாலும் வளர்க்கப் பெற்றவள் ஆதி என்றும் கூறுகிறது.

கபிலரகவல், பகவன் பிறப்புக் குறித்து ஒன்றும் கூறாது, அவனை அருந்தவ மாமுனி என்று மட்டும் குறிப்பிட்டு, ஆதியைக் கருவூர்ப் புலைச்சி என்று கூறுகிறது.

ஞானமிர்தம், ஔவையார் தந்தை பகவன் என்பதற்குப் பதிலாக, யாளிதத்தன் என்றும், தாய் ஆதப் புலைச்சி என்றும் கூறி, அவர் இருவர் தொடர்பு குறித்துப் புதியதோர் கதை கூறுகிறது.

திருவள்ளுவர் சரித்திரம், நான்முகன் வள்ளுவராகவும், நாமகள் ஔவையாராகவும் அவதரித்தனர் என்று கூறப், புலவர் புராணம், நான்முகன் பகவனாகவும், நாமகள் ஆதியாகவும் அவதரித்தனர் என்று கூறுகிறது.

திருவள்ளுவர் சரித்திரம் முதலாயின, ஔவையார் பிறந்த இடம் பாணர்சேரி என்று மட்டும் குறிப்பிட்டு, ஊர்குறிப்பிடாமற்போக, விநோதரசமஞ்சரி, அவர் உறையூர்ப் பட்டினத்துச் சாவடியில் பிறந்தார் என்று குறிப்பிடுகிறது.

பன்னிருபுலவர் சரித்திரம், ஔவையார் தந்தை வேதமொழி என்பார் மகன் பேராளி என்னும் பார்ப்பனன் என்று மட்டும் கூறி, அவர் தாய் பெயர் குறியாது, அவள் ஓர் இழிகுலபெண் என்று மட்டும் குறிபபிட்டு, அவ்விருவர் வரலாறு குறித்து முற்றிலும் வேறுபட்டதோர் கதை காட்டுகிறது.

இவ்வாறு, ஔவையார் பிறப்புக் குறித்து வழங்கும் கதைகள் எல்லாம், ஒன்றற்கொன்று மாறுபடுவனவாகவே காணப்படுதலாலும், இக்கதைகளைக் கூறும் நூல்கள் எல்லாம், ஔவையார் காலத்தே எழுதப் பெறுமல், அவர் காலத்திற்கு மிகமிகப் பிற்பட்ட காலத்தே எழுதப் பெற்றன ஆதலாலும், அக்கதைகள் எல்லாம், பிற்கால

மக்கள், மனக்கற்பனையில் தோன்றி வளர்ந்தனவேயன்றி உண்மை வரலாறுகளாகா என்பதும், அவற்றை அடிப்படையாகக் கொண்டு ஔவையார் முதலியோர் வரலாற்றினை வரையறுப்பது கூடாதாம் என்பதும் தெளிவு.

இனி, அவ்வரலாறு உரைக்கும் நூல்களுள் ஒன்றான "கபிலரகவல்" என்ற நூலை, இயற்றியவர், ஔவையாரோடு ஒரு காலத்தே வாழ்ந்த கபிலர் ஆதலின், அவர் கூறுவதையும் ஆதாரமற்றது எனத் தள்ளிவிடுவது அறிவுடைமையாகுமா என எண்ணுவர் சிலர்; கபிலர் அகவல் என்ற அந்நூல், "பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்டு, மக்களிடையே காணும் சாதி வேறுபாடுகளைக் களைந்து ஒழிக்க விரும்பிய பிற்காலப் புலவர் ஒருவரால் இயற்றப்பட்டதே அன்றி, பழந்தமிழ்ப் புலவரும், பரணர் தோழரும் ஆய கபிலரால் இயற்றப்பட்டது அன்று என்பதே ஆன்றோர் முடிபாதலின், அந்நூல் கூறும் வரலாறும் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று.

"அகர முதல எழுத்தெல்லாம்; ஆதிபகவன் முதற்றே உலகு" என்ற முதற்குறளில் வரும் ஆதிபகவன் என்ற சொல்லை, ஆதியும், பகவனும் என இரு சொல்லாகக் கொண்டு, அவை, அக்குறளாசிரியராய திருவள்ளுவரின் தாய், தந்தையரைக் குறிக்கும் எனக் கொண்டோர் கற்பனையை அடிப்படையாகக் கொண்டே இக் கதைகள் எல்லாம் தோன்றியிருத்தல் வேண்டும்.

ஔவையார் விநாயக வழிபாடு செய்யும் வழக்கமுடையார்; அவ் வழிபாட்டின் பயனாகவே, அவர் கைலை செல்ல முடிந்தது எனக் கூறும் கதையும் ஆதார மற்றதே; சேரமான் பெருமாள் நாயனாரும், சுந்தரரும் கைலை சென்ற நிகழ்ச்சியைக் குறிப்பிடும் சேக்கிழார், அவரோடு ஔவையாரும் சென்றார் என்ற நிகழ்ச்சியைக் குறித்தாரல்லர்; அப் புராணம் கூறுவதற்கும், ஔவையார் கதை கூறுவதற்கும் வேறுபாடுகள் இருக்கக் காண்கிறோம்; பெரியபுராணம், சிவபெருமான் அனுப்பிய வெள்ளை யானை மீது சுந்தரர்

சென்றுவிட்டார்; அவர் சென்றுவிட்டது கண்ட சேரமான் தம் குதிரைமீது அவரைத் தொடர்ந்தார் என்று கூறுகிறது; ஔவையார் கதை, இருவரும் இணைந்தே சென்றனர் என்று கூறுவதோடு, அவ்விருவர் சென்ற ஊர்திகள் என யாதேனும் இரண்டினைக் கூறுவதற்குப் பதிலாக, யானை, தேர், குதிரை என மூன்றைக் குறிப்பிடுகின்றது; இருவர் செல்ல மூன்று ஊர்திகள் ஏன்? அல்லது தேரில் சென்ற மூன்றாவது ஆள் யார்? என்பன பற்றிய தெளிவுமில்லை; மேலும், அப்பாட்டு, விநாயகரை வழிபடுவார்க்கு ஆகாதன இல்லை என்று கூறி, "யானையும், தேரும், அதன் பின் வரும் குதிரையும் காதம்; கிழவியும் காதம்" என்று கூறுவதன்றி, சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரர் இவர் பற்றிய வரலாற்றை அறிவிக்கும் ஆற்றலுடையதாகத் தோன்றவில்லை.

மேலும், சங்கப்புலவர்கள் அறிந்து கூறிய கடவுளர்களாகச் சிவன், திருமால், முருகன், வருணன், இந்திரன், பலராமன், கண்ணன் முதலியோரைத்தான் சங்கச் செய்யுட்கள் அறிவிக்கின்றனவே யன்றி, அவா அறிந்த கடவுளர்களில் ஒன்று யானைமுகக் கடவுள் என்று அறிவிக்கவில்லை. ஆதலின், சங்ககாலப் புலவராகிய ஔவையாா விநாயகரை வழிபடும் வழக்கமுடையார் என்பதை ஏற்றுக்கொள்ளுமாறில்லை. மேலும், விநாயக வழிபாடு, தமிழர்க்குப் புறம்பானது என்றும், சாளுக்கிய இரண்டாம் புலிகேசி என்பானை வெல்ல, பல்லவ நரசிம்மவர்மனால் அனுப்பப் பெற்ற, பெரியபுராணத்தில் சிறுத்தொண்டர் என அழைக்கப் பெறும், அவ்வரசன் தண்டத் தலைவர் பரஞ்சோதி என்பார், கி. பி. 642-ல் சாளுக்கிய தலைநகர் வாதாபியை வென்று அழித்து, ஆங்கிருந்து கொணர்ந்த அரிய பொருள்களுள் யானைமுகக் கடவுளும் ஒன்று என்றும், அதுவே வாதாபி விநாயகர் என அழைக்கப்பட்டது என்றும், அன்று முதல்தான் விநாயக வழிபாடு தமிழ் நாட்டிலும் இடம் பெற்றது என்றும் வரலாற்றுக் குறிப்பு உண்டு.

ஔவையார் வாழ்ந்த சங்ககாலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்பர்; இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒருவர், கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிறகே, வழக்கத்தில் வந்த விநாயக வழிபாட்டினை மேற்கொண்டிருந்தார் என்பது எவ்வாறு பொருந்தும்? ஆகவே, விநாயக வழிபாடு பற்றிய ஔவையார் கதையும் கற்பனையன்றி உண்மையன்று என்பதே முடிபாம்.

பாரிமகளிர் மணங்குறித்துப் பல்வேறுபட்ட கருத்துக்கள் நாட்டில் நிலவுகின்றன:—பாரிமகளிரைப் பார்ப்பார்க்கு மணம்புரிவித்தார் கபிலர்—பாரியின் அடைக்கலப் பெண்ணை மலையர்க்கு உதவினார் கபிலர்—பாரிமகளிர் இருவரையும் தெய்வீகனுக்கு மணம்புரிவித்தார் ஔவையார்—பாரிமகளிருள் ஒருத்தியை மலையனுக்கு மணம் செய்வித்தார் கபிலர்; மற்றொருத்தியை தெய்வீகனுக்கு மணம் புரிவித்தார் ஔவையார்—அங்கவை, சங்கவை என்பார் சிங்கள நாட்டுப் பார்சாலன் புதல்வியர்; அவர்களை ஔவையார் தெய்வீகனுக்கு மணம்புரிவித்தார்—விச்சிக்கோன், இருங்கோவேள் இருவரிடத்துப் பாரிமகளிரை உடன்கொண்டு சென்று பயனின்றி மீண்ட கபிலர், அம்மகளிரைப பார்ப்பார்பால் அடைக்கலமாக விட்டு, மலையமானிடம் சென்று, அவனை உடன் படுத்தி, பின்பு அம்மகளிரைக்கொடு சென்று அவனுக்கு மணம்புரிவித்தனர்.

இவ்வாறு பாரிமகளிர் மணவினைக்குத் துணைபுரிந்தார் கபிலரா? ஔவையாரா? ஔவையார் துணைபுரிந்தார் எனின் ஒருவர் மணவினைக்கா? இருவர் மணவினைக்குமா? என்பன போன்ற ஐயங்களுக்கு ஏற்றதோர் தெளிவுகாண மாட்டாமையாலும், அவ்விருவர், மணவினைக்கு, ஔவையார் தம் அறிவும் ஆற்றலும் துணைபுரிந்ததாகக் காணுமல், அவர்தம் ஆண்டவன் அன்பே பெருந்துணை புரிந்ததாகக் காணப்படுதல் அறிவிற்குப் பொருந்தாது ஆதலாலும், பாரிமகளிர் மணத்திற்கு முயன்றார் கபிலர் எனக்கூறும் புறநானூற்றுச்சான்றும், அம்மகளிரை மலையற்கு மணம் புரிவித்தார் கபிலர் எனக்கூறும், திருக்கோவலூர்ச் சாஸனச் சான்றும்

(South Indian Inscription Vol. VII No. 863) அவரைத் தெய்வீகனுக்கு மணம் செய்வித்தார் ஔவையார் எனக் கூறும் தமிழ் நாவலர் சரித்திரச் சான்றினும் வலிவுடையன, ஏற்றுக்கொள்ளத்தக்கன ஆதலாலும், பாரிமகளிர் மணத்திற்கு ஔவையார் துணைபுரிந்தார் எனக்கூறுவதை உண்மையென ஏற்றுக் கோடற்கின்று.

ஔவையார் வாழ்க்கையோடு தொடர்புடையதாகக் கூறப்படும் பிற நிகழ்ச்சிகளுக்கும் சான்றாக நிற்பது தமிழ் நாவலர் சரிதையில் வரும் ஔவையார் பாடல்களாம்; அத் தமிழ் நாவலர் சரிதையில் காணப்படும் அப் பாடல்கள் ஔவையார் பாடியன அல்ல என்பதே அறிஞர்கள் கருத்து; அதற்கு அவர்கள் காட்டும் ஆதாரங்கள் பல.

"தண்ணீரும் காவிரியே" என்ற செய்யுளைப் பொய்யா மொழிப் புலவர் பாதிபாட, ஔவையார் பாதி பாடினார் என்று கூறுகிறது தமிழ் நாவலர் சரிதை; கம்பர் பாதிபாட ஔவையார் பாதிபாடினார் என்று கூறுகிறது தனிப்பாடல் திரட்டு. இவ்வாறு, பாட்டு ஒன்றே ஆகவும், அப் பாட்டு குறிப்பிடும் வரலாற்றைக் குறிப்பிடுவதில், தமிழ் நாவலர் சரிதையும், தனிப்பாடல் திரட்டும் வேறுபடுகின்றன.

சங்க இலக்கியங்களுக்கு இலக்கணமாம் எனப்படும் தொல்காப்பியத்தில் குறிப்பிடப்பெறாத, தொல்காப்பியர் ஏற்றுக் கொள்ளாத, நேரிசை வெண்பாக்களும், எண்சீரடி ஆசிரிய விருத்தமும் தமிழ் நாவலர் சரிதையில் இடம் பெற்றுள்ளன.

சங்கச் செய்யுட்களில் வழங்கப்பெறாத ஆலகம், பிரமன், கோ.ரதுகோடி, கங்காளன், கண்ணுலம, அகளங்க, சபித்து, சங்கியாரே போன்ற வடசொற்கள் தமிழ்நாவலர் சரிதையில் காணப்படும் ஔவையார் பாடல்களில் காணப் படுகின்றன.

ஆகவே, அத்தமிழ் நாவலர் சரிதைக்கண்வரும் பாடல்களை ஆதாரமாகக் கொண்டு கூறப்படும அக்கதைகளும் ஆதாரமற்றன என்பதே முடிவாம்.

தமிழ் நாவலர் சரிதைச் செய்யுட்களில் காணப்படுவதுபோன்றே, சங்ககாலத்துச் செய்யுட்களில் பயிலாத சில சொல்லாட்சி முறைகள், ஔவையார் பாடியவை எனக்கூறப்படும் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வாக்குண்டாம், நல்வழி முதலாய நூல்களிலும் பயின்றுவரக் காண்கிறோம்.

ச, சை, ஞ இவ்வெழுத்துக்கள் மொழிக்கு முதலில் வாரா என்று தொல்காப்பியம் கூறுகிறது: சனிநீராடு; ஞயம்படவுரை; சையெனத்திரியேல்; சந்ததிக்கழகு வந்திசெய்யாமை; சையொத்திருந்தால் ஐயமிட்டுண்; என்னும் தொடர்கள் அவர் நூல்களில் வந்துள்ளன; சங்ககாலத்துப் பயின்று வாராத, உபகாரம், விடகாரி போன்ற பல வடசொற்களும் அந் நூல்களில் ஆளப்பட்டுள்ளன.

வான்கோழி என்ற பறவை ஆங்கிலத்தில் டர்க்கி (Turkey) என அழைக்கப்பெறும்; இப் பறவை துருக்கி நாட்டினின்றும் கொண்டுவரப்பட்டது எனக்கருதப்படுவதால் அதற்கு அப்பெயர் இட்டு வழங்குவர்; துருக்கர் கி. பி. 10 ஆம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்தவராவர்; ஆகவே, இப்பறவையைப் பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னரே நம் நாட்டினர் அறிந்திருத்தல் கூடும் அப் பறவை கோழியின் இனத்தைச் சார்ந்து பெரிதாய் இருந்தமை பற்றி, அதற்கு "வான் கோழி" எனப் பெயர் இட்டு வழங்கினர். ஔவையார், அப் பறவையை அறிந்துள்ளார்; "கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி" என அதைப் பாடியும் உள்ளார்; இரண்டாம் நூற்றாண்டு ஔவையார், பத்தாம் நூற்றாண்டுப் பறவையைப் பார்த்துப் பாராட்டியது எவ்வாறோ!

"மதுரமொழி நல்லுமையாள்" என்ற செய்யுள், ஔவையார், சுந்தரரோடு கைலை சென்றார் என்று கூறுகிறது; "தேவர் குறளும்" என்ற செய்யுளில் வரும் "மூவர் தமிழும்" என்ற தொடர் சுந்தரர் பாடிய தேவாரத்தைப் பாராட்டினர் ஔவையார் என்று கூறுகிறது; மூவர் தேவாரமும், மணிமொழியார் இருமொழியும்

முறைப்படுத்திப் பாராட்டப் பெற்றது அந் நால்வர் காலத்திற்குப் பின்னரே என்பர்; என்றால், சுந்தரரோடு தாமும் கைலை சென்றதாகக் கூறும் ஔவையார் பாடலை உண்மையெனக் கொள்வதா? சுந்தரருக்குப்பின் வாழ்ந்து அவர் பாடலைத் தாமும் பாராட்டியதாகக் கூறும் ஔவையார் பாடலை உண்மையெனக் கொள்வதா?

இம் முரண்பாடுகளையும், இடர்ப்பாடுகளையும் நோக்கின், சங்க நூல்களாகிய அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகைக்கண் வரும் ஔவையார் பாடல்கள் அறிவிக்கும ஔவையார் வரலாறே அவர் உண்மை வரலாறும்; தமிழ் நாவலர் சரிதையும் பிறவும் கூறும் ஔவையார் வரலாறு அவர் வரலாறு ஆகாது என்றும், மேற்கூறிய சங்கச் செய்யுட்கள்மட்டுமே ஔவையார் பாடல்களாம்; ஏனைய அவர் பாடியன ஆகா என்றும் கொள்வதே அறிஞர்கள் முடிபாம்.

இனி, இவ் இடர்ப்பாடுகளைப் போக்க, ஔவையார் என்ற பெயருடையார் ஒருவரல்லர்; இருவர்; ஒருவர், கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்து சங்கச் செய்யுட்களைப் பாடியவர்; மற்றொருவர், பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ் நாவலர் சரிதையில் வரும் பாடல்களையும், பிற நீதிநூல்களையும் பாடியவர் என்று கொள்வாரும் உளர்.

அவ்வாறு கொள்வதால், ஔவையார் சுந்தரரோடும். பொய்யாமொழிப் புலவர் அல்லது கம்பரோடும் தொடர்பு கொள்வதற்கும், விநாயகரை அறிந்து வழிபடுதற்கும். வான்கோழியைத் தெரிந்து பாடுவதற்கும், நேரிசை வெண்பாக்களாகவும், எண்சீரடியாசிரிய விருத்தமாகவும் பாடித் தள்ளுவதற்கும், வடசொற்களையும், வடசொற் சிதைவுகளையும் தம் பாட்டில் வாரி வழங்குவதற்கும் உள்ள தடைகள் நீக்கப்படுகின்றன என்றாலும், போக்க முடியாப் பெருந்தடைகள் சில புதியவாகத் தோன்றுதலை அவர்கள் அறிய மறந்து விடுகின்றனர்.

தமிழ் நாவலர் சரிதையில் காணப்படும் செய்யுட்களைப் பாடியவர் இரண்டாம் ஔவையாரே என்பதை ஒப்புக்கொள்வதாயின், அச் செய்யுட்கள் கூறும் வரலாறுகள் அனைத்தும், அவ் விரண்டாம் ஔவையாரோடு தொடர்புடைய உண்மை வரலாறுகளாம் என்பதையும் ஒப்புக்கொள்ளுதல் வேண்டும்; அப் பாடல்களைப் பாடிய ஔவையாரே, பாரிமகளிர்க்கு மணம்செய்து வைத்ததாகவும், அதிகமான் கொடுத்த நெல்லிக்கனி உண்டு நெடுநாள் வாழ்ந்ததாகவும்,

> "பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும்
> ஆங்குவரு பாற்பெண்ணை ஆற்றினையும்—ஈங்கே,
> மறப்பித்தாய்; வாழ்அதிகா! வன்கூற்றின் நாவை
> அறுப்பித்தாய்; ஆமலகம் தந்து."

அப்பாடல்கள் அறிவிக்கின்றன; இவற்றையும் உண்மையென ஒப்புகொள்ளுதல் வேண்டும்; ஆனால், அதியமான் கொடுத்த நெல்லிக்கனி உண்டவர் சங்க காலத்து முதல் ஔவையாரே; பாரிமகளிர் மணத்திற்கு ஔவையார் துணைபுரிந்தது உண்மையாயின், அவ்வாறு துணைபுரிந்தாரும் அம்முதல் ஔவையாராகவே இருத்தல் வேண்டும் என்பது அனைவரும் அறிந்த உண்மை; ஆகவே, முதல் ஔவையார்க்கு உரிய இச் செயல்களைத் தமக்கு உரியதாக இரண்டாம் ஔவையார் ஏற்றுக்கொண்டு கூறுவது எவரும் ஏற்றுக்கொள்ளக்கூடாத ஒன்றும்; அவ்வாறு கூறுவது தவறு; ஆகவே, அவ்வாறு கூறும, தமிழ் நாவலர் சரிதைச் செய்யுட்களும் தவறுடையனவே. இவ்விருவரலாறு குறித்துக் கூறும் செய்யுட்கள் தவறுடையன என்பது பெறப்படவே, அவ்விரணடாம் ஔவையாரின் பிறவரலாறுகளைக் கூறும் பிற செய்யுட்களும் தவறுடையனவே என்று கொள்வதே நேரிய முறையாம்.

ஆகவே, முன்னர் முடித்துக் கூறியதைப்போன்றே, தமிழ் நாவலர் சரிதைக்கண் வரும் பாடல்கள்முதல் ஔவையாரால் பாடப்பெற்றனவும் அல்ல; ஔவையார்

என்ற பெயர்கொண்டு பிற்காலத்தே வாழ்ந்த ஒருவரால் பாடப்பட்டனவும் அல்ல; அவை அனைத்தும் யாரோ, பெயர் அறிவியாப் பிற்காலப் புலவர் ஒருவரால் பாடப் பெற்று, ஔவையார் தலைமீது சுமத்தப்பெற்ற அநாதைப் பாடல்களே என்று கொள்வதே முடியாம்.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி என்ற இந் நூல்கள் ஔவையாரால் பாடப் பெற்றன எனக் கூறப்படுவதும் தவறே எனக் கேட்கலாம். நாலடியார் என்ற நூல் ஒருவரால் பாடப்பெற்ற நூல் அன்று; சங்கம் அமைத்து வாழ்ந்த சமணப்புலவர் பலரும் ஒவ்வொரு பாடல்பாட, அப் பாடல்களை எல்லாம் திரட்டித் தொகுக்கப்பெற்ற நூலே நாலடியார்; இஃது உண்மை யென்பது, ஒரே கருத்தினைக் கொண்ட பல பாக்கள் முன்னும் பின்னுமாக அந் நூலுள் காணப்படுவதால் மெய்ப்பிக்கப்பெறும். அதைப்போன்றே, ஆத்திசூடி முதலிய நூல்களை நோக்கியவழி, ஒரு கருத்தே மீண்டும் மீண்டும் கூறப்படுவது உய்த்துணரப்படும். அதனால், அவற்றை இயற்றியோரும் ஒருவராக இரார்; பலர் பல காலங்களில் பாடின அவற்றைத் தொகுத்து நூலாக ஆக்கினர்; என்று கொள்ளத் தோன்றும்; அவ்வாறு பாடிய அவர்கள் அனைவரும் கூடி ஓர் அவை அமைத்து வாழ்ந் திருத்தலும் கூடும்; அவர்கள் பாடியன ஆதலின், அந் நூலாசிரியர் பெயராக "**அவையார்**" என்பது குறிப்பிடப் பட்டிருத்தலும் கூடும்; ஔவையார் என்ற சொல் பழந் தமிழ் ஏடுகளில் "அவ்வையார்" என்றே காணப்படும்; "அவையார்" என்பதையும், "அவ்வையார்" என்பதையும் கண்ட ஏடு எழுதியோர், "அவையார்" என்ற சொல் தோன்றிய காரணத்தை அறியமாட்டாமையால், அச் சொல்லை, "அவ்வையார்" என்ற சொல்லின் பிழைபட்ட வடிவமாகக் கொண்டு, அதையும் "அவ்வையார்" என்றே திருத்தியிருத்தலும் கூடும், பின்னர் அதுவும் ஔவையார் என்றே எழுதப்பட்டிருத்தலும் கூடும்; இம் முறையால், ஒரு அவையைச்சார்ந்தோர் பாடித்தொகுத்த அந் நூல்கள்,

ஔவையாரால் பாடப் பெற்றனவாகக் கருதப்பட்டது எனக் கொள்வாரும் உண்டு.

சங்க காலத்தைப்போன்றே, பிற்காலத்திலும் பெண் பாற்புலவர் பலர் வாழ்ந்திருத்தலும் கூடும்; முதலில் தாய் என்ற பொருள் குறிக்கவந்த "அவ்வை" என்ற சொல் பின்னர், முதிர்ந்த அறிவுடைய பெண்ணைக் குறிக்கவும் வழங்கியிருத்தலும் கூடும்; இம் முறையால், பிற்காலப் பெண்பாற்புலவர் ஒவ்வொருவரும் ஔவையார் என்றே அழைக்கப்பட்டிருத்தலும் கூடும்; அத்தகைய பெண்பாற் புலவர்களுள் ஒருவரோ, பலரோ, மேற்கூறிய நூல்களைப் பாடியிருத்தலும் கூடும் எனக் கொள்வதாயினும் இழுக்கு ஒன்றும் இல்லை என்க.



First Edition: Feb., 1953.
Reprint: Nov., 1956.

Sangath Thamizhp Pulavar Varisai - Book V

PENNBAR PULAVARGALL



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1—C. 1200.

# பதிப்புரை

புலத்துறை முற்றிய நலச் துறையில் நம் செந்தமிழ் நாடு, பண்டை நாளில் முதற்கண் நின்றது. அற்றை நாளில் கற்புக்கடம்பூண்ட பொற்புடை மகளிரும், பொருந்திய கல்வி திருந்திய மகளிருமாக இலங்கி, நாட்டைப் பொன்னாடாக்கிப் புகழுற்றனர்.

அக்கால மகளிர், பெண்மையென்னும் உடலுக்கு உண்மை உயிராகத் திகழ்ந்திருந்தனர். அவர்தம், அன்பு அறம் மறம் தாய்மை காதல் முதலிய பண்புகளுக்குச் சங்கநூல்கள் சான்று தருகின்றன. அச் சங்கநூல்களிலும் இப் பெண்ணியலார் தந்த அரிய கருத்துக்கள் நிறைந்த பாமணிகள் மிளிர்கின்றன. அவைகளை [illegible]க்கிப் புகழுடல் பெற்று இன்றும் நம்மிடையே நிலவும் பண்டைத் தமிழ்ப்புலமைப் பெண்மணியார் **இருபத்தறுவர்** வரலாறே இந்நூல்.

இதனை நன்முறையில் அவர்கள்தம் பாவே துணையாகக் கொண்டு நுணுகிச் சென்றாய்ந்து, உண்மையையே திரட்டிக் கொணர்ந்து வரலாறாக—உண்மை நூலாக—**புலவர் திரு. கா. கோவிந்த**னவர்கள், தெளித்துத் தந்துள்ளார்கள்.

இந்நூலை உயரிய முறையில் பதித்து நம் தமிழக மாந்தர்க்குக் கூட்டுண்டு மகிழ, **சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை**யில் ஐந்தாவதாக வெளியிட்டுள்ளோம். தமிழ் கூறு நல்லுலகமக்கள் இதனை ஏற்றுப் போற்றிக் கற்றுப் பயன் பல பெறுவார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# பெண்பாற் புலவர்கள்



## க. அஞ்சி அத்தைமகள் நாகையார்

நாகையார் என்பது இவர் இயற்பெயர்; அஞ்சி அத்தைமகள் என்பது அவர் உறவைக்குறிப்பது; உறவைக் குறிக்கும் தொடர்கள் புலவர் பெயர்களுக்குமுன் வழங் கப்படுவது அக்கால வழக்கமாம்: **பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு, பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணை யார், அள்ளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார்** என்ற பெயர்களையும் நோக்குக. அத்தொடரால், **அஞ்சி யென்பானொருவனுடைய அத்தையின் மகள் நாகையார்** என்பது பெறப்படும். தகடூரைத் தலைநகராகக்கொண்டு நாடாண்ட ஓர் அரசன் பெயர் அதியமான் நெடுமான் அஞ்சி என்பது; நாகையார், இவ்வதியமான் நெடுமானஞ் சியின் கடிய குதிரையையும், நெடிய தேரையும், பாணர் பலர் அவன் புகழ்பாடிப் பரவுவதையும், தன் பாட்டில் பாராட்டியுள்ளார். இவர் பெயரையும், பாட்டின் பொரு ளையும் ஒருங்கே வைத்து நோக்கினால், இவர் அவ்வஞ்சியின் அத்தை மகளே என்று உறுதிகொள்ளலாம். ஆகவே, அரசர்குடியிற் பிறந்த பெண்பாற் புலவர்களுள் இவரும் ஒருவர் என்பதும் உறுதிசெய்யலாம். இவர் பாடிய பாட் டாக நமக்குக் கிடைத்திருப்பது அகநானூற்றில் காணப் படும் செய்யுள் ஒன்றே.

அண்மையில் மணம்செய்து கொண்டவள் ஒருத்தி, கணவன வீடுசென்று வாழ்ந்து வருகிறாள்; அவள் உயிர்த் தோழி ஒருத்தி, அவள் அங்கே வாழும் வாழ்க்கையைக்

காணவேண்டும் என்று விரும்பினாள். அவள், அவனைப் பெற்றுவாழத் துணைபுரிந்தவள் இத்தோழியே; அவள் அவனை அறியாமுன், அவன் உயர்குடிப் பிறப்பையும், அன்புகொண்டு நட்புச் செய்தவர்களை என்றும் பிரிந்தறியாப் பெருந்தன்மையையும், பிறர்க்குக் கேடுதரும் தீச்சொல்லை என்றும் கூறியறியா அவன் நாவின் சிறப்பையும், எவ்வுயிரும் தன் உயிரெனக்கொள்ளும் அவன் அன்புடைமையினையும அறிந்துவந்து அவளுக்குக் கூறி, அவனை மணந்துகொள்ள இசைய வைத்தவள் இத் தோழியே.

தானும அவளும் தனியேயிருந்த நேரம்பார்த்து அவளைநோக்கி, "உன் கணவர் உன்னிடத்தில் எவ்வாறு பழகுகிறார்?" என்று கேட்டாள் தோழி. அதற்கு அவள், "தோழி! நமமுடைய ஊரில் திருவிழா நடைபெறுங் காலத்தில் கூத்து நிகழ்வதை நீ பார்த்திருப்பாய் அல்லவா? அப்போது, விறலி முன்னே ஆட, அவள்பின்னே முழா ஏந்திய கூத்தன் நிற்பதைக் கண்டிருப்பாய்; அதை நினைவூட்டும் காட்சிகள் பல இங்கே உள்ளன; அவற்றுள் ஒன்றை யானும் கண்டேன்; அழகிய அருவியின் அருகே மயிலொன்று ஆடிக்கொண்டிருந்தது; முழவுபோன்ற பெரிய பலாப்பழத்தைத் தன் வயிற்றில் தழுவிக்கொண்டே, அம் மயிலின்பின் நின்று அதன் ஆடலைக்கண்டு மகிழும் ஆண் குரங்கொன்று அக் காட்சியைக் காணுமாறு தன் இனக் குரங்குகளையும் கூவி அழைத்தது; இதையேன் உனக்குக் கூறுகிறேன்? எங்கள் நாட்டில் உள்ள விலங்குகள் இவ்வாறு மகிழ்ந்து வாழ்கின்றன என்றால், என கணவர் இயல்பைச் சொல்லவேண்டுவதே இல்லை என்பதற்காகவே. நாள்தோறும் இனத்தாரையும் விருந்தினரையும் அழைத்து உடனிருந்து உண்டும், என்னோடு அன்பு காட்டியும் வாழ்கிறார்; நம் அஞ்சியின் புகழ்பாடும் பாணன், புதிது புதிதாக இயற்றிப்பாடும் பண்ணைக் காட்டிலும் அவர் இனியர்; என் திருமணத்தன்று அவர் நமக்கு எவ்வளவு இனியராகவும் நல்லவராகவும் தோன்றினாரோ, அதைக்காட்டிலும் பன்மடங்கு இனியர்; நல்லவர்; அவ

ரைப்பற்றி முன்பு நீ கூறியன எல்லாம் உண்மையே என்பதையும் உணர்ந்தேன்; அத்தகையாரை நான் மணம் செய்துகொள்ளத் துணைபுரிந்தவள் நீயன்றோ? நீ வாழ்க பல்லாண்டு!'' என்று கூறி மகிழ்ந்து வாழ்த்தினாள்.

அகநானூற்றுப் பாடல் ஒன்றில் இவ்வளவு சிறந்த கருத்துக்கள் பலவற்றையும் அழகாக அமைத்துப் பாடியுள்ளார்; குடம்போலும் பெரிய பழாப்பழத்தினைத் தழுவிக்கொண்டே ஆடும் மயிலின் பின்நிற்கும் குரங்கு, ஆடும் விறலியின்பின் முழவிசைத்து நிற்பானை ஒக்கும் என உவமை காட்டிக் கண்ணிற்கும், உயர்குடிப் பிறப்பும், பிரிந்தறியாப் பெருநட்பும், கொடுமை கூறாமையும், ஆருயிர் மாட்டு அன்பும் உடையான் ஆண்மகனவன் எனக் கூறிக் கருத்திற்கும், விருந்தளிக்கும் கவின் மிகுந்துளது அப்பாட்டு.

“முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்னது ஆகக் கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ
இன்துணைப் பயிரும் குன்ற நாடன்,
குடிநன் குடையன் ; கூடுநர்ப் பிரியலன் ;
கெடுநா மொழியலன் ; அன்பினன் எனநீ
வல்ல கூறி வாய்வதிற் புணர்த்தோய்
நல்லை ; காணில் காதலம் தோழி!
கடும்பரிப் புரவி, நெடுந்தேர் அஞ்சி,
நல்லிசை நிறுத்த நயவரு பனுவல்
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்,
வதுவை நாளினும் இனியனால் எமக்கே.” (அகம்: ௩௫௨)

## உ. அள்ளூர் நன்முல்லையார்

"'எனக்கே உரிய என்தாய் நாடிது' என எண்ணு தான் உள்ளம் இழிந்த உள்ளமாம்; அத்தகைய இழிந்த உள்ளம் உடையாரும் உளரோ உலகில்?" என்று கேட்கி றார் ஆங்கிலப் புலவர் ஒருவர்.

"Breaths there the man, with soul so dead,
Who never to himself hath said,
This is my own my native land?"

புலவர்கள், "யாதும் ஊரே; யாவரும் கேளிர்," என்ற பரந்த பேருள்ளம் உடையவரே எனினும், எந்நாடும் தம் நாடாய் எவ்வூரும் தம்மூராய்க்கொண்டு வாழ்பவரே எனி னும், தாம் பிறந்தநாடு நற்றவ வானினும் நனி சிறந்ததுவே என்ற எண்ணம் அவர்க்கும் தோன்றாமல் இராது. அள்ளூர் நன்முல்லையார் அத்தகைய நாட்டுப்பற்றும், ஊர்ப் பற்றும் கொண்ட உயர்உள்ளம் உடைய புலவராவர்; தம் பெயரோடு, தாம பிறந்த ஊர்ப் பெயராகிய அள்ளூர் என்பதையும் சேர்த்து "அள்ளூர் நன்முல்லையார்" என்று வழங்கி, தம் புகழோடு தம் ஊர்ப்புகழையும் வளர்த் துள்ளார் அவர்; அமமட்டோடு அவரை நிற்கவிடவில்லை அவர் ஊர்ப்பற்று; தாம் பிறந்த அவ்வூரைத் தாம்பாடிய பாட்டொன்றில் வைத்துப் பாராட்டியும் உள்ளார்.

அகத்துறைப் பாடல்களில் வரும் தலைவியின் அழகு நலத்தை அக்காலத்துத் தமிழ்நாட்டில் தலைசிறந்து விளங் கிய நகரங்களின் அழகு நலத்திற்கு ஒப்பிடுதல் புலவர்கள் வழக்கமாம். அவ்வாறு ஒப்பிட்டுக் கூறும புலவர்கள் மேற்குக் கடற்கரையைச் சார்ந்த தொண்டி என்ற துறை முகப் பட்டினத்தையே பெரும்பாலும் ஒப்பிட்டுக் கூறுவர்: "தொண்டியன்ன என் நலம்" "தொண்டியன்ன எம் ஒண்டொடி" "தொண்டியன்ன இவள் நலன்" என வருதல் காண்க. ஆனால், நம் நன்முல்லையார், தாம் பாராட்டிய தம் தலைவியின் நலத்திற்கு அத் தொண்டிநகரை ஒப்புமை

கூறுது, தாம் பிறந்து வாழ்ந்த தம் அள்ளூரையே ஒப்புக் கூறுகின்றார்; தம் ஊர்நினைவு வந்தவுடனே, அவ்வூரின் சிறப்பெல்லாம் அவர் மனக்கண்முன் வந்து நிற்கலாயின; அவ்வூரெங்கும் மலைபோல் குவிந்துகிடக்கும் செந்நெற் குவியல்களை நினைந்து நினைந்து மகிழ்ந்தார்; ஊர்ப்பற்று ஊரோடு நின்றுவிடவில்லை; அவர்க்கு ஊராளும் அரசனை யும் நினைப்பூட்டிற்று. பகைவரின் யானைப்படையையும் கொன்றழிக்கும் தம் அரசன் வாட்படை; அவ்வாட்படைக் குத் தலைவனாகிய தம் அரசன் கொற்றம் ஆகிய அவ்வள வையும் எண்ணி எண்ணி இறும்பூதெய்தினார் அவர்; "இவ்வளவு சிறப்பும் உடையது எங்கள் ஊர்" என்று பாராட்டினார்:

"செறுநர்,
களிறுடை அருஞ்சமம் ததைய நூறும்,
ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன்
பிண்ட நெல்லின் அள்ளூர்" (அகம்: ௪௬)

என்று பாடினார்.

அவர் பாடிய இப் பாட்டினால், அவர் பாண்டி நாட் டினர் என்பதும், அவர் ஊராகிய அள்ளூர் நீர்வளமும் நிலவளமும் மிக்க மருதவயல்கள் சூழ்ந்தது என்பதும் அறியப்படும்.

அள்ளூர் நன்முல்லையார் பத்திற்கு மேற்பட்ட பாடல் களைப் பாடியுள்ளார்; எனினும், அவற்றுள் ஒன்றும், அவர் வாழ்க்கை வரலாற்றை அறியத் துணைபுரிவன அல்ல; அவை, அவர் வாழ்க்கையை அறிய வழி காட்டவில்லை எனினும், அவர்தம் புலமையின் சிறப்பைப் புலப்படுத்த அவை சிறிதும் தவறவில்லை. அள்ளூர் நன்முல்லையார், நல்லிசைப் புலமை வாய்ந்த நற்பெருங் கவிஞர்; கண்ணில் காணும் காட்சிகளைக் கருத்தோடு இழைத்துக் கவி பாடும் இயல்பினர்; அவர் பாடல்களில் பொதிந்துகிடக்கும் உவமைகள் சிலவே, அவர் புலமைச்சிறப்பைப் புலப்

படுத்தப் போதியனவாம்; அவற்றுள் இரண்டைமட்டும் ஈண்டுத் தருகிறேன் :

அள்ளூர் நன்முல்லையார் வாழ்ந்த பாண்டிநாடு, செல்வத்திற சிறந்த நாடு; அந்நாட்டில் வாழும் மக்கள் அழகிய அணிபல அணிவதில் ஆர்வமிக்கவர்; அவர் ஆர்வத்தை நிறைவேற்றித்தரும் வகையில் அழகிய அணிகளை ஆக்கித்தரும் ஆற்றல்மிக்க பொற்கொல்லர் பலர் பாண்டிநாட்டில் பெருகி வாழ்ந்துவந்தனர்; ஆதலின், அப் பொற்கொல்லரையும, அவர்கள் தொழிலாற்றும் முறைகளையும் அறிந்திருந்தனர் நம் முல்லையார்; அவர்களுள் ஒரு பொற்கொல்லன், பொற்காசுமாலை ஒன்று செய்துகொண்டிருக்கிறான்; பொற்காசுகள் பவழவடிவில் அமைந்துள்ளன; அவற்றினூடே துளையும் செய்யப்பட்டுளது; அவற்றைக் கோப்பதற்கான பொற்கம்பியையும் இழைத்து வைத்துக்கொண்டுள்ளான்; பொற்காசை இடதுகைப் பெருவிரல் ஆள்காட்டிவிரல் இரண்டின் நுனியில் பற்றிக் கொண்டான்; வலது கையில் பொற்கம்பியைப் பற்றி, அதன் கூரிய நுனியை இடதுகையில் பற்றியுள்ள அப் பொற்காசின் இடையே அமைந்த துளையூடே செலுத்திக் கோத்துக் கொண்டிருக்கிறான்; இக் காட்சியைக் கண்டு கண்டு மகிழ்ந்துள்ளார் நம் முல்லையார்; தடித்த பெருவிரல் கீழே இருக்க, ஆள்காட்டி விரல் சிறிது நீண்டு வளைந்து பெருவிரலின் நுனியைச் சேர, அவ்விரண்டிற்கும் இடையே பொற்காசு அமைந்திருக்கும காட்சி, அவர் கண்ணையும் கருத்தையும்விட்டு அகலவில்லை; அதைக் கண்டு மகிழ்ந்த அவர், அவ்வூரை யடுத்த சோலையுள் நுழைந்து செல்கின்றார்; அங்கே ஒரு வேப்பமரம், நன்கு பழுத்து விளங்குகிறது; பழுத்த பழங்களைப் பறவைகள் பலவும் கூடிக் கவர்ந்து செல்கின்றன; அப் பறவைகளுள் ஒரு கிளி, தன் வளைந்த வாய்க்கிடையே நன்கு கனிந்த அப் பழங்களுள் ஒன்றைக் கவ்விப் பற்றிக்கொண்டுளது; அடி அலகு தடித்து, மேல் அலகு வளைந்து விளங்கும் கிளியின் வாயில், பொன்னிறம்போற் பழுத்து விளங்கும் வேப்

பங்கனி ; இக் காட்சியையும் காணுகின்றார் முல்லையார் ; ஊரில் கண்ட பொற்காசு ஏந்திய பொற்கொல்லன் கையின் காட்சிக்கும், இக் காட்சிக்கும் உள்ள ஒற்றுமையை உணர் கிறார் ; அவர் உள்ளம் அவ் வொப்புமையில் ஊறிவிடு கிறது ; கிளிவாய் வேம்பிற்குப பொற்கொல்லன் கைப் பொற்காசை ஒப்புமை கூறியும் உள்ளார் ;

"கிள்ளை
வளைவாய்க கொணட வேப்ப ஒண்பழம்,
புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வள்ளுகிர்ப்
பொலஙகல வொருகாசு ஏய்க்கும்."   (குறுந் : சுஎ)

காணும் காட்சிகளை எவ்வளவு கருத்தூன்றிக் கவ னித்துள்ளார் என்பதை உணருங்கள் !

தரையோடு தரையாகப் படர்ந்திருக்கும் செடி வகை களில் நெருஞ்சியும் ஒன்று ; சிறுமழை பெய்தவுடனே தளிர்த்துப் பூக்கத் தொடங்கிவிடும் ; பூக்கள் மிகவும் சிறியதாய், மஞசள் நிறமுடையதாய் நெருஙகப் பூத்திருக் கும் ; அக்காட்சி கண்டோர் மனதை மகிழ்விக்கும் ; இவ் வழகிய காட்சி சின்னாள் வரையிலுநதான் ; பின்னர், அப் பூக்கள் காயாக மாறத்தொடங்கும் ; அக் காய்கள் முற்றின் முள்ளாக மாறும ; அந்நிலையில், அது, தன்னை மிதிப்பார் கால்களையேயன்றித் தன் அண்மையில் வருவார் கால்களையும் தைத்துத் துன்புறுத்தும். நெருஞ்சியின் இவ்வியல்பை நன்கு உணர்ந்தவர் நம நன்முல்லையார் ; தொடக்கத்தில், கண்ணிற்கு விருந்தளித்துக் கடைசியில் காலிற்குக் கடுந்துயர் அளிக்கும் நெருஞ்சியின் இக்கொடுஞ் செயலை உலகத்தார்க்கு உணாத்த எண்ணினார்.

ஒரு தலைவி, ஒரு தலைவனை மணந்து வாழ்ந்துவந்தாள்; தொடக்கத்தில் அவன் அவளிடத்தில் அன்பு மிகக்கொண்டு வாழ்ந்துவந்தான் ; அதனால் அவள் மிகவும் மகிழ்ந்து வாழ்ந்தாள் ; இவ்வின்ப வாழ்க்கை சிலநாள் நடைபெற் றது ; அவன், அவள்பால் கொண்டிருநத அன்பு சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கிற்று ; அவளை மறந்து

மறைந்து வாழவும் முற்பட்டான்; அதனால் அவ்வில்லற வாழ்க்கை அவளுக்குத் துயர்தரத் தொடங்கிவிட்டது; முன்னர் அன்புகொண்டு இன்பம் அளித்த அவனே, பின்னர் அவளை மறந்து துன்பம் செய்யவும் தொடங்கினான்; தலைவனின் இக் கொடுஞ்செயலைத் தமிழர்க்கு எடுத்துக் காட்டி இடித்துரைக்க விரும்பிய நம நன்முல்லையார், அவன் செயலை நெருஞ்சிப்பூவின் செயலோடு ஒப்பிட்டுக் கூறிக் கண்டிப்பாராயினார் :

"சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முள்பயந் தாஅங்கு,
இனிய செய்தநம் காதலர்
இன்னா செய்தல் நோமென் னெஞ்சே." (குறுந் : உ0உ)

எவ்வளவு அழகிய உவமை !

பொருள் பொதிந்த பாடல்களைப் புனைவதோடு, அப்பாக்கள்வழியே அரிய அறிவுரைகள் பலவற்றையும் அள்ளிக் கொடுத்துள்ளார் அள்ளூர் நன்முல்லையார்; தமமோடு தொடர்புடையார், தமக்குத் துன்பம் செய்தார் எனினும், அவர்தம் அச் செயலைப் பலர் அறியத் தூற்றித்திரிதல் பண்புடையோர் செயல் அன்று; தகுதியுடையோர் அதைச் செய்யார் என்று ஓரிடத்தே கூறுகிறார்.

தம்மீது அன்பும் ஆர்வமும்கொண்டு மதியாதார் பின் சென்று மண்டியிட்டு வாழ்வதினும் மாண்டு மறைதல் மாண்புடையதாம்.

"நன்னலம் தொலைய, நலம்மிகச் சாஅய்,
இன்னுயிர் கழியினும் உரையல்" (குறுந் : கரு)

என்று மற்றோரிடத்தே பெருமையைப் பேணுகிறார். இத்தகைய அழகிய அவர் பாடல்களை, அகநானூற்றினும், புறநானூற்றினும், குறுந்தொகையினும் கண்டு களிப்புறுக.

# ௯. ஆதிமந்தியார்

காவிரியாற்றின் இரு கரைகளிலும் வாழ்ந்த சோழ நாட்டு மக்கள், அவ்யாற்றில் புதுவெள்ளம் வரும்பொழுது புனல்விழாக் கொண்டாடி மகிழ்வர், விழா நடைபெறு மன்று ஆற்றலும் ஆண்மையும் மிக்க இளைஞர் பலர் அவ் யாற்றுநீரில் குதித்து எதிர்த்து நீந்தி ஆண்மைதோன்ற ஆடி மகிழ்வர். அவர்கள் அவ்வாறு ஆடி மகிழ்வதை அந் நாட்டு அரசன்முதல் அவ்வூர் மக்கள் அனைவரும், ஆற்றின் கரைக்கண் அமைந்த அரண்மிக்க அழகிய இடங்களி லிருந்து கண்டு மகிழ்வர்; இவ்வாறு புனல்விழா நடை பெறும் இடங்களிலொன்று கழார்ப்பெருந்துறை. அது கடற்கரைக்கு அண்மையிலுள்ளது; காவிரிப்பூம்பட்டி னத்திற்கு நான்கு அல்லது ஐந்துகல் தூரத்தில் இருப்பது. காவிரியாறு அவ்வூரருகே கிழக்கு நோக்கி ஓடும். அது, ஆற்று வெள்ளம் கரைகளை மோதி அழிக்கும் ஆற்றலோடு பாயும் இடம். ஆற்றுப்புனல் மோதி மோதி அழிப்பினும், அழிவுறாமல் வானுற வளர்ந்த மருதமரங்கள நிறைந்தது அத்துறை. அங்கே நடைபெறும் புனல்விழாவினை, அர சர்களும் வந்து காணுவர். அவ்வளவு சிறப்புடையது! விழா நடைபெறும்பொழுது முழவொலியும் வேறு பிற ஆரவாரங்களும் அங்கே நீங்காமல் ஒலிக்கும். இவ்வாறு ஆண்டுதோறும் நிகழும் அப்புனல் விழா.

இவ்வாறு ஆண்டுதோறும் நிகழும் அப்புனல் விழா வில் ஓராண்டு விழாவின்போது, அப்பொழுது சோழ நாட்டை ஆண்டிருந்த கரியாற் பெருவளத்தான் தன் சுற்றம் சூழ்ந்துவர, விழாக்காணக் கழார்ப் பெருந்துறைக்கு வந்திருந்தான். அரசனோடு வந்து ஆற்றில்வரும் புதுப் புனலையும் அதில் குதித்து ஆடித் திளைக்கும் அந்நாட்டு இளைஞர்களையும் கண்டு நின்றோருள் அத்தி என்பானும் ஒருவன். அத்தி, அரசன் மைத்துனன்; மன்னன் கரிகால் வளவன் மகள் ஆதிமந்தியாரின் ஆருயிர்க் கணவன்; வஞ்சியைத் தலைநகராகக்கொண்ட சேரநாட்டுத் தலைவன்;

ஏறுபோல் நடையுடையான்; நிமிர்ந்து திரண்ட தோளு டையான்; அடர்ந்து சுருண்டு கருத்த மயிருடையான்; கலீர் கலீர் என்ற ஒலியும், காண்டற்கினிய அழகும் வாய்ந்த கழல்புனை காலுடையான்: கரிய கச்சினை அரை யிலே கட்டிப் பசும்பொன்னாலாகிய ஒலிக்கும் பாண்டில் மணிகளை அக் கச்சின் மீது அழகுபெற அணிந்தவன்; வகைவகையான மலர்கொண்டு வனப்புமிக அமைந்த மாலை யினை மார்பிலே அணிந்தவன்; ஆற்றல் மிக்கோன்; ஆற்றுப் புனலில் குதித்து ஆற்றல்தோன்ற ஆடிப் பழகியோன்; அதனால் ஆட்டன் அத்தி (ஆடுதலில் வல்ல அத்தி) என்ற சிறப்புப பெயரும் பெற்றோன்

ஆடிப் பழகிய அவனால் அமைதியாய் அமர்ந்து அவ் வாடலைக்காண இயலவில்லை; ஆடை அணி அணிந்து ஆற்றில் குதித்தான், விழாக்காண வந்திருந்தோர் அனைவரும் கண்டுமகிழ அருமையும் அழகும் தோன்ற ஆடிக்கொண் டிருந்தான். அத்தி, அந்நிய நாடாகிய சேரநாட்டான்; காவிரியாற்றில் அதற்குமுன் ஆடிப் பழகியறியான். ஆத லின், அவனால் அவ்வாற்றுப் பெருக்கின் ஆற்றலை அறிந்து கொள்ள முடியவில்லை, அதனால் ஆற்றுப்புனலில் ஆட வல்ல அவனை, அக் காவிரிப்புனல் அழுத்தி இழுத்துக் கொண்டு போய்விட்டது. ஆற்றில் ஆடிக்கொண்டிருந்த அவனை அங்கே காணாத மக்கள் அவலமுற்று அவனைத் தேடுவதில் ஆரவங் காட்டலாயினர். ஆற்று வெள்ளத்தின் விரைவு அவனை வெகு தொலைவு கொண்டுபோய் விட்டபடி யால், அவர்கள் அவனை அத்துறைக்கண் தேடியும் காண மாட்டாமல் கண்ணீர்விட்டுக் கலங்கி நின்றனர்.

தந்தை கரிகாலன் அருகே யமர்ந்து தம் காதற் கொழுநன் அத்தியின் ஆடலகண்டு அகமகிழ்ந்திருந்த ஆதி மந்தியார்க்கு அவன் மறைவு, ஆற்றொணாத் துயர் அளித் தது. ஆற்றுப்புனலின் ஆற்றலை எதிர்க்கும் ஆற்றல் அற்றுப்போனவிடத்து அப்புனல் வழியே தாமும் சென்று கரையேறவே அறிவுடையோர் முயற்சிப்பர். ஆடும்

தொழிலில்வல்ல அத்தி அதை அறிந்திருப்பன் என்று எண்ணினார் ஆதிமந்தியார். ஆகவே ஆற்றின் இருகரையிலும் இருக்கும் நாடுகளிலும், ஊர்களிலும் சென்று அவனைத் தேடுவாராயினர். அவ்வூர்களிலும் நடைபெறுகிறது இப் புனல்விழா; ஆடவரும் மகளிரும, மற்போர் விளையாட்டும், துணங்கைக் கூத்தும் ஆடி மகிழ்கின்றனர். அவர்களை அணுகி, "உங்களைப்போல் ஆடல் தொழில் வல்லான் என் கணவன். அவன் பெயர் அத்தி. உங்களைப் போல் ஆடி மகிழும் இளமைப்பருவம் உடையேன் யானும். என் உடலும், உயிரும் மெலிந்து வருந்தப் புனலாட்டு விழாவிலே மறைந்துபோயினன் அவன். உஙகளில் யாரேனும் அவனைக் கண்டீரோ? என்று கேட்டுக் கேட்டு ஆதிமந்தியார் மனம் அலுத்துப்போனார் அவன் ஆடிய இடத்தினின்றும், பலநாடு பல ஊர்வரை தேடியும் அவனைக் காணமாட்டாமையால், ஆதிமந்தியார் அறிவு திரிந்தது மதி மருண்டது; அத்தியின் ஊரும் பேரும் உருவும் கூறி, "அவனைக் கண்டீரோ?" என எதிர் வருவார் யாரையும் கேட்டு ஏங்குவாராயினர். அவர் முயற்சி வீண் போகவில்லை. இறுதியில் கடற்கரை யருகே, ஆற்றுப் புனலால் அல்லலுற்று மாழ்க இருந்த அவனை, மருதி என்னும் நல்லாள் ஒருத்தி கண்டு, கடலுள் புகுந்து, கடிது முயன்று கரைசேர்த்துக் காதது ஆதிமந்தியார்பால் ஒப்படைத்தார். ஆனல், அந்தோ! அம் முயற்சியில் அம் மருதியார் கடலலைகளால் இழுப்புண்டு ஈறிலாப் புகழ் பெற்றார்.

ஆதிமந்தியாரின் புலமைச் சிறபபைப் புலப்படுத்தும் அழகிய பாடல் ஒன்று குறுந்தொகைக்கண் உளது. இனத்தாலும், குணத்தாலும் ஒத்த ஒரு தலைவனும் ஒரு தலைவியும் காதல்கொண்டு, களவொழுக்கம் மேற்கொண்டு ஒழுகினர். அக் களவொழுக்கத்தை, அவர் இருவர் ஒழிய அயலார் யாரும் அறியார் தலைமகள் உயிர்த்தோழியும் உணர்ந்திலள். அவர்கள்தம் இவ் அன்புவாழ்க்கைக்கு இடையூறு ஒன்றுவரக் காத்திருந்தது மணப்பருவம்

எய்தினள் தலைவி; ஆகவே, தாயும் தந்தையும் அவளுக்கு மணஞ் செய்துவைக்கத் துணிந்தனர். அவளை மணம்பேச யாரோ சில சான்றோர்களும் வந்திருந்தனர்; அஃதறிந்தாள் தலைவி; விரும்பி மேற்கொள்ளும் தலைவன் ஒருவன்பால் தன் உள்ளம் சென்றுளது என்பதைத் தன் தாயும் தந்தையும் அறியார் ஆதலின், அவர், வந்த சான்றோர்க்கு ஒப்புதல் அளிப்பினும் அளிப்பர் என அஞ்சினாள். தன் களவொழுக்கைப் பிறர் அறியாவண்ணம் இதுவரை மறைத்து வந்ததேபோல் இனியும் மறைத்து வைப்பின் ஏதமாம் என எண்ணினாள். தன் அன்பிற்குரிய தோழியை அழைத்தாள். "தோழீ! என் வளை கழலுமாறு கைமெலியத் துயர் செய்தான் ஒருவன் உளன். அவனோர் தலைசிறந்த ஆண்மகன்; குரிசில்; பீடும் பெருமையும் உடையோன்; மாண்புறு குணம் பல நிறைந்து நம்மை மணத்தற்குரிய தகுதியிற் சிறந்தோன்; ஆடுகளம் சென்று ஆடி மகிழும் இயல்புடையான்; ஆகவே, யானும், அவ்வாடுகளஞ்சென்று ஆடி மகிழும் விருப்பமுடையேனாய், வீரர்கள் பலர் கூடி ஆடும் மற்போர் விழாக்களத்தும், மகளிர் கூடி ஆடும் துணங்கைக்கூத்தின் கண்ணும் தேடித்தேடிப் பார்த்தேன். எங்கும் அவனைக் காணேன். இதற்கு யான் என்செய்வேன்?" என்று கூறிக் கலங்கினாள்.

தோழி அறிவே உருவானவள்; தலைவி, தலைவனை "மாண்தக்கோன்", "பீடுகெழுகுரிசில்" எனப் புகழ்வதாலும், அவனை மற்போர் விழாவிலும் துணங்கைக் கூத்தின்கண்ணும தேடினேன் எனக் கூறுவதாலும், அவன் தன் வளை நெகிழ்த்தான் என அறிவிப்பதாலும், தலைவி, தக்கான் ஒருவன்பால் அன்புகொண்டுள்ளாள் என்பதையும், அத் தலைவன் ஆண்மையிற் சிறந்த வீரன் என்பதையும், துணங்கைக்கூத்தின்கண் அவன் கைகொடுக்க அவனோடு ஆடி அன்பு கொண்டுள்ளாள் தலைவி என்பதையும் அறிந்தாள்; இந் நிலையில், அவன் பெற்றோர், அவளை அயலார்க்கு மணம்செய்து கொடுக்க முடிவு செய்வாராயின் அவள் வாழாள்; இறந்துபோவாள். ஆதலின்,

அவ் விருவர் தம் நட்புறவைத் தாய் தந்தையர்க்கு அறிவித்து, அயலார்க்கு மணஞ்செய்து கொடுப்பதைத் தடுத்து அத் தலைவனுக்கே மணம் நேருமாறு துணைபுரிதலே தன் தலையாய கடனும் என்று முடிவு செய்தாள்.

இவ்வாறு, தானும் தலைவனும் பெற்று மகிழும் களவொழுக்கத்தைத் தன் தோழிக்கு அறிவிக்கும், அறத்தொடு நிற்றலாகிய துறையமைத்துப் பாடிய ஆதிமந்தியாரின் அழகிய பாடல் இது:

"மள்ளர் குழீஇய விழவி னானும்,
மகளிர் தழீஇய துணங்கை யானும்,
யாண்டும் காணேன் மாண்தக் கோனை;
யானும்ஓர் ஆடுகள மகளே; என்கைக்
கோடீரா இலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும்ஓர் ஆடுகள மகனே." (குறுந் · 3க)

ஆதிமந்தியார் வரலாற்றைப் பாணரும், வெள்ளிவீதியாரும் பாராட்டியதோடு, ஆதிமந்தியாரின் அருமைத் தந்தை கரிகாற் பெருவளத்தான் என்ற சோழ அரசன் எனவும், அவர் கணவனை ஆட்டனத்தி, வஞ்சிமா நகரைத் தலைநகராகக்கொண்ட சேர நாட்டான் எனவும், கற்புக்கடம்பூண்ட பொற்புடைத் தெய்வமாகிய கண்ணகி பாராட்டிய கற்புடை மகளிர் எழுவரில் ஆதிமந்தியாரும் ஒருவர் எனவும் இளங்கோவடிகளும் பாராட்டியுள்ளார். அஃது இதோ:

"மன்னன் கரிகால் வளவன் மகள், வஞ்சிக்கோன்
தன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
'கன்னவில் தோளாயோ!' என்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக் கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள்." (சிலப், உக: கக-ரு)

ஆதிமந்தியார் பிறந்து மொழிபயின்ற பட்டினம், பூம்புகார்ப் பட்டினமே என்று கூறுவர் பட்டினத்துப் பிள்ளையார்.

---

## ௬௩. ஊண்பித்தை

இவர் பெயர் ஊண்பித்தியார் எனவும் வழங்கப்பெறும். புறநானூற்றில் மாற்பித்தியார் என்ற பெயருடைய பெண் பாற்புலவர் ஒருவர் உளர். இவர் பெயரும் பித்தியார் என வருவதைக்கண்டு, இருவரையும ஒருவராகவே கருதுவர் சிலர்; அது தவறு இருவரும் வேறு வேறுவர் என்பதை அறிவிப்பதற்காகவே, ஒருவர் பெயர்முன ஊண் என்பதை யும், மற்றொருவர் பெயர்முன் மால் என்பதையும் சேர்த்து, ஊண்பித்தியார், மாற்பித்தியார் என வழஙகியுள்ளார்கள்; மேலும் இவர்பெயர் ஊண்பித்தி என்றே பெரும்பாலான ஏடுகளில் காணப்படுகிறது; இவர் வரலாறுபற்றிய எதையும் தெரிந்துகொள்ள வழியில்லை.

இல்லறம் இனிது ஆற்றவேண்டும்; அதற்கு நிறையப் பொருள் வேண்டும் என்ற எண்ணமுடையவனாய் வெளி நாடு சென்ற கணவன், 'வருவேன்' என்று கூறிச் சென்ற காலததில் வந்திலன்; அதனால் வருந்திய அவன் மனைவி, "அவர் என்னை நினைந்திலர்; மறந்துவிட்டார்" என்று வருந்தினாள். ஆனால், அவன் இயல்பை நன்கு உணர்ந்த வள் அவள் தோழி அவன் அவளை மறவான் என்பதை உணர்ந்தவள். சென்ற தொழில்நினைவால், அவன் ஒரு வேளை மறப்பினும், சென்றவழியில் அவன் கண்ட காட்சி அவனை மறக்கவிடாது; மாறாக, தலைவியை என்றும் நினைப் பூட்டி, வீடுநோக்கி விரைந்து வருதல்வேண்டும் என்பதை அறிவுறுததும் தன்மையுடையது. வழியில் ஓர் ஆண்மான், மரல் என்ற செடியை வயிறார மேய்ந்துவிட்டு, அருகே யுள்ள யாமரத்தின் நிழலையடைந்து கவலையின்றி உறங்கு வதைக் கண்டுகொண்டே சென்றுள்ளான். அக் காட்சி அவன் உள்ளத்தை உறுததாதிராது; தான் விரும்பிய உணவை வேண்டிய அளவு உண்டதும், அங்கேயேயிருந்து உழலாது, நிழலிடம் தேடிப் படுப்பதைப்போல், நாமும் வேண்டிய பொருளை ஈட்டிக்கொண்டு விரைவில் வீடுவந்து சேர்தல்வேண்டும் என்ற எண்ணத்தை அவனுக்கு உணர்த்

தியே யிருக்கும். ஆகவே அவன் விரைவில் வருவான் என்னும் உறுதியுடையவள் தோழி. ஆனால், அவன் கூறிச் சென்ற காலமெல்லாம் கடந்தும் அவன் வரவில்லை; அதனால், தலைவி அவன் தன்னை மறந்துவிட்டான் என்றே உறுதியாக எண்ணுகிறாள். அந் நிலையில், அவளிடத்தில் சென்று, "அவன் மறவான்" என்று வெளிப்படையாகக் கூற அஞ்சுகிறாள் தோழி; என்றாலும், அவள் அதைக் கூறக் கடமைப்பட்டவள் ஆகவே, தலைவியின் கருத்தையும் ஏற்றுக்கொள்வாள் போல், "அவர் நம்மைப்பற்றி நினைக்கவே மறந்துவிட்டாரோ?" என்ற ஐயத்தை எழுப்பிப் பின்னர், அதை மறுப்பாள்போல், "அல்லது, வந்த வேலையை விரைவில் முடித்துக்கொண்டு மீள்வதற்குரிய வாய்ப்பு கிடைக்கவில்லையோ?" என்று ஐயப்படுவாள் போல்கூறி, "அவன் வராமைக்குக் காரணம அதுவே; அவன் மறதி அன்று" என்று துணிந்து கூறித் தலைமகளைத் தேற்றினாள்.

இக் கருத்தடங்கிய பாடலைப்பாடி, "அறிவே உருவானவள் தோழி" என்ற அகத்திணைக் கொள்கைக்கு அரண் செய்தார் ஊண்பித்தை:

"உள்ளார் கொல்லோ? தோழி! உள்ளியும்
வாய்ப்புணர்வு இன்மையின், வாரா கொல்லோ?
மரல்புகா அருந்திய மாவெருத்து இரலை
உரற்கால் யானை ஒடித்துஉண்டு எஞ்சிய
யாஅ வரிநிழல் துஞ்சும்
மாயிரும் சோலை மலையிறந் தோரே." (குறுந் : உங௨)

---

## ௫. ஒக்கூர் மாசாத்தியார்

இவர் இயற்பெயர் சாத்தியார்; இது சாத்தனார் என்பதன் பெண்பாற் பெயராகும். சாத்தன் என்பது, ஐயனார் என்ற கடவுட்பெயர். சாத்தன், சாத்தி என்ற இப் பெயர்கள், இலக்கண மேற்கோட் பெயர்களாகப் பயில ஆளப்படுகின்றன; சாத்தன் என்ற பெயர்கொண்ட புலவர்களும் பலர் உள்ளனர்; இதனால், அக் காலமக்கள் இப் பெயர்களைப் பெருவழக்காக மேற்கொண்டிருந்தனர் என்பது புலனாகும். இவர் பெயர்க்கு முன்வரும் *ஒக்கூர், புலவர் பிறந்த ஊர் போலும்; ஆனால், அது யாண்டுளது என்பது அறியக்கூடவில்லை; இவர் பிறந்த ஒக்கூரிலேயே, இவர் பெயர்கொண்ட ஆண்பாற் புலவரும் ஒருவர் இருந்தனர்; ஒக்கூர் மாசாத்தனார் இவ் விருவரும் உறவுடையவராகவும இருத்தல் கூடும். ஆனால், அவர் உறவு, எத்தகைய உறவு என்பதையோ, அவர் உறவுடையவர் என்பது உண்மைதான் என்பதையோ உறுதிசெய்யும் சான்று ஒன்றுமில்லை.

ஒக்கூர் மாசாத்தியார் பாடிய பாடல்களில் நமக்குக் கிடைத்தவை எட்டு. அவற்றுள் ஒன்று புறத்துறை தழுவிய பாடல்; ஏனைய ஏழும் அகத்துறைக் கருத்துக்கள் கொண்டவை. அவர் பாடிய பாக்கள் எல்லாவற்றுள்ளும், தமிழர்க்கும், தமிழ் நாட்டிற்கும் சிறப்பளித்துத் தனக்கும் புகழ் அளித்த பெரும்பாட்டு, புறநானூற்றில் காணப்படும் பாட்டே

தமிழ்நாட்டுச் சிற்றூர்த் தெருவொன்றில் நடந்த நிகழ்ச்சியிது; நாடு காவலுக்கான போர் நடைபெற்றுக் கொண்டிருக்கும் காலம்; காலைநேரம்; ஊர் நடுவே அமைந்திருக்கும் மன்றத்தே உள்ள போர்ப்பறை ஒலிக்கத் தொடங்கிவிட்டது; அதைக் கேட்டாள் ஒரு கிழவி; நாடு காவலுக்கு நம் தொண்டும் இருக்கவேண்டுமே; நம் குடியி

---

* ஒக்கூர் என்னும் ஊர் பாண்டிநாட்டில் சிவகங்கைக்கு வடபால் ஆறுகல் தொலைவில் ஒன்று இருக்கின்றது. அதுவே போலும்!

நிலத்திற்கு உரியவனே நிலத்தை உழுகிறான்; அவனுக்கு அதுவன்றி வேறு வழியில்லை; ஆகவே, அத்தொழிலில் அவன் ஊக்கம் காட்டி உழைக்கிறான் என்றும், உழவுத்தொழில் நன்கு நடைபெறவேண்டுமே, என்று கவலை கொள்ளவேண்டிய அவலநிலை இன்று இல்லை. இன்று, உழவன் பெற்றிருக்கும் வாய்ப்பும் வசதியும் மிக மிக அதிகம்.

நம்மிடம் இருப்பது ஒரு ஏர்தானே! இவ்வளவு நிலத்தையும் எவ்வாறு உழுது முடிப்பது? என்ற கவலை கொள்ளவேண்டியதில்லை; பணம் கொடுத்தால்—ஊர்க் கூலிக்குமேல் சிறிது கூட்டிக் கொடுத்தால்—எத்தனையோ ஏர்கள் கூலிக்கு வரும், அவற்றைக்கொண்டு எவ்வளவு நிலத்தை வேண்டுமானாலும் ஒரேநாளில் உழுதுவிடலாம். மாடுகொண்டு உழும ஏர்களைத் தேடிக்கொண்டு போக வேண்டிய தொல்லையும் இப்போது குறைந்துவிட்டது; விஞ்ஞான வளர்ச்சி அதற்கான வசதியை செய்தளித்துளது; ஒரேமணி நேரத்தில் எத்தனை ஏக்கர் நிலத்தையும் எளிதில் உழுதுதள்ளிவிடும் பொறியியற்கலப்பைகளை இன்றைய உழவன் பெற்றுள்ளான். அக் கலப்பைகளுக்குப் பெரும்பொருள் கொடுத்து வாங்கி வைத்திருத்தல் வேண்டும் என்பதும் தேவை இல்லை; ஊருக்கு ஒன்று, பல ஊர்களுக்கு ஒன்று என அரசியலாரே வாங்கிவைத்துள்ளனர், அதைப் பயன்படுத்திக் கொள்வதற்கான சிறு பணத்தைமட்டும் கொடுத்துவிட்டுத் தன் பரந்த நிலங்களைப் பண்படுத்திக்கொள்ளும் வாய்ப்பு இன்று உளது; ஆகவே நிலம் பரந்துகிடக்கிறது; ஏர் கிடைப்பது அரிதாக உளது என்று கவலை கொள்ளவேண்டிய நிலை ஒழிந்துவிட்டது.

ஏர் கிடைக்கிறது; ஆனால், நிலம் உழுவதற்கான பக்குவம் அடையவேண்டுமே! அதற்கு நீர் வேண்டுமே! நீர்தரும் மழை வேண்டுமே என்ற கவலையும் இன்றைய உழவனுக்கு இல்லை. வேண்டும்போது, வேண்டிய இடத்தில் வேண்டிய அளவு மழையினைப் பெற்றுக்கொள்ளத்

தக்க அறிவுவளத்தை அவன் பெற்றுவிட்டான்; இயற்கை வழிப் பெறும் மழையற்ற இடங்களிலும், நிலத்திற்கு வேண்டும் நீரை, அவன் பல்வேறு வழிகளில் பெற்று விடுகிறான்; பேராறுகளின் குறுக்கே அணைகட்டித் தேக்கிய ஆற்றுநீர, கால்வாய்வழி வந்து அவனுக்கு ஆயுட்காலம் முழுதும் துணைபுரிகிறது; ஆண்டுமுற்றும் நீர் ஓடும் பேராறுகள் இல்லா இடங்களில், சிற்றாறுகளில் மழைபெய்து வெள்ளம் வருங்கால், அவ்வெள்ளநீரை வாய்க்கால் வழியே கொணர்ந்து தேக்கிவைக்கும் பெரிய பெரிய ஏரிகள், பல ஆண்டுகளுக்குப் பயனளிக்கும்; இத்தகைய பெரிய நீர்நிலைகளே அல்லாமல், ஓராண்டிற்கு, ஆறு திங்களுக்கு, மூன்று திங்களுக்காம் நீரைத் தரும் நீர்நிலைகள் பல ஆங்காங்கே அமைந்து அவனுக்கு நீர் அளித்துத் துணைபுரிகின்றன; ஆற்றுக் கால்வாய்களோ, நீர்நிலைகளோ இல்லாத இடங்களில் தோண்டிய கிணறுகள் அவனுக்கு நின்று உதவுகின்றன, கிணறுகளில மேல்நீர் வற்றிவிடினும், நீர்த்தாரை உள்ளவரையும துளைத்துச் சென்று அந்நீரை மேலே கொணரும் வழிவகைகளையும் இன்று உழவர் பெற்றுள்ளனர்.

கிணறும இருக்கிறது; கிணற்றில் நீரும் நிறைந்துளது என்றாலும, இவ்வளவு ஏர் அமர்த்திவிட்டோமே; இவையெல்லாம் தொழிலாற்றுவதற்கான நீரை எப்போது இறைப்பது என்ற கவலையும் இவனுக்கில்லை; ஏற்றமும், கபிலையும்கொண்டே இறைக்கவேண்டும் என்றநிலை எப்போதோ மறைந்துவிட்டது; முடுக்கிவிட்டால், மூச்சுவிடும்முன்னே மிகப் பரந்த நிலத்திற்கும் தேவையான நீரை வாரி வழங்கத்தக்க விஞ்ஞானப் பொறிகளை அவன் இன்று பெற்றுளான்; அதன் உதவியால், சிறிதுநேரத்தில் பெரிய கிணறுகளையும் வற்றச்செய்து வேண்டும் நீர் பெறும் வாய்ப்பு அவனுக்கு இருக்கிறது. ஆகவே, நீர் இல்லையே என்றோ, நீர் உள்ளபோதே உழவுத்தொழிலை முடித்துவிடவேண்டுமே என்றோ அவன் கவலைகொள்ளத் தேவையில்லை; அவன் எப்போது கலப்பையைக் கையில்

பிடித்துக்கொண்டு கழனியில் இறங்குகின்றானோ, அந்தக் கணமே அவனுக்கு வேண்டும் நீர் அளிக்கவல்ல வழி வகைகள் பலப்பல இன்றுள்ளன.

ஆகவே, இத்தகைய சூழ்நிலையில் நடைபெறும் இன்றைய உழவுத் தொழிலையும், உழுபவனையும் மட்டுமே அறிந்தவர்களால், ஓரேர் உழவர் உள்ளத்தை உணர்தல் இயலாது; அவர் வாழ்ந்த காலத்தில், உழவுத்தொழில் நடைபெறுதற்காம் சூழ்நிலையினையும், அச் சூழ்நிலையில் நின்று தொழில்புரிந்த அக்கால உழவனையும் உணர்ந்தவர் களாலேயே அவர் பாட்டின் பொருள் உணர்ந்து பாராட்ட முடியும்; ஆதலின் அக்கால உழவனைச் சிறிது அறிந்து கொள்வோமாக.

- நிலத்திற்குரியவன் வேறு; அந்நிலத்தை உழுபவன் வேறு என்ற நிலை பண்டு இல்லை; நிலத்திற்குரியவனே நிலத்தை உழுதல் வேண்டும்; ஒவ்வொருவரும் ஏதோ ஓர் அளவுள்ள நிலத்தைத் தங்களுக்கெனப் பெற்றிருந்தனர் ஆதலின், பிறர்நிலத்தில் கூலிக்கு உழவுத்தொழில் புரிவோர் அரியராயினர், ஆகவே, தன் நிலத்தில பிறர் உழுது பயன் அளிப்பர் என நிலமுடையோன் எதிர் பார்த்தல் இயலாது; இதனால், நிலம் படைத்தோன் உழவுத் தொழிலின் நுட்பங்களை உணர்ந்தவனாய் விளங்கினான்; ஏரின் அருமை, நீரின் இன்றியமையாமை, பருவத்தே பயிர்செய்யவேண்டிய பண்பு ஆகிய இவற்றை அவன் நன்குணர்ந்திருந்தான்; தன்தொழிலைத் தானே முடித்தல் வேண்டும்; தன்கையே தனக்குஉதவி என்ற அறிவு அவன்பால் அமைந்திருந்தது.

வாழ்வதற்கான வழிகள் இன்று வகைவகையாக வளர்ந்து தோன்றுவதேபோல், பண்டு விரிந்து விளங்க வில்லை. பண்டைக்கால மக்கள் அனைவரும் உழவுத்தொழில் ஒன்றையே நம்பி உயிர்வாழ்ந்திருந்தனர்; அதுவன்றி வேறுதொழில்களை அவர்கள் அறிந்திருந்தார்கள் என்று கூறுதல் அருமையே; ஆதலின், வாழவேண்டும் என்று

விரும்பிய அக்கால உழவன், தன் நிலத்தையே நம்பி வாழ வேண்டியவனாயினான். உழவேண்டிய காலத்தில் உறங்கிவிட்டால், ஓராண்டிற்கு உணவின்றி வாடநேரிடும் என்பதையும் அவன் அறிந்திருந்தான்; அதனால், நிலத்தைத் தக்க காலத்தே உழுது பயிரிடவேண்டும் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் ஆழக் குடிகொண்டிருந்தது.

நிலத்தை உழுதே ஆகவேண்டும் என்ற கட்டாய நிலையால் உழவேண்டும் என்ற ஊக்கத்தோடு உழைக்க முன்வரும் அக்கால உழவன், அத்தொழிலை எளிதாக மேற்கொள்ளக்கூடிய சூழ்நிலையில் வாழ்ந்தானல்லன்; தான் வேண்டும்போது பயிர் செய்யலாம்; வேண்டும் போது வேண்டிய ஏர் கிடைக்கும்; நீர் நினைத்தபோது வந்து நிறையும் என்ற நிலை அவனுக்கு இல்லை; எண்ணிய எண்ணியாங்கு முடிக்கும் திண்மையை, அவன் உழவுத் தொழிலில் பெற்றிருக்கவில்லை. மிக மிகத் துயர்தரும் சூழ்நிலையிலேயே, அவன் தன் உழவுத்தொழிலை மேற் கொண்டு வந்திருக்கக் காண்கிறோம்.

உழவே உயிரூட்டும் தொழில்; அத்தொழிலை எவ்வாறாயினும் செய்தே ஆகவேண்டும்; தன் நிலத்தைத் தானே உழுதல்வேண்டும்; தன் நிலத்தில் பிறர் வந்து துணைபுரிவர் என எதிர்பார்த்தல் இயலாது. "கொள்ளுக்கு இரண்டு சால்" என்ற முறையில் நாமும் உழுதோம் என்று அரைகுறையாக உழுதல் கூடாது; அதற்கு உள்ளமும் இடந்தராது; நன்றாக உழவேண்டும்; அகல உழுவதினும் ஆழ உழவேண்டும்; எல்லா நிலத்திலும் பயிர் செய்ய வேண்டியதில்லை; நிலத்தின் ஒருபகுதியில் மட்டும் பயிர்செய்தால் போதும் என்று எண்ணுதல் கூடாது; எல்லார்க்கும் தேவையான உணவுப்பொருளை உண்டாக்குதல் வேண்டும். ஆதலின், எல்லா நிலத்தையும் உழுதல்வேண்டும்; எவ்வளவு பெரிய நிலத்தையும் எளிதில் உழக்கூடிய இயந்திரக் கலப்பைகள் இல்லை; கூலிக்கு ஏர் கொணர்வாரும் இலர்; தான் ஒருவனே உழுதல்வேண்டும்; தன்னிடம் உள்ள ஒரு ஏரைக் கொண்டே உழவேண்டும்;

இன்றைக்கு இந்நிலம்; நாளைக்கு அந்நிலம் என்ற முறையில், ஒருநாளைக்கு ஒரு நிலமாக உழுதுவிடலாம் என்று எண்ணினால் அதுவும் இயலாது; அத்தகைய வாய்ப்பு அக்கால உழவனுக்கு இல்லை; நிலத்தை உழுவது, அந்நிலம் ஈரம்பட்டுப் பக்குவமாய வழியே இயலும்; மிக ஈரம் உள்ளபோதும் இயலாது; ஈரம் பெரிதும் புலர்ந்த வழியும் இயலாது; இன்று இருப்பதுபோன்ற நீர் வசதி அன்றும் இருந்திருந்தால் அது இயலும்; ஆனால் அவை அன்று இல்லை; தன் நிலத்திற்கு வேண்டிய நீருக்கு அக்கால உழவன் வானத்தையே எதிர்நோக்கியிருந்தான். நீர் பெறும் பலப்பல வழிமுறைகளைக் கண்டிருக்கும் இக்காலத்திலும் மழையின் வருகையை மக்கள் வேண்டி நிற்கின்றனர் என்றால், அத்தகைய வசதி யொன்றும் இன்றி, தன் தொழிலிற்கு அஃதொன்றையே நம்பி வாழ்ந்த பழங்கால மக்கள் எதற்கும் மழையையே எதிர்நோக்கி நின்றதில் வியப்பொன்றும் இல்லை.

சாவா மருந்தாம அமிழ்தேபோல் உலகிற்கு உணவளித்துப் புரப்பது மழையே.

"வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தானஅமிழ்தம என்று உணரற் பாற்று." (திருக்குறள்: ௧௧)

மழை இல்லாமல் உலகம் இயங்காது; "நீர் இன்று அமையாது உலகு;" "மழை இன்றி மாநிலத்தார்க்கில்லை;" மழைஇல்லாது போனால் உலகில் உயிர்களும் வாழா.

"மாரிவறங் கூரின் மன்னுயிரில்லை;"

ஆதலின், உலகத்து உயிர்கள் எல்லாம் மழையையே எதிர்நோக்கி வாழ்கின்றன.

"வானோக்கி வாழும உலகெல்லாம்." (திருக்குறள்: ருசஉ)

மழை இல்லையேல் உழுதொழில் நடைபெறாது;

'ஏரின்உழார் உழவர்; புயல் என்னும்
வாரி வளங்குன்றிக் கால்.' (திருக்குறள்: ௧௪)

அவர் அஃது ஆற்றாராயின், உலகில் பசியும் பிணியும் பகையும் கூடிப் பாழ்பல புரியும்.

> " விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்து
> உள்நின்று உடற்றும் பசி."  (திருக்குறள்: கங)

நிலம் வான்போல் பரந்துகிடப்பினும், நீரில்வழி அந் நிலத்தால் பயனின்றாம்; நிலமும நீரும் சேர்ந்ததே உணவு எனப்படும்; நிலமும் நீரும் ஆகிய இரண்டும் கூடியே இயங்குதல் வேண்டும்; நீரின்றி இயங்கும நிலம் நன்னிலம் எனப் போற்றப்படாது; புன்னிலம் எனத் தூற்றப்படும்.

> " உணவெனப்படுவது நிலத்தொடு நீரே
> ......வித்திவானநோக்கும் புன்புலம்
> கண்ணகன் வைப்பிற்று ஆயினும் நண்ணி
> ஆளும்இறைவன் தாட்கு உதவாதே "

மழையின் மாண்பறிந்த புலவர்கள் இவ்வாறெல்லாம் போற்றிப் புகழ்நதார்கள்.

மழை, உழவன் வேண்டும்போது வாய்த்து வழங்கும் இயல்புடையதன்று; மழை எதிர்பார்க்கும்போதும் பெய்யாது; எதிர்நோக்கும் அளவும் பெய்யாது; எபபோது பெய்யும் எவ்வளவு பெய்யும் என்று எவரும கூறார்; ஆதலின், அது வநது வாய்த்த காலத்திலேயே அதனைப் பயன்படுத்திககொள்ளுதல் வேண்டும்; மழைபெய்தலால் பெற்ற ஈரம பலநாள் இருத்தலும் இல்லை; அது விரைவில் உலர்ந்துபோம் இயல்புடையது; ஒருமுறை பெய்து உழு தொழிலுக்குத் துணைபுரிந்த மழை மீண்டும் வருமா? வருமாயின் எப்போதுவரும் என்பதை எவரானும் கூறல் இயலாது. ஆதலின், இந்த மழைக்கு இந்நிலம்; நாளை மழைக்கு அந்நிலம எனவரைந்து கொண்டு உழுதல் இயலாது; மழை பெய்துவிட்ட உடனே, நிலம் பக்குவப் பட்டிருக்கும்போதே, அப்பக்குவம் கெடுவதற்கு முன் னரே, எல்லாநிலத்தையும் உழுது முடித்துவிடல் வேண் டும்; இது அக்காலச் சூழ்நிலை. இத்தகைய சூழ்நிலையினை

மனதில் பதியவைத்துக்கொண்டு, ஓரேருழவர் பாட்டைப் பார்ப்போமாக.

கார்காலம் தொடங்கியவுடனே மீண்டு வந்துவிடுவேன் என்று உறுதிகூறிப் பொருள் சேர்க்கச்சென்ற ஒரு தலைமகன், "கிழவி நிலையே வினையிடத்துரையார்" என்பதற்கேற்ப, தான் மேற்கொண்ட வினைமேற் சென்ற நினைவால், மனைவியின் எண்ணம் அவன் மனதில் எழவில்லை; காலம் செல்வதையும் கருதிலன்; வந்த வேலை முடிந்தது; கருமமே கண்ணாய் நின்று பெரும்பொருள் சேர்த்துவிட்டான்; வினைமுடித்து நோக்கியவழி, தான் கூறிவந்த கார்காலம் தொடங்கி விட்டமையை உணர்ந்தான்; உடனே மனைவியைப் பற்றிய எண்ணம் உள்ளத்தில் இடம்பெறலாயிற்று; ஆடுகின்ற அழகிய மூங்கிலைப் போன்ற பருத்த அவள் தோள் அழகும், அன்பும் அருளும் ததும்பும் அவள் கண் அழகும் அவன் கண்முன் வந்து நிற்கலாயின; தன் ஊரில், தன் வருகையை எதிர்நோக்கி நிற்கும் அவள் நிலையினை எண்ணுவானாயினன்.

"அவர் குறித்துச்சென்ற காலமும் வந்தது; அவர் வந்திலர், ஆதலின், நம்பால் அவருக்கு அன்பில்லை போலும்! அதனால் அவர் நம்மை மறந்தாரோ? 'பிரியேன், பிரியின் உயிர்தரியேன்' என்று சூளுரைத்தவர் நம் தலைவர்; ஆதலின், அவர் நம்மை மறவார்; நம்மை அவர் மறப்பினும், அவர் சென்றவழியிலே, ஆணும் பெண்ணுமாய் அன்புகொண்டு கலந்துவாழும் உயிர்வகைகள், அவருக்கு மனைவியோடு கலந்து வாழவேண்டிய கடமையை நினைப்பூட்டியிருக்கும்; ஆதலின், அவர் நம்மை மறந்திரார்; பின் அவர் வாராமைக்கு யாதுகாரணம்? ஒருவேளை, அவர் மேற்கொண்டு சென்ற வினை இன்னும் முடிந்திலதோ? இல்லை; அவ்வாறிருக்க முடியாது; அவர் எண்ணியது எண்ணியாங்கு முடிக்கும் திண்ணியர்; ஆதலின், எடுத்த வினையை எப்போதோ முடித்து இருப்பர், முடித்தும் இன்னும் ஏன்வந்திலர்? அவர் சென்றவழி, கடத்தற்கரிய கொடுவழி என்ப; அவ்வழியில் அவருக்கு ஏதம் ஏதேனும்

உண்டாயிருக்குமோ?" என்றெல்லாம் பலப்பல எண்ணி வருந்தும் தலைவியின் துயர்நிலை அவன் கண்முன் வந்து நிற்பதுபோல் தோன்றிற்று.

"அவள் அவ்வாறு மனக்கவலை கொண்டு மாழ்கினால், அவள் அழகு என்னாம்? உளக்கவலையால் உடல் நலம் குன்றுமே! அதனால், அவள் அழகிழந்து அழிவளே! அந்தோ! அவளைப் பிரிந்து வருங்கால் பார்த்து மகிழ்ந்த அவள் தோள் அழகையும், கண்ணழகையும் மீண்டு சென்ற வழிக் காண்பனோ? காணவேண்டுமாயின், இன்றே ஆங்கு அடைதல்வேண்டும்; இப்பொழுதே அடைதல்வேண்டும்; ஆனால், அந்தோ! அஃது எளிதில் இயலாதுபோல் தோன்றுகிறதே! அவள் இருக்கும் இடத்திற்கும் நமக்கும் இடைப்பட்ட இடந்தான் எத்துணை தொலைவு! மிகமிகச் சேய்மைக்கண் அன்றோ அவள் இருக்கிறாள்? செல்லும் வழியாவது ஏதும் இடையூறும் இல்லா நல்வழியாக உளதா? அது, காடும் மலையும் காணும் கலந்தன்றோ காட்சி அளிக்கிறது! இத்தகைய அரிய - கொடிய - மிக நீண்ட வழியை எப்போது கடப்பேன்: பையக் கடத்தல் கூடாதே; குறித்தகாலம் சிறிது கழியினும் பொறா அவளை, இவ்வழியை மெல்லக் கடந்துசென்றால் காணவும் இயலாதே; அந்தோ! யாது செய்வேன்? எப்படிக் கடப்பேன் இப் பெருவழியை? எப்போது கடப்பேன்? அவளை எப் போது காண்பேன்? அதுவரை எவ்வாறு ஆற்றியிருப் பேன்?" என்றெல்லாம் உள்ளம் துடிக்க நிற்கிறான்.

இத் தலைமகன் உள்ளத்துடிப்பை விளக்க, புலவர் ஓரேருழவர் அழகிய ஓர் உவமையினை மேற்கொண்டுள்ளார்.

உழவன் ஒருவன்; சிறிது நிலம் உடையவன்; அந் நிலத்தையே நம்பிவாழும் பொருள்வளம் உடையவன்; தன் நிலத்தைப் பயிரிட்டுப் பயன்பெறவேண்டும் என்ற எண்ணத்தால் பல நாட்களாக மழையை எதிர்நோக்கி இருந்தான். பெய்யாத மழையும் வந்து பெய்து ஓய்ந்தது; ஈரம் புலர்வதற்குமுன்பே எல்லா நிலத்தையும் உழுதுவிட

வேண்டும் என்று எண்ணினன், அவனிடம் உள்ளது ஒரே ஒரு ஏர்; அதை எடுத்துக்கொண்டு நிலத்தை அடைந்தான்; நிலம் ஈரம்பட்டுப் பக்குவமாக இருப்பது உணர்ந்தான்; ஏர் பூட்டி உழத் தொடங்கிவிட்டான்; வெய்யில் ஏற ஏற, ஈரம் சிறிது சிறிதாகப் புலர்ந்து நிலப்பக்குவம் குறைவதை உணரலாயினன். "அந்தோ! ஈரம் போய் விடுகிறதே! இவ்வளவு நிலத்தையும் உழுதாகவேண்டுமே! நம்மிடம் இருப்பது இந்த ஏர்தானே? இந்த ஏரைக்கொண்டு இவ்வளவு நிலத்தையும் எப்போது உழுது முடிப்பேன்? அதுவரை ஈரம் நில்லாதுபோல் தோன்றுகிறதே! அந்தோ! என்செய்வேன்? எப்படி உழுது முடிப்பேன்?" என்று அவன் உள்ளம் துடியாய்த் துடிக்கத் தொடங்கிவிட்டது; மனத்தில் அமைதி இல்லை, உள்ளமும் உடலும் ஒருவழி நிற்கவில்லை "உழவேண்டிய நிலம் இன்னும் உளது; ஈரம் புலர்ந்துகொண்டே இருக்கிறது; உள்ளதோ ஒரே ஏர்! எப்படி உழுது முடிப்பேன் இந்த ஒரு ஏரைக்கொண்டு? எப்போது உழுது முடிப்பேன் இந்த ஒரு ஏரைக்கொண்டு?" என உள்ளம் துடிக்க, உள்ளமவழி செயல் துடிக்க, ஏரை ஓட்டு ஓட்டு என விரைந்து ஓட்டுவானாயினன்.

"தலைவியைக் காணவேண்டும்; இடையிலே மிக நீண்டு கிடக்கும் கடத்தற்கரிய வழியைக் கடந்து சென்று காண வேண்டும்; எப்படிக் கடப்பேன் இப பெருவழியை? எப்போது காண்பேன் தலைவியை" எனத் துடிக்கும் தலைவன் உள்ளத்துடிப்பிற்கு, "எல்லா நிலத்தையும உழுதாக வேண்டும், ஈரம புலர்வதற்கு முன்பே உழுதாகவேணடும்; என்னிடம உள்ள ஒரு ஏரைக்கொண்டு எப்படி உழுது முடிப்பேன்? எப்போது உழுதுமுடிப்பேன்" எனத் துடிக்கும் ஓரேருழவன் உள்ளத்துடிப்பை உவமைகாட்டி, அக்கால ஆண்மக்கள்தம் உள்ளச் சிறப்பையும், உழவின் அருமையையும் ஒருங்கே விளக்கி, விளக்கிய அக்காரணத் தினலேயே, தம் இயற்பெயரைக் கொடுத்துவிட்டு **ஓரேருழவர்** என்ற சிறப்புப் பெயரைப் பெற்று அறிவுடைப் பெருமக்களால் பாராட்டப்பெற்ருர் நம்புலவர் பெருந்தகையார்.

"ஆடுஅமை புரையும் வனப்பின், பணைத்தோள்,
பேரமர்க் கண்ணி இருந்த ஊரே,
நெடும் சேண் ஆர் இடையதுவே! நெஞ்சே!
ஈரம்பட்ட செவ்விப் பைம்புனத்து,
ஓரேருழவன் போலப்
பெருவிதுப்பு உற்றன்றால்; நோகோ யானே."
(குறுந்: கங்க.)

உழவுத் தொழிலின் உயர்வை உணர்த்திப் புகழ்பெற்ற புலவர் ஓரேருழவனார், உலகியலை நன்கு உணர்ந்தவர் என்பது அவர் பாடிய மற்றொரு பாட்டால் நன்கு விளங்குகிறது.

உலகவாழ்வு, இல்லறம் துறவறம் என இரண்டாக நடைபெறுவதே எனினும், பெரும்பாலான மக்களால் விரும்பி மேற்கொள்ளப்படுவது இல்லறமே; இல்லறத்தே இருந்து வாழ்வே மக்கள் விரும்புகின்றனர்; துறவறம் மேற்கொள்வதாயினும், இல்லறத்தேயிருந்து பெருவாழ்வு வாழ்ந்த பின்னரே அதை மேற்கொள்ளுதல் வேண்டும்; அதுவே இயற்கையோடியைந்த துறவுநெறியாம் என்று தமிழர்கள் உணர்ந்திருந்தனர்.

"காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே."
(தொல். கற்பு: ருக)

எனத் தொல்காப்பியர் விதித்தலும் நோக்குக. இல்லறத்தே இருந்து ஆற்றவேண்டிய கடமைகளைக் கைவிட்டு விட்டுத் துறவறம் மேற்கொள்வது கடமையுணர்ந்தார் செயலாகாது; பலர்க்கும் பயன்பட வாழும் இல்லறத்தை விட்டுத் தன் ஒருவன் உயர்விற்கே உறுதுணைபுரியும் துறவறத்தை மேற்கொள்ளுதல் கூடாது; இதை உணர்ந்தே வள்ளுவரும்,

“அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன்?”

‘ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.” (திருக்: சகூ, சஅ)

எனத் துறவறத்தினும் இல்லறமே நன்றும் என நாட்டுவர்.

உலகில் பிறத்தல், ‘நாம் ஒருவர்மட்டும் வாழ்ந்தால் போதும; நம் வாழ்வுமட்டும உயர்ந்தால் போதும்’ என்ற குறுகிய நோக்கத்திற்காதல் கூடாது; ஊரெல்லாம் வாழ வேண்டும்; அவர்கள் வாழ்விற்குத் தான் துணையாதல் வேண்டும்; பிறர்வாழத் தான் துயர் உறுவதால் தவறு ஒன்றும் இல்லை; தனித்துவாழ்ந்து சிறு துயரும் தாங்க மாட்டாது, துறவறம் மேற்கொளவதினும், சுற்றம் சூழ வாழ்ந்து, அவர்கள் நல்வாழ்வு வாழத் துணைபுரிந்து, அதனுல் துயருறவேண்டிவரினும் அதையே பெருமக்கள் விரும்புவர். “பல்லார் பயன்துய்க்கத் தான் வருந்தி வாழ்வதே நல்லாண் மகற்குக் கடன்” என்பர் புலவர்கள்.

இல்லறத்தை விட்டுத் துறவறத்தை மேற்கொள்வது அவ்வளவு எளிய செயல் அன்று; நாட்டைவிட்டுக் காட்டை அடைதல் எளிதில் நிகழக்கூடியதன்று; உலகில் வாழ்வோர் நாம் ஒருவர் மட்டும் அன்று; நம்மைச் சூழ ஒரு பெரும் சுற்றம் உளது; அவரவர்க்கு வேண்டுவன எல்லாவறறையும் முடித்துவைத்துவிட்டுத் துறவறம் மேற்கொள்வது அத்துணை எளிதன்று. அவ்வளவு பெருஞ் சுற்றத்தையும அறவே மறந்துவிட்டு, ‘அவர் எக்கேடு கெட்டால் நமக்கென்ன?’ என்று எண்ணித் துறநது ஓடுவதும அழகன்று; ஆகவே சுற்றம் சூழ வாழ்பவர் துறவறத்தை மேற்கொள்ளுதல் ஆகாது: கூடாது; அத் தகைய சுற்றம் எதுவும இல்லாதவரே இல்லறத்தை எளிதில் விட்டுத் துறவறத்தை மேற்கொள்ளுதல் இயலும்.

இக் கொள்கையைப், புலவர் ஓரேருழவனுர் மற்ெருரு வகையால் விளக்குகிருர்:

'காணும் இடமெங்கும்மணல் பரந்து விளங்கும் ஒரு பெரு வெளியில் தனித்த ஒருவனால் துரத்தப்படும் ஒரு மான் மிக எளிதில் தப்பி ஓடிவிடும்; ஆனால், மலையும் மரமும் செறிந்த ஓரிடத்தே பலர் கூடி வேட்டையாடும் மான், அவர்களைத் தப்பி ஓடுதல் இயலாது; பரந்த மணல் வெளியில் வாழும் மான்போல் தனித்து வாழவில்லை நான்; அவ்வாறு வாழ்ந்திருந்தால் எப்போதோ துறவறத்தை மேற்கொண்டிருப்பேன்! ஆனால், மரம் பல செறிந்த காட்டில் வாழும் மான்போல், ஒக்கலும் மக்களும் சூழ உள்ள இடத்திலன்றோ நான் வாழ்கின்றேன்; துறவறம் மேற்கொள்ளலாம் என்ற எண்ணத்தை அவர்கள் வாழ்வு, அறவே மறக்கச் செய்துவிடுகின்றதே; என் கால் கட்டுக் களாம் அவர்களை மறந்து, நான் எங்ஙனம துறவறம மேற் கொள்வேன்!' என்ற கருத்தமைந்த பாடல் அவர் உள் ளத்தை உணர்த்துவது அறிக:

"அதள்எறிந் தன்ன நெடுவெண் களரின்
ஒருவன் ஆட்டும் புல்வாய் போல,
ஓடி உய்தலும் கூடுமன்!
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே." (புறம் · ககூ௩)

ஓரேருழவனையும், ஒருவன் ஆட்டும் புல்வாயினையும் உவமை காட்டி, உழவின் சிறப்பையும், உலகியல் உணர் வையும் உணர்த்திப் புகழ்பெற்ற புலவர் ஓரேருழவனார் உள்ளம் உணர்ந்து பாராட்டற்குரியதன்றோ!

---

## ௩. கயமனார்

உவமையாற் பெயர் பெற்ற புலவர்களுள் கயமனாரும் ஒருவராவர். இன இனமான மீன்களால் நிறைந்த உப்பங் கழி ஒன்று பசிய இலைகள் படர்ந்து காணப்படுகிறது. அவ்விலைகளுக்கிடையே நெய்தற் பூ ஒன்று மலர்ந்துளது; அம்மலர் சற்றுப் பருத்து உயர்ந்த தண்டினை உடையது; அக்கழி கடலோடு தொடர்பு கொண்டிருப்பதால், கடல் நீர் பொங்குந்தோறும் கழியில் நீர் அளவு சற்று உயர்வதும், கடல் அலை ஓய்ந்து அடங்குந்தோறும் கழிநீர் அளவு சற்றுக் குறைவதும் நிகழும். இவ்வாறு, கடல் நீரின் ஏற்றிழிவிற்கேற்ப, கழிநீரும் ஏறி இழியும் இயல்புடையதாம்; கழியில் நீர்ஏறி நிற்பின், அக்கழியில் மலர்ந்த நெய்தல் மலர்நீருள் படிந்து மறைந்துவிடும்; கழியில் நீர் இழியின், அம்மலர் மேலே எழுந்து காட்சி தரும்; இவ்வாறு கழிநீரின் ஏற்றிழிவிற்கேற்ப, கழியில் மலர்ந்த நெய்தல் மலர், நீருள் மறைந்தும், நீர்மேல் எழுந்து தோன்றியும் மாறிமாறிக் காட்சிதரும். இக் காட்சி, குளத்தில் நீராடும் மகளிர் நீருள் மூழ்கி மூழ்கி எழுங்கால் தோன்றும் அவர் கண்களின் காட்சியோடு ஒத்திருப்பதை உணர்ந்தார்; மகளிர் கண்களுக்கு நெய்தல் மலரை உவமிப்பது உண்டு; ஆகவே, கழிநீரில் மறைந்தும் வெளிப்போந்தும் மாறிமாறிக் காட்சிதரும் நெய்தல் மலர், கயத்துள் மூழ்கி மூழ்கி எழும் மகளிர் கண்களைப் போன்று உள்ளன என்று உவமை கூறினார்; அதனால் அவர் கயமனார் என்றும் அழைக்கப்பெற்றார்.

> "பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்,
> இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்
> கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந். ௯.)

கயமனார் என்ற பெயர் பெறுதற்குக் காரணமான இச் செய்யுள், புலவர்க்கு வாங்கித் தந்த புகழினும், புலவர் பாடிய ஏனைய பாடல்கள், அவருக்கு வாங்கித்தந்த புகழ் மிகமிகப் பெரிதாம். புலவர் கயமனார் பாடிய பாடல்

களாக நமக்குக் கிடைத்துள்ளன இருபத்து மூன்று: இவற்றுள் ஒன்றே புறப்பாட்டு; ஏனைய எல்லாம் அகப் பாடல்களே; அவ் அகப்பாடல்கள் இருபத்திரண்டிலும், அவர்க்குப் பெயர் சூட்டும் பெருமை வாய்ந்த இப்பாட்டு ஒன்று மட்டுமே மருதத்திணையினைச் சார்ந்து வேறு பொருள் குறித்ததாம். ஏனைய இருபத்தொரு பாடல் களும் "உடன் போக்கு" என்ற ஒரு துறையினையே பல் வேறு வகையான் விளக்கிக் கூறுகின்றன.

தோழியின் துணை ஒன்றே பற்றுக்கோடாகத் தாய் தந்தையர் அறியாமல் களவில காதல் கொண்டு வாழ்ந்த ஒரு தலைவனும், ஒரு தலைவியும், தம் தாய்தந்தையர் அறியாமல் மேலும் களவில் காதலித்து வாழ்தல் இயலாது என்பதையும், தமருக்கு அஞ்சித் தம் காதல் ஒழுக்கத் தைக் கைவிடுதலும் இயலாது என்பதையும் உணர்ந்து, தம் களவொழுக்கத்திற்கும், தம் கற்பு நெறிக்கும் கேடு நிகழா வகையில் வாழவேண்டுமாயின், தமர் அறியா வண்ணம் தலைமகன் ஊர் சென்று மணந்து வாழ்தலே செய்யக்கடவது எனத் தெளிந்த அறிவினராகி ஒன்று கூடிப் போய்விடுவதே உடன்போக்கு எனப்படும்.

உடன்போக்கு நிகழ்வதற்கு முன்னும் பின்னுமாக, உடன்போக்கே இறுதியாக மேற்கொள்ள வேண்டுவது என்பதைத் தோழி உணர்தல், உணர்ந்த தோழி அதைத் தலைமகற்கும் தலைமகட்கும் உணர்த்தி அவர்களை உடன் போக்கிற்கு உடன்படுத்தல், தலைவி, தலைவனோடு சென்று விடுதல், இடைச்சுரத்தில் அவர் இயல்பும், ஆங்கு அவரைக் கண்டார் இயல்பும், தன் மகள் உடன்போக்கினை மேற் கொண்டுவிட்டாள் என்பதறிந்த செவிலி அழுது அரற்றி அவளைத் தேடிச்சென்று மீளுதல், தலைமகளைப் பெற் றெடுத்த நற்றாய், வீட்டிலும் தெருவிலும் இருந்து, சென்ற மகளை நினைந்து புலம்பல் ஆகிய செயல்கள் நிகழும்; இவற்றையெல்லாம் வகுத்துரைப்பதும் உடன்போக்கின் பாற்படும். உடன்போக்கு, ஐம்பத்தாறு உள் துறைகளை உடையது என்பர் இலக்கண ஆசிரியர்கள். இத்துறை

களைப் புலவர் கயமனார் மிகமிகத் தெளிவாகச் சொற்சுவை, பொருட்சுவை தோன்றப் பாடியுள்ளார்.

உடன்போக்கு நிகழ்ச்சியில் பெரும்பங்கு கொள்வார் மகளிரே ஆவர்; அம் மகளிர் தோழி, தலைவி, செவிலி, நற்றாய் என நால்வேறு வகையினராவர்; இந்நால்வகை மகளிரின் மன இயல்பினையும், அவர் ஒழுக்கத்தின் உயர் வினையும் உணர்த்தும் பகுதி, இவ்வுடன்போக்குப் பகுதியே யாம்; தோழியின் கடமையுணர்ச்சி, தலைமகளின் கற்புச் சிறப்பு, தாய்மார்களின் அன்புள்ளம் அவ்வளவும் இங்கே தான் நன்கு படம்பிடித்துக் காட்டப்படும்; மகளிர் கற்பே பொற்பெனக்கொண்ட மாண்புடை மனைவியாய், அறிவே உருவென வந்த தோழியாய், அன்பின் திருவுரு வாம் தாயாய் விளங்கவேண்டியவராதலின், அப்பண்பு களைக் குறைவறப் பெற்று விளங்கும் தமிழ்நாட்டு மகளிர் தம இயல்பினைத் தெளிய உணர்தல் வேண்டும்; ஆகவே, கயமனார் போற்றும் தோழி, தலைமகள், தாய், செவிலி ஆகியோரின் பண்புகளை உணர்ந்து, உடன்போய், உயர்வு பெறுவோமாக!

தலைவனும் தலைவியும் ஒன்றுகலந்த அன்பினராய் வாழ உறுதுணை புரியும் தோழி, அவர்கள் அன்பு வாழ்க் கைக்கு உடன்போக்கு ஒன்றே வழியாம் எனத் துணிந்து, அந்நிலையினை இருவர்க்கும் எடுத்துக்கூறி இசைய வைத் தாள். தலைமகன் போக்கிற்கு ஆவன முடித்துக்கொண்டு குறித்த நாளன்று குறித்த காலத்தில், குறிப்பிட்ட இடத் தில் வந்து சேர்ந்தான்; அவர்கள் வெளியேறுதற்காகக் குறிப்பிட்ட காலம், ஊரில், மகளிர் தயிர்கடையும் இருள் நீங்கியும் நீங்காமலும் உள்ள வைகறைப் பொழுது, தலைவி வெளியேறுங்கால் தன்னை யாரும் அறிந்து கொள் ளாவண்ணம் தன் உருவினைக் கரந்துகொண்டாள்; நடந்து செல்லுங்கால், ஒலி எழுப்பித் தன் செலவினைப் பிறர் அறி யச் செய்யும் என்று அஞ்சித் தன் காற்சிலம்பினை நீக்கி னள்: அதையும் அன்றுவரை தான் ஆடி மகிழ்ந்த பந்தை

யும் ஓரிடத்தே வைக்கச் சென்றாள் ; அந்நிலையில் அவள் உள்ளம் அவளை அறியாமல் நெகிழத் தொடங்கிற்று.

"பொழுது புலர்ந்ததும், என்னோடு ஆடிமகிழும என் ஆயத்தார் அனைவரும வருவர் ; வந்து என்னைத் தேடுவர் ; என்னைக் காணமல் அலைவர் ; அலைவார் கண்முன் இவை காணப்படும் ; இவற்றைக் கண்டு என் நிலையினை உணர்வர் ; உணர்ந்து, உணர்விழந்து, உளம் நொந்து அழுது நிற் பர் ; அந்தோ ! அப்போதைய அவர்கள நிலையினைக் காண வும் உள்ளம் நடுங்குமே !" என்று எண்ணினள். அவ் வெண்ணம் தோன்றியவுடனே, அவள் கண்கள் அவளையும் அறியாமல் நீர் பல்கின ; தலைவியின் இச் செயல்களையும், அவள் உள்ளத் துடிப்பினையும் தோழி உணர்ந்தாள் ; அவள உள்ளம சல்லென்று ; அவள் உள்ளமும கசிந்தது ; இவ்வாறு வருந்த வருந்த வெளியேறுவதினும், நிகழ்ந்தன வற்றைத் தாய்க்கும் பிறர்க்கும் உணர்த்தி, மேல் நிகழக் கடவனவற்றை மேற்கொள்வதே நன்று எனத் துணிந் தாள் ; தலைவியை விட்டுத் தலைவன்பால் சென்றாள்

"ஐய ! நின்னொடுவரத் தலைமகளும் இசைந்தாள் ; போக்கிற்கு ஆவனவற்றையும் மேற்கொண்டாள் ; ஆனல்; அவள் உள்ளம் வருந்தி வாடுகிறது: அவள் கண்கள் அவளை அறியாது நீர் சொரிகின்றன ; இந்நிலையில், உடன்போக் கினை மேற்கொள்ள என் உள்ளம் அஞ்சுகிறது; என் செய் வேன் ! ஆதலின், உடன்போக்கினைத் தவிர்வதே நலமாம" என்று கூறினள் ; உடன்போக்கும் நின்றது.

"வைகுபுலர் விடியல் மெய்கரந்து, தன்கால்
அரி அமை சிலம்பு கழீஇப், பன்மாண்
வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்,
இவை காண்தொறும் நோவர் மாதோ !
அளியரோ ! அளியர் !! என் ஆயத்தோர என
நும்மொடு வரவுதான் அயரவும்
தன்வரைத் தன்றியும் கலுழ்ந்தன கண்ணே." (நற் : கஉ)

இப்பாட்டில், கற்பொழுக்கநெறி நின்ற நற்குடிப் பிறந்தாள் ஒருத்தி, காதல்வாழ்வினை விரும்பிப் பெற்று வளர்த்த தாயையும், பிறந்ததுமுதல் உடன் ஆடிப் பழகிய ஆயத்தாரையும் பிரிந்து செல்வதா? அல்லது, இவர்பால் கொண்ட அன்புடைமையால் இவரைப் பிரிய அஞ்சிக் காதல்வாழ்வினைக் கைவிடுவதா? எனத் துணிய இயலாது நடுங்கும் உள்ளத்தின் தடுமாற்றமும், உடன்போக்கே உறுதி பயப்பதாம் எனினும், அது, தலைவியின் உளம் வருந்த நிகழ்தல் கூடாது என உணரும் தோழியின் உள்ளத்தின் உயர்வும் உணர்த்தப்பட்டுள்ள திறங்கண்டு மகிழ்க

உடன்போக்கு நின்றுவிட்டது; அவர்கள் அன்பு வாழ்க்கையினைத் தமர்க்கு உணர்த்தி அறத்தொடு நிற்க விரும்பினாள் தோழி; ஆனால், அதை எவ்வாறு உணர்த்துவது என அறியாது, உணர்த்தும் உள்ளத்துணிவும் இன்றி மயங்கியிருந்தாள். இவ்வாறு சின்னாட்கள் சென்றன; தமர், வீட்டிற்கு வெள்ளையடித்துச் செம்மண்பூசி அழகு செய்வாராயினர்; தெருவில் புதுமணல் பரப்புவாராயினர்; தாமும் தேன்முதலாம் இனியநீர் உண்டு மகிழ்வாராயினர்; தமரின் இச்செயல்கள் தோழிக்கு ஐயத்தை அளித்தன; அவள் உள்ளம் அவர்களின் இச்செயல்களுக்குக் காரணம் அறியத் துடித்தது. அந்நிலையில், "எம் மகள் மணவிழா ஏற்பாடுகள் இவை" என அவர்களே கூறியும் விட்டனர்; அவர்கள் கூறுவதைக் கேட்டாள் தோழி, தலைமகள் இனியும் ஈண்டே இருத்தல் அவள் கற்பிற்குக் கேடு பயக்கும் என உணர்ந்தாள்; ஈண்டு இருந்து அவர் மேற்கொள்ளும் மணத்திற்கு இசையின், கற்புக் கெடும்: இசையாது மறுத்தலோ இயலாது; ஆகவே, உடன்போக்கினை உடனடியாக மேற்கொள்ள வேண்டும் எனத் துணிந்தாள்; பெற்றோரையும் பழகியோரையும் பிரிந்து செல்வதா? என்ற எண்ணம் அப்போது அவள் உள்ளத்தில் இடம் பெறவில்லை; தலைமகளின் கற்புநெறி வாழவேண்டும் என்ற எண்ணத்தின்முன் தாயன்பும், ஆயத்தார் நட்பும் நில்லாது மறைந்து மாய்ந்

தன; ஓடினாள் தலைமகளிடம். "நம் பெற்றோர் வேற்று வரைவிற்கு வேண்டுவ மேற்கொண்டார்; ஆகவே நீ தலைமகனுடன் சென்றுவிடுவதே இப்போது செய்ய வேண்டுவது; அதற்கானவற்றை இன்னே, இப்போதே மேற்கொள்வாயாக" என்று அவளை முடுக்குவாளாயினள்.

"நனைவிளை நறவின் தேறல் மாந்திப்,
புனைவினை நல்லில தருமணல் குவைஇப்,
'பொம்ம லோதி எம் மகள் மணன்' என
வதுவை அயர்ந்தனர் நமரே அதனால்,
புதுவது புனைந்த சேயிலை வெள்வேல்
மதியுடம் பட்ட மையணற் காளை
...... .... ......................... .. . ...
. ............ ................அவனொடு
............ ........ .......... ..... ........
அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் யானே."

(அகம் உஉக)

உடன்போக்கினை மேற்கொண்டே யாதல் வேண்டும் எனத் தோழி கூறிவிட்டாளேனும், தலைவியின் உள்ளம் அதனை ஏற்றுக்கொள்வதாகத் தோன்றவில்லை; பிறந்த இடத்தைவிட்டுப் பிரிந்து செல்ல அவள் உள்ளம் விரும்பவில்லை போலும்! இருந்தால் கற்புநெறிக்குக் கேடு வரும் என எடுத்துக்காட்டிய பின்னரும், அவள் போக்கிற்கு உடன்படா உள்ளமுடையளாதல் கண்டு தோழி வியப்புற்றாள்; தலைமகளின் தயக்கத்திற்குக் காரணம் யாதாம் என எண்ணுவாளாயினள்; உடன்போக்கு தலைமகனுக்கு உடன்பாடோ இல்லையோ என ஐயுறுகின்றனளோ என எண்ணினாள்; உடனே, "அவன் போக்கிற்குத் தயாராகி விட்டான்; வேலை மாசுபோகத் துடைத்து நெய்பூசிக் கையில் எடுத்துக்கொண்டான்; அவன் ஏவலாளர்களும் புறப்பட்டு விட்டனர்" என்று கூறினாள்.

அதைக் கேட்டும் அவள் உள்ளம் உறுதி கொண்டதாகத் தோன்றவில்லை; போவதற்கு வேண்டும் ஏற்பாடுகளைத்

தான் இன்னும் செய்யவில்லை; அவற்றைத் தன்னால் செய்யவும் இயலாது எனக் கருதித் தயங்குகின்றனளோ என எண்ணினாள். உடனே, "நீ செய்ய வேண்டுவனவற்றையெல்லாம் நானே செய்து முடித்துவிட்டேன்: நினக்கு வேண்டும் மாலைகளையும் தொடுத்துவிட்டேன்; இலை ஆடைகளையும் ஆக்கிவிட்டேன்" என்று கூறினாள்; அப்போதும் தலைமகள் போக்கில் மாறுதல் நிகழக் காணோம்; ஒருகால், செல்லும்வழி இப்போது செலலுதற் கேற்றதாகாது; மிகவும் அருமை உடையது என வழி ஏதம் எண்ணி வருந்துகின்றனளோ என எண்ணினாள். "நிலம் நீரின்றி வற்றியிருந்த நிலைமை போய்விட்டது; பெருமழை பெய்துளது; மரங்கள் எல்லாம் பழுத்து உலர்ந்த பழைய இலைகளை உதிர்த்துவிட்டுப் புதிய துளிர்களைவிட்டுத் தழைத்துள்ளன; போகும்வழியில் உள்ள பொழில்கள், மலர்கள் நிறைந்து மணக்கின்றன; காடுகளும் இனிமை தருவனவாய் மாறிவிட்டன; பனிக்காலமும் நீங்கிவிட்டது; நிலவும் பால்போல ஒளிவிடத் தொடங்கிவிட்டது" என்று கூறி, "வழிச் செல்வோர்க்கு ஏதம் ஒழித்து இனிமை தருவதாக மாறிவிட்டது" என்றும் கூறினாள்; அந்நிலையிலும அவள் அசைந்து கொடுப்பாளாய்த் தோன்றவில்லை; தோழிக்கு ஆராய்ச்சி மேலும வளர்ந்தது. "நான் போய்விட்டால், நான் பேணிவளர்த்த மேடைமீதிருக்கும் மலர்ச் செடிகள் மங்கி மாண்பிழக்கும்; வயலைக் கொடிகள் வாடும்: நொச்சிக் கதிர்கள் கவின் இழக்குமு; அவற்றின் அந்நிலையினை அன்னை கண்டால், அலமந்து அழிவள்! அந்தோ! அன்னை அழ நான் பிரிவதா" என்று அவள் உள்ளம் வாடுகிறது போலும்; அன்னை அன்பே அவளைத் தடைசெய்கிறது எனக் கருதினாள்; உடனே, "அன்னை நின்னை நனி விரும்புகின்றாள் எனினும் நின் தாயினும் சிறந்தது நின் கற்பு என்பதை அன்னைமீது கொண்ட அன்பால் மறந்துவிடாதே; அவளை எண்ணி ஈண்டே இருந்துவிடுதல் கூடாது" என அறிவுரை கூறிப் பார்த்தாள்; அப்போதும் தலைவி இசைவாளாய்த் தோன்றவில்லை.

அப்பால் தோழிக்கு ஓர் உண்மை புலப்பட்டது; தலைமகள் தன் அண்ணன்மார் ஆற்றல் கண்டே அஞ்சுகின்ருள்; அவர்களோ புலியெனப்பாயும் போராற்றலும், பெருஞ் சினமும் உடையார்; தம் உடன் பிறந்தாளை ஏதிலான் ஒருவன் உடன்கொண்டு சென்றுவிட்டான் என உணர்ந்தால், அந்நிலையில் அவர்களுக்குண்டாகும் சினத்தால் யார் யாரக்கு எத்துணை எத்துணைக் கேடுகள் வந்துறுமோ என்று எண்ணியே அஞ்சுகின்ருள் என்றது அவள் உள்ளம். உடனே, "நீ கற்பு வாழ்க்கையினை விரும்புவை யாயின், நின் முன் பிறந்தார் ஆற்றலையும் எதிர்த்து நிற்கும் திண்ணிய உள்ளம் நினக்கு வேண்டும்; உறுதி உள்ளம் படைத்தார்முன் உறுபடை ஒன்றும் செய்யாது; ஆதலின், அண்ணன்மார் ஆற்றல் கண்டு அஞ்சாது புறப்படுக" என்று கூறி, அவளை இசைவித்து, உடன்கொண்டு சென்று தலைமகன்பால் ஒப்படைத்து, இருவரும் செல்வது கண்டு மனவருத்தமும் மகிழ்ச்சியும் மாறி மாறிக்கொண்டு மீண்டாள்

"வேலும் விளங்கின; வினைஞரும் இயன்றனர்;
தாரும் தையின; தழையும் தொடுத்தனம்;
நிலம் நீரற்ற வெம்மை நீங்கப்
பெயல்நா தலைஇ, உலவை இலை நீத்துக்
குறுமுறி ஈன்றன மரனே; நறுமலர்
வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
தேம்படப் பொதுளின பொழிலே; கானமும்
நனி நன்ருகிய; பனிநீங்கு வழிநாள்
பாலெனப் பரந்தரும் நிலவின் மாலைப்
போது வந்தன்று தூதே; நீயும்
கலங்கா மனத்தையாகி, என்சொல்
நயந்தனை கொண்மோ; நெஞ்சமர் தகுவி!
தெற்றி உலறினும், வயலை வாடினும்,
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்
நின்னினும் மடவள் நனிநின் நயந்த
அன்னை அல்லல் தாங்கி, நின் ஐயர்

புலிமருள் செம்மல் நோக்கி
வலியாய்'' (அகம் : உருக)

பொழுது புலர்ந்தது; தலைவி துயின்ற இடத்தில் அவள் இல்லை; மகளைக் காணுது செவிலி கலங்கினாள்; செவிலி, தலைமகளின் நற்றாய்க்கு உயிர்த்தோழியாய் விளங்கிய உயர்வுடையவள்; தலைமகளின் உயிர்த்தோழியைப் பெற்றெடுத்த நற்றாயாம் பேறு பெற்றவள்.

"தோழிதானே செவிலி மகளே"
(தொல். பொருள். களவியல்: ௩௪)

தலைமகளுக்குப் பாலும் சோறும் ஊட்டி அவள் உடலை வளர்த்ததோடு, நல்லன எல்லாம் எடுத்துக்கூறியும், அறனல்லனவற்றின் அழிவினை அறிவுறுத்தியும் அவள் உள்ளுணர்வையும் வளர்த்த பெருமை உடையவள்.

"கழிவினும், வரவினும், நிகழ்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும், அல்லவை கடிதலும்
செவிலிக்கு உரிய வாகும் என்ப."
(தொல். பொருள். கற்பு: கஉ)

இதனால் தலைமகளின் உண்மையான தாய் செவிலியே என உயர்ந்தோராற் பாராட்டவும் பெறுவாள்.

"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாய்எனப் படுவோள் செவிலி யாகும்."
(தொல். பொருள். களவு: ௩௩)

இத்துணை உரிமை உடையளாய செவிலி, தலைமகளைக் காணுது கலங்கினாள்; பின்னர்த் தலைமகளுக்குத் தலையாய தோழியாம் தகுதிப்பாட்டினை உடைய தன் மகள் வழி நிகழ்ந்தன அறிந்துகொண்டாள்.

மகள் ஏதிலான் ஒருவன்பின் சென்றுவிட்டாள் என்பதறிந்து பெருந் துயருற்றாள்; மகள் பிரிவு மாற்

றுணைத் துயர் தருவதாயிற்று; அவளை நினைந்து அழு தாள்; அரற்றினாள்; அலறினாள்; செவிலி உலகியல் உணர்ந்தவள்; ஆதலின், தன் மகள் பருவம்வந்த மகளிர் மேற்கொள்ளும் ஒழுகலாற்றினையே மேற்கொண்டுள்ளாள்; எனவே, தவறில்லை என உணர்ந்தாள்; என்றாலும் மகள் பால் கொண்டிருந்த அன்பு அவளுக்குப் பெருந்துயர் தருவதாயிற்று, மகளின் இளமையும், அவள் சென்ற வழியின் கொடுமையும் அவள் கண்முன் மாறிமாறித் தோன்றி அவள் மனத்துயரை மிகுத்தன.

வீட்டில் தன்னோடு ஆடி மகிழும் இளமகளிரோடு கூடிப் பந்தோ, அன்றிக் கழங்கோ சிறிதுநேரம் ஆடினா லும், உடலெலாம வேர்க்கத் தன்பால்வந்து, 'உடலெலாம் வலிக்கிறது, அன்னாய்!' என்றுகூறி அணைத்துக்கொள்ளும் அவள் இளமைக் காட்சி இவள் கண்முன் தோன்றும்; அத்துணை இளமை உடையாள் கொடிய காட்டுவழியில் கால்கடுக்க நடநதுசெல்லும காட்சியும் அவள் கண்முன் தோன்றும்; கண்கள நீர்நிறையும் இக் கொடுவழியைக் கடந்து செல்லும அத்துணை ஆற்றல் அவள் கால்களுக்கு எவ்வாறு வந்ததோ என்று எண்ணிவருந்துவாள்:

"வளங்கெழு திருநகர்ப் பந்துசிறிது எறியினும்
இளந்துணை ஆயமொடு கழங்குடன் ஆடினும்
'உயங்கின்று அன்னை! என்மெய்' என்று அசைஇ
மயங்குவியர் பொறித்த நுதலள் தண்ணென
முயங்கினள் வதியும் மன்னே, இனியே .....
என், சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
வல்லகொல் செல்லத் தாமே கல்லென.....
மைபடு மாமலை விளங்கிய சுரனே." (அகம் கள)

பொரி கலந்த சுவைமிக்க பால்நிறைந்த பொற்கலத் தைக் கையில் ஏந்திக்கொண்டு அவள்பின் ஓடி ஓடி உண் ணுமாறு வேண்டவும் 'இவ்வளவு பால் வேண்டாம; இது மிகுதி; இவ்வளவையும் என்னால் உண்ணல் இயலாது,'

என மறுத்துவிட்டு ஓடி மறையும் மகள் காட்சி மனக்கண் முன்வந்து நிற்கும். உடனே, நிழலும் நீரும் அற்றுப் போன நீண்டவழியில் விரைந்து நடந்துசென்று, நீர் வேட்கை மிகுந்து சுனைபல ஓடியும் உண்ணுநீர் காணாமல் வருந்தி, இறுதியில் சுனை ஒன்றில் வற்றிக் கலங்கலாகி, வெம்மையுற்றுக்கிடந்த சிறிது நீரைக் கண்டு மகிழ்ந்து, வேட்கை நீங்க விரும்பிக் குடிக்கும் காட்சி வந்துநிற்கும். இத்துணை அறிவும தெளிவும் அவளுக்கு எவ்வாறு வந்தனவோ என்று எண்ணி வருந்துவாள் :

"நிழலான்று அவிந்த நீரில் ஆரிடைக்
கழலோன் காப்பக் கடுகுபு போகி
அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
வெவ்வெங் கலுழி தவ்வெனக் குடிக்கிய
யாங்கு வல்லுநள் கொல்தானே ஏந்திய
செம்பொற் புனைகலத்து அம்பொரிக் கலந்த
பாலும் பலவென உண்ணாள்
கோலமை குறுந்தொடித் தளிரன் னோளே."

(குறுந். ௩௫௬)

மகள் இளமையும், அவள் சென்ற சுரத்தின் கொடுமையும் எண்ணித் துயருற்ற செவிலி, தன் மகளை உடன் கொண்டுபோய அவ் ஆண்மகன், 'கணையோர் அஞ்சாக் கடுங்கண் காளை'யாம் என்றும், 'சுடர்வாய் நெடுவேல்' அவன் கையில் உண்டு என்றும், அதனால், அவன் எதனாலும் தொலைதல் இல்லா விடலையாவன் என்றும், அவன் இன்னனாதலின், தன் மகளைக் காக்குந் திறனுடையான் எனவும் அறிந்ததும் சிறிது ஆறுதல் உற்றாள்.

அந்நிலையில், அறியாப்பருவத்தளாய தன் மகளைக் கொண்டுபோய்விட்டானே, மகள் ஏதிலான் ஒருவன்பின் சென்றுவிட்டாளே எனக் கோபமும், வருத்தமும் கொள்வதை மறந்தாள் ; தங்கள் காதலுறவினையும் கருத்தையும் எமக்கறிவித்தால், அவர்கள் மணத்திற்காம் வழிவகை

களைக் காண்பனே ; மணமுரசு முழங்க, ஊரார் எல்லாம் தங்கள் வீட்டு மணமெனக்கருதி விழாக்கொண்டாட மணம் நிகழும் ; அம் மணவிழாக்கண்டு, யானும் நற்ருயும் மகிழ் வோம் ; இவ்வாறு எல்லாரும் மகிழ மணஞ்செய்து உடன் கொண்டுபோகத் தவறிவிட்டனனே என்றும், சென்றவன், தளரும் இளமைப் பருவத்தாள் இவள் ; இவள் வருந்தா வண்ணம் கோடையின் வெம்மை நீங்கிக், குளிர்ந்தகாலத்தில் கொண்டு சென்றிருத்தல் கூடாதா ! மழை இல்லாமையால் கல்லும் உருகும் கடுமைதோன்றும் கொடிய இக் கோடை யில் கொண்டு சென்றனனே என்றும் வருந்துவாளாயினள் ; மகளிடத்தும், மகள் காதலனிடத்தும் அவள் கொண் டுள்ள அன்புதான் என்னே !

“ என்மகள் பெருமடம் யான்பா ராட்டத்,
தாய்தன் செமமல் கண்டுகடன் இறுப்ப,
முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்
மணனிடை யாகக் கொள்ளான், கல்பகக்
கணமழை துறந்த கான்மயங் கழுவம்
எளிய வாக மாஅயோட்கு எனத்
தணிந்த பருவம் செல்லான்.” (அகம் : ௩௨௭)

அவள் அன்பு அம்மட்டோடு நிற்கவில்லை. ‘என் மகள் மழையும் நிழலும் இல்லா மலைவழியில் செல்கின்றனளே ; அந்தோ ! அவற்றின் கொடுமையினை எங்ஙனம் ஆற்றுவள்? அவள் சென்றவழியில் ஞாயிறு காயாது மறையாதோ? மரங்களெல்லாம் தழைத்து நிழலைத் தாராவோ? மலைவழி களில் மணல் பரவாதா? மழைபெய்து வழி தண்ணெனக் குளிராதா?’ என்று ஏங்கினள் ; ‘அவள் சென்றவழி அவ் வாறே இனிதாக அருள்புரிவாயாக’ என ஆண்டவனை நோக்கி வேண்டினள் :

“ ஞாயிறு காயாது, மரம் நிழல்பட்டு,
மலைமுதல் சிறுநெறி மணல்மிகத் தாஅய்த்
தண்மழை தலையின்ருக ! நம் நீத்துச்

சுடர்வாய் நெடுவேல் காளையொடு
மடமா அரிவை போகிய சுரனே." (குறுந்: 7)

ஊரிலும் சேரியிலும் நின்று இவ்வாறு புலம்பிய செவிலி, மேலும் இவ்வாறு புலம்புவதாற் பயனில்லை; நடப்பன நடந்துவிட்டது; இனிமேல் நிகழக்கடவனவற்றை ஆய்ந்து மேற்கொள்வதே அறிவுடைமையாம் எனத் துணிந்தாள்; புணர்ந்துடன் போகிய மகளையும், அவள் காதலனையும் மீட்டுக்கொணர்ந்து மணஞ்செய்து மகிழ்ந்து மனையறப்படுத்தலே மாண்புடைமையாம் என எண்ணி அவர்களைத் தேடிக்கொணரும் பணியினை மேற்கொண்டாள்; அவர்கள் சென்ற சுரநெறியில் நடக்கலாயினள்; வழியில் வருவாரை எல்லாம் அவர்கள்பற்றி வினவினாள்; தன் ஆற்றாமையால் ஆண்டு உறையும் மான் முதலாம் விலங்குகளிடத்தும், தன் மகள் நிலை எடுத்துக்கூறி, 'அவரைக் கண்டீரோ' எனக் கேட்டுக்கொண்டே சென்றாள்.

எதிரே, தன் மகளை போலும் பெண்ணொருத்தியும், அவள் காதலன்போன்ற ஓர் ஆண்மகனும் கூடி வருவாரைக் கண்டாள்; சேய்மைக்கண் வந்தவழி அவர்கள் தம்மவர்களே என எண்ணி மகிழ்ந்தாள்; ஆனால் அண்மைக்கண் நின்று கண்டவழி அவர்கள், அன்னரல்லர் என அறிந்தாள்; மகிழ்ச்சி மறைந்தது; ஆனால், அவர்கள் இவ்வழியில் வருகின்றனர் ஆதலின், எதிரில தன் மகளைக் கண்டிருப்பர், அவர்கள் வழியாகத் தன் மகள் உள்ள இடமும் நிலையும் உணர்ந்துகொள்ளலாம் என உணர்ந்தாள்; அவ் ஆண்மகனை அணுகினாள். 'மிகச்சேய இடத்தினின்றும் வரும் ஆண்மகனே! நின் அருகே நிற்கும் இவளைக் கண்டவுடனே, நேற்று இச்சுரவழியே ஏதிலான் ஒருவனுடன் புணர்ந்து போகிய என் மகள் நினைவு உண்டாயிற்று; கண்கள நீர் நிறைந்தன; அவள் தநதை ஊர் இது; அவளை ஈன்றெடுத்தவள் யான்; சென்றவள் இவளேபோன்றிருப்பாள்; வழியில் அவளைக் கண்டிருபபீராயின், அவள்பற்றி அறிந்தன எல்லாம் உரைக்கவேண்டுகிறேன்; உங்களை அவள் தந்தை

யின் இவ்வூரில் விருந்தினராக ஏற்று உபசரிப்பேன்; உங்களுக்கும் பெருமபுகழ் உண்டாம்':

"சேயின் வரூஉம் மதவலி!......
முன்னாள் உம்பர்க் கழிந்த என்மகள்
கண்பட நீராழ்ந் தன்றே; தந்தை
தன்னூர் இடவயின் தொழுவேன் .....
வாஅாந்திலங்கு வாலெயிற்றுப், பொலிந்ததார்ச,
சில்வளைப், பல்கூந்தலளே அவளே.
மையணல் எருத்தின், முன்பின், தடக்கை,
வல்வில் அம்பின, எய்யா வண்மகிழ்த்
தந்தை தன்னூர் இதுவே:
ஈன்றேன் யானே; பொலிகநும் பெயரே"

(நற்றிணை - ௧௬௪)

செவிலியின் நிலை இது; இனி, தலைமகளைப் பெற்ற தாயின் நிலையினையுமசிறிது காண்பாம். தன் மகள் செயல எலலாம் செவிலியால் அறிந்த நற்றாயின் துயருக்கு ஓா எல்லை உண்டாமோ; எதிரே மகள் வளர்தத வயலைக் கொடியினைக் கண்டாள; அது நீர்வார்ப்பாரின்றி வாடுவதைதக கண்டாள்; தன் மகள், தன் கைவளை ஒலிக்குமாறு நீர் மொண்டுவந்து, தாய் தன் மகளை அன்போடு நோக்குவாள் போல், அவ்வயலை நோக்கி வேண்டும் நீர் வார்த்து வளர்த்த வகைகளை நினைந்தாள். 'அந்தோ வயலையே! தன்னைப் பேணி வளர்த்த என்னை மறந்து, ஊரும் சேரியும் ஒருங்கு அழ, ஏதிலானோடுகூடி, நாடும் தேயமும் நனி பலகடநது சென்ற வன்கண்மை உடையாளை வளர்த்த தாய்மார் வருந்திக் கலங்குவதேபோல் நீயும் கலங்குகின்றனை; இனி நின்னை நீர் ஊற்றிப் புரப்போர் ஈண்டு யாருளர்?' என்று கூறி அதன் அணித்தே நின்று அழுதாள்.

"தற்புரந் தெடுத்த எற்றுறந்து உள்ளாள்
ஊரும் சேரியும் ஓராங்கு அலர்எழக்

காடும் காவும் அவனொடு துணிந்து
நாடும் தேயமும் நனிபல இறந்த
சிறு வன்கணணிக்கு எர்தேறுவரென
வாடினை வாழியோ வயலை !......
ஆரநீர ஊட்டிப் புரப்போர
யார்மற்றுப் பெறுகுவை அளியை நீயே.'' (அகம் · ௩அ௩)

தலைமகளை வளர்த்த அருமையினை நினைத்தாள் ; தன் ஆயத்தாரோடு சிறிது ஆடிய உடனே, வாடியிருக்கும் அவள் உடல் என உட்கொண்டு பாற்சோறு நிறைந்த கிண்ணத்தைக் கையிலேந்தி அவள் பின்சென்று ஊட்டத் தொடஙகி, அவள் மறுபபதுகண்டு, 'எனக்காக ஒருகவளம்; அப்பாவிற்காக ஒரு கவளம' என்று அன்புரைகளை அள்ளி அள்ளி வீசிக்கொண்டே ஊட்டி வளர்த்த முறைகளை எண்ணினாள் ; அவ்வாறு பிறந்தது முதல் சிறநதன தந்து வளர்த்த என்னை மறந்துபோயினள எனச் சினநது அவளை மறப்பதைவிட்டு என் ஏழை நெஞசம், 'வலிய பாலை வழியில் நடக்கும் ஆற்றல் அவள் கால்களுக்கு உண்டாமோ ?' என எண்ணி வருந்துகின்றதே என் செய்வேன் என்று வருந்தினாள்.

'' பால்பெய வள்ளம் சால்கைபற்றி
'எனபா டுண்டனை யாயின், ஒருகால்
நுந்தைபாடும் உண்' என்று ஊட்டிப்,
பிறந்ததற் கொண்டும சிறந்தவை செய்து யான்
நலம்புனைந்து எடுதத என் பொலந்தொடிக் குறுமகள்
அறனி லாளனொடு இறந்தனள் இனி யென
மறந்தமைந் திராஅ நெஞ்சம் நோவேன்.'' (அகம: உகக)

மகளைப்பெற்ற தன் வருத்தத்தினை எண்ணியகாலை, தன் மகளைக் கொண்டுசெல்லும தாயின் நினைப்பு அவளுக்கு உண்டாயிற்று ; என் துயரிற்குக் காரணம், என் மகள் பிரிவு ; என் மகள் பிரிவிற்குக் காரணம் அவள் தன் காத லன்பால்கொண்ட அன்பு ; இவ்வாறு என் மகள் பிரிவிற்கு இவன் காரணமாயினனே என எண்ணியவுடனே தலைவன்

மாட்டு மாறாச் சினம் பிறந்தது; அவனைப் பழிக்கத் துணிந்தது அவள் நா; ஆனால் அவனைப் பழிப்பதால் உண்டாகும் ஏதம் தன் மகளையும் சாருமே என எண்ணினாள்; உடனே அவனைப் பழிப்பதற்குமாறாக, இத்தகைய ஆண்மகனைப் பெற்றாளே அவளைப் பழிக்கவேண்டும் என்று எண்ணிற்று அவள் உள்ளம்; உடனே மகளை இழந்து வருந்தும் என்னைப்போன்றே, வன்கண்காளையை ஈன்ற தாயும் பெருந் துன்புறுவாளாக என்று பழித்தாள்.

"எம் போல்
பெருவிதுப்புறுக மாதோ! எம்மில்
பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டுடன் போக வலித்த
வன்கட் காளையை ஈன்ற தாயே." (நற். ௨௬௩)

சென்ற தன்மகளை, அவள் காதற் கொழுநனோடு அழைத்துவந்து மணமுடித்து மகிழ்ந்து காணவிரும்புகின்றாள்; அந்நிலையில் ஒருத்திவந்து, தன் மகனும், நின் மகளும், தன் மனைக்கே வருவர் என்று கொண்டு, தலைமகனைப் பெற்றதாய், வீட்டுச் சுவரில் செம்மண் பூசி, முன்னிடத்தே மணலைப்பரப்பி, மாலைகளைத் தொங்கவிட்டு வரவேற்பிற்கானவற்றை மகிழ்ந்து மேற்கொண்டுளாள் என்று கூறினாள்; ஆனால் தலைமகள் நற்றாய்க்கு, அவர்களைத் தன் வீட்டிலேயே முதலில் வரவேற்க வேண்டும் என்ற விருப்பம்; ஆனால், மகளை உடன் கொண்டுசென்ற அவ் வாண்தகை, அவளை முதலில் தன் வீட்டிற்குக் கொண்டு செல்வனோ? அன்றித் தலைமகள் வீட்டிற்கு அழைத்துவருவனோ? அதை யாரும் அறியார்; அறிந்து கொள்ளத் துடித்தது நற்றாய் உள்ளம்; ஆவது அறிந்து கூறவல்ல வேலனை அழைத்தாள்; தலைவன் கருத்து யாதாம் என்பதை அறிந்து கூறுமாறு அவனை வேண்டினாள். நற்றாயின் நிலை இது.

"அருஞ்சுரம் இறந்த என் பெருந் தோட்குறுமகள்
திருந்துவேல் விடலையொடு வரும் எனத் தாயே

புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி
மனைமணல் அடுத்து மாலை நாற்றி
உவந்தினிது அயரும் என்ப ;......
ஆகுவதறியும் முதுவாய் வேல !
கூறுகமாதோ நின் கழங்கின் திட்டம் ......
எம்மனை முந்துறத் தருமோ ?
தன்மனை உய்க்குமோ ? யாதவன் குறிப்பே.?"

(அகம் : கக௫)

இவ்வாறு உடன்போக்கினை விளக்க மேற்கொண்டு, அக்காலப் பெண்மணிகளின் உள்ளத்தின் உயர்வைப் புலவர் கயமனார் படம் பிடித்துக்காட்டிய திறங்கண்டு மகிழ்வோமாக.

## ச. கல்பொரு சிறுநுரையார்

புதுப்புனல்வரும் ஆற்றின் அழகிய காட்சியைக் கண்டு மக்கள் உள்ளம் மகிழ்ச்சியில் துள்ளுவதைக் காண்கிறோம்; உள்ளுறுப்புக்களின் இயல்பு காலவேறுபாட்டால் மாறுபாடுறுவதில்லை; ஆற்றில் வெள்ளம் வரும காட்சியினை, இன்றே போல் அன்றும் மக்கள் கண்டு மகிழ்ந்தனர்; மகிழ்வதோடு நில்லாது, அவ் வாறுகளில் புதுப்புனல் விழாக் கொண்டாடியும மகிழ்ந்தனா; இயற்கைக் காட்சிகளோடும், அவை தரும் இன்பத்தோடும இரண்டறக் கலக்கும இயல்பினராய பழந்தமிழ்ப் புலவர்கள், அத்தகைய புனல்விழாவினைக் கண்டு மகிழ்ந்தனர் எனல் மிகை. பண்டைக்காலத்தே நடைபெற்ற இத்தகைய ஒரு விழாவைக் காணப் புலவர் ஒருவர் சென்றிருந்தார்; ஆற்றில் நீா பெருகிவரும் வகையினைக் கண்டு களித்துக்கொண்டிருந்தாா; ஆற்றுநீர் தான் ஓடிவரும வழியில் கிடந்த பொருள்களை எல்லாம வாரிக்கொண்டு வருங்காட்சியைக் கண்டிருந்த புலவர் கண்கள் ஆற்றின் கரைப்பக்கம் சென்றன; ஆங்கே, அவவாற்று நீர் கொணர்ந்த மலை போல் பருத்த நுரைத்திரள் ஒன்றைக் கண்டார்; அஃது, ஆற்றுநீர் அலைக்குந்தொறும் அலைக்குந்தொறும், ஆற்றின் கரைக்கண் அமைந்த கல்மீது மோதிமோதி மீள்வதையும், அஃது அவ்வாறு மோதுந்தொறும் மோதுந்தொறும், அதன் அளவு சிறிது சிறிதாகக் குறைவதையும் கண்டார்; கண்டுகொண்டிருக்கும்போதே சிறிது நேரத்திற்குமுன் மலைபோல் பருத்திருந்த அந் நுரைத்திரள் அடியோடு அழிந்து இருந்த இடமும் தெரியாவாறு மறைந்துவிட்டது. நீா மேட்டுநிலத்தினின்றும் பள்ளம நோக்கிப் பாயுழி, அதன்கண் சிறியவும் பெரியவுமாய நீர்க்குமிழிகள் பல தோன்றும்; அந்நீர்க் குமிழிகள் பலவும் ஒன்றுதிரண்டு ஓர் உருப்பெற்றவழி, அவை நுரை என்ற பெயர் பெறும். நீர்க்குமிழிகள் தோன்றிய உடனே, தோன்றிய இடத்திலேயே, அழிப்பார் இல்லாமலே அழியும் இயல்பின; நுரைத்திரளில், நீர்க்குமிழிகள் பலகூடி இணைந்து

நின்றமையால் சிறிதுநேரம் அழியாது இருந்தன; நுரை கல்லில் மோதியவழி, குமிழிகள் சிதறித் தனிநிலை உற்று விடும். ஆதலின், அந்நுரைத்திரள் உருத்தெரியாமல் அழியலாயிற்று.

ஆற்றின் இத்தகு காட்சிகளைக் கண்டு வீடுதிரும்பிய புலவர், தலைமகன் பிரிவுத்துயரால் வருந்தும் தன்னை நோக்கி ஆற்றியிருக்க வேண்டும் என அறிவுரை கூறும் தன் தோழிமீது சினம்கொண்ட தலைமகள் ஒருத்தி உரைக்கும் உரை அமைந்த அகத்திணைச் செய்யுள் ஒன்றைப் பாட எண்ணினார், எண்ணினார் கண்முன் அவர் கண்ட ஆறும், ஆற்றில் ஓடிவரும் பெருநீரும், அந்நீர் அடித்துக் கொணரும் நுரைத்திரளும், அந் நுரைத்திரள்கள், ஆற்றின்கரையில் மோதி மோதி அழிந்து போவதும் வந்து நின்றன; அவர் பாடிய பாட்டினுள் அவையும் இடம் பெற்றுவிட்டன.

கல்வி, பொருள், புகழ் இவற்றுள் ஒன்று குறித்துக் கணவன் வேறுநாடு சென்றுவிட்டான்; சென்றகாலை, 'இன்னகாலத்தே மீண்டு வருவேன்', என அவன் குறித்துச் சென்ற காலமும் கடந்துவிட்டது, ஆனால் அவன் வந்திலன். அவன் மனைவியோ அவனைப் பிரிந்து வாழ்ந்தறியாப் பேரன்பினளாவள்; அவள் அவனைக் காணமாட்டாது கடுந்துயர் உற்றாள்; அவள் உள்ளத்துயர், உடல் உறுப்புக்கள் வழியாக உருவுகாட்டத் தொடங்கி விட்டது; நாட்கள் செல்லச் செல்ல அவள் உடல்நலம் சிறிதுசிறிதாகக் குன்றத் தொடங்கிவிட்டது; இந்நிலை மேலும் நீடித்தால் அவள் இறந்துபடுவது உறுதி; இந் நிலையினை அவள் உயிர்த்தோழி உணர்ந்தாள்; 'இவள் இவ்வாறு அவன் பிரிவையே எண்ணி எண்ணித் துயர் உறுவளாயின், இவள் உடல்நலம் கெடுமே; உடல்நலக்கேடு உயிருக்கு நன்றன்றே', என்ற கவலை அவளுக்கும் உண்டாயிற்று; தலைமகளிடம் சென்றாள்; 'அவர் பிரிந்து விட்டமையால் உண்டாம்துயர் எத்துணைப் பெரிதாயினும்

அதுகுறித்து வருந்தி அழுதுகொண்டிருப்பது அழகன்று; ஆற்றியிருப்பதே அறிவுடையோர்க்கு அறமாம்' என்ற அறம் நிறைந்த அறிவுரை கூறினாள்.

தலைமகள் அது கேட்டாள்; "இவள் நம் உயிர்த் தோழி; நம் உள்ளம் உணர்ந்தவள்; காதலின் ஆற்றலையும், காதல் இயல்பையும் உணராதவள் அன்று; கணவரைப் பிரிந்த பெண்டிர்படுங் கொடுந்துயரை உணர்ந்தவள்; இவளே இவ்வாறு கூறுகின்றனளே" என்று எண்ணினாள். அவள்மீது பெருஞ்சினம் பிறந்தது; பிறரை நோக்கிக் கூறுவாள்போல், தோழியின் உள்ளத்தே படுமாறு, காமநோயைப் பொறுத்துக்கொள்ள வேண்டும், பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று சிலர் கூறுகின்றனர்; அவ்வாறு கூறுகின்றவர்கள் ஒன்று காமம் என்பது என்ன என்றே அறியாப் பேதையராதல் வேண்டும்; நாணையும், நல்லாண்மையையும் அழிக்கவல்ல ஆற்றலுடையது காமம்; கணவரைப் பிரிந்து தனித்துறையும் மகளிரைத் தெறூஉம் இயல்புடையது காமம் என்ற உண்மையினை உணராதவராதல் வேண்டும்; அல்லது, அத்தகைய ஆற்றல்வாய்ந்த காமநோயினைப் பொறுத்துக் கொள்ளவல்ல பேராற்றலைத் தாம் பெற்றவராதல் வேண்டும்; அதனால் தான், 'காதலென்பது என்? பூதமோ? பேயோ? வெருட்டினால் நாய்போல் ஓடும்; வெருவில் துரத்தும் குரைக்கும் தொடரும் வெகுதொலை' என்றெல்லாம் உரைக்க முன்வந்துவிடுகின்றனர்; அத்துணை ஆற்றல் எனக்கில்லை; காதலரைச் சிறிதுபோது காணாதுவிடினும் உள்ளம் உறுதுயர் கொண்டுவிடுகிறது; உள்ளத்துயருக்கேற்ப உடல் நலனும் சிறிது சிறிதாகக் குன்றத் தொடங்கி விடுகிறது; யான் என் செய்வேன்; யாரொடு நோவேன்; யார்க்கெடுத்துரைப்பேன்" என்று கூறுவாளாயினள்

இப்பொருள் அமைந்த பாடலைப் பாடிய புலவர், காதலரைக் காணமாட்டாக் கடுந்துயருடையாளொடு தலைமகளின் உடல்நலம் சிறிதுசிறிதாகக் கெட்டு ஒழிவதற்குப் பெருநீரில் மிதந்துவந்த சிறுநுரைத்திரள் ஒன்று,

கரைக்கண் இருந்த கல்லின்மீது மோதி மோதிச் சிறிது சிறிதாக அழிந்துபோவதை உவமைகாட்டிய சிறப்பால் **கல்பொரு சிறுநுரையார்** என்ற உயர்பேர் பெயர் பெற்றுப் பாராட்டப் படுவாராயினர்.

> "காமம் தாஙகுமதி என்போர்தாம் அஃது
> அறியலர் கொல்லோ? அனைமதுகையர் கொல்;
> யாம் எம்காதலர்க் காணேமாயின்,
> செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
> **கல்பொரு சிறுநுரை** போல
> மெல்ல மெல்ல இல்லாகுதுமே." (குறுந்: உ௯0)



## ரு. கவைமகனார்

தலைவன் ஒருவனும் தலைவி ஒருத்தியும் ஒப்ப உயர்ந்த காதல் உடையராய்க் களவொழுக்கம் மேற்கொண்டிருந்தனர்; அவர்கள் தம் களவொழுக்கத்திற்கு உறுதுணை புரிந்துவந்தாள் தலைமகளின் உயிர்த்தோழி. தலைமகளின் பருவம் அறிந்து காக்கவேண்டும் பண்பாடுணர்ந்த தாய், தலைமகளை வீட்டைவிட்டு வெளியேறுவதைத் தடைசெய்து விட்டாள்; இதனால், தலைமகளைத் தாம் விரும்பிய இடத்தில் விரும்பிய காலத்தில் கண்டு மகிழ்தல் தலைமகனுக்கு இயலாது போயிற்று. இந்நிலையினைத் தோழி தலைமகனுக்கு உணர்த்தி, 'தலைவி இனி நினக்கு அரியள்' என்று கூறினாள். தலைவன், தலைவி மாட்டுக்கொண்டுள்ள அன்பு அளவிறந்தது; அவளைக் காணாது ஒருநாள் வாழ்தலும் அவனால் இயலாது; ஆதலின், அவன் தலைவியை நோக்கி, 'அவ்வாறாயின், இரவிலே எவரும் அறியாவண்ணம் உங்கள் வீட்டிற்கு வந்து செல்வதை மேற்கொள்வேன்' என்று கூறினான்.

தலைவன், தலைவி உறையும் ஊரினன் அல்லன்; வேற்றூர் வாழ்வோன்; இரண்டூர்க்கும் இடைப்பட்டவழி ஏதமில்லாப் பெருவழியன்று; கழிபல கடந்தே வருதல் வேண்டும்; அக்கழிகளோ என்றும் வற்றுதல் அறியா நீர்வளம் உடையன; ஆழம் மிக்குக் கருநிறம் பெற்ற கழிகள் அவை; முதலைகள் பெருங்கூட்டமாய் வாழும் அவற்றில்; முதலைகளுள் ஆண் முதலைகள் ஆற்றலிற் சிறந்தன; தம் வளைந்த கால்களைக் கொண்டு வழிவருவாரைக் கவ்வி ஈர்த்துக் கொல்லும் இயல்புடையன; முதலைகளின் இக்கொடுமை அறிந்து அவ்வழியே செல்ல எவரும் அஞ்சுவர்; இத்தகைய கொடுமைமிக்க வழியிலே அவன் வருதல் வேண்டும்; இதை உணர்வாள் தோழி. "தலைவன், கொடுமை மிக்க வழியிலே, இரவிலே வரத் துணிகின்றான்; அவன் தலைவி மாட்டுக் கொண்டுள்ள பேரன்பே இதற்குக் காரணம்; இத்தகைய அவன் அன்பை

மதியாது, அதற்கு ஊறுசெய்து 'வாராதே' என அவனை விலக்குதல் கூடாது" என்றும் உணர்ந்தாள்; ஆனால் தடைசெய்யாது விடினோ, அவன் இரவில் வருதலை வழக்கமாகக் கொள்வன்; தலைவன் பேராற்றல் வாய்ந்தவனே எனினும், யானைக்கும் அடிசறுக்கும் என்ப; ஆதலின், தவறி அவனுக்கு இடர் உண்டாயினும் உண்டாம். எனவே, அவன் இரவில் வருதலைத் தலைமகள் விரும்புவாள் அல்லள்; அவன் வரும் வழியின் ஏதம்கண்டு வருந்துவாள் ஆகவே, தலைவன் விரும்புமாறு அவன் இரவு வருகைக்கு வரவேற்பளித்தல் கூடாது எனத் துணிந்தாள்.

துணிந்த தோழி தலைமகனை நோக்கி, "தலைவ! நீயோ, நின் அன்புடைமையால் ஆற்றின் அல்லல் கண்டும் அஞ்சாது வரத்துணிகின்றனை; அத்தகைய அன்புடைய நின்னை 'வாரற்க' என்று கூற என் உளம் அஞ்சுகிறது; ஆனால், அவளோ, நின் அன்பின் ஆழத்தையோ, ஆற்றலின் பெருமையினையோ அறியாளாய், கொடியவழியில் இரவில் வருதலை எண்ணி எண்ணி வருந்துகிறாள்.

"அவள் வருத்தம் மிகுமாறு 'வருக' என்று கூறவும் என் உளம் அஞ்சுகிறது; 'வாரற்க' என்று கூறின் நின் உள்ளம் வருந்துமே என்றும் அஞ்சுகின்றேன்; 'வருக' என்று கூறினால் அவள் உள்ளம வருந்துவது கண்டும் அஞ்சுகின்றேன்: என் செய்வதென்று அறியாது விழிக்கின்றேன்; நின் அன்பின் பெருமையை, நின் ஆற்றலின் சிறப்பை அவளுக்கு அறிவுறுத்தி, நின் வருகையினை விரும்பியேற்குமாறு செய்யலாமெனிலோ, அவள் நீ வரும் வழி ஏதம் கண்டுகொண்ட அச்சம் தவிர வேறு எதையும் அறியும் அறிவுடையளாய்த் தோன்றவில்லை.

"அறிவற்றநிலையில் உள்ள அவளைக் காரணங்காட்டித் தெளிவித்தல் இயலாது; காரண காரியங்களை அறிந்து தெளியும் அறிவு இப்போது அவள்பால் இல்லை; ஆகவே 'வருக' என நினக்கு இசைந்து, அதை ஏற்றுக்கொள்ளுமாறு அவளிடம் கூறுதல் இப்போது இயலாது.

"அவளைக் காணமாட்டாமையால் நினக்குமட்டுமே வருத்தம் உண்டு என்று எண்ணற்க. நின்னைக் காணாது வருந்தும் வருத்தம் அவளுக்கும் உண்டு; நின்னைக் காணாது நெடிதுநாள் வாழ்தல் அவளாலும் இயலாது; அவள் நின் வருகையினை விரும்பாமைக்குக் காரணம், நின்பால் அன்பில்லாமையால் அன்று; வரும் வழியின் கொடுமைகண்டு அஞ்சியே அவள், 'வாரற்க' எனக் கூறுகின்றாள்.

"நின்னால் அன்புசெய்யப்பட்டாளின் வருத்தத்திற்கு நின் செயலே காரணமாக உளது; நின்னால் அன்பு செய்யப்பட்டாள் வருந்த நடந்துகொள்வது நினக்கு நன்றன்று; அது நின் அன்புடைமைக்கு அழகாகாது; ஆகவே, அவள் வருத்தம் கண்டாவது நின் வருகையினைக் கைவிடுவது நன்று; 'பகலிலும் வருதல் இயலாது; இரவிலும் வருதல் கூடாது என்கின்றனை; அவ்வாறாயின் அவளைக் காணல் இயலாது போகுமே; அவளைக் காணாமல் எங்ஙனம் ஆற்றி வாழ்வேன்' என்று ஏக்கம் கொள்ளற்க. இரவில் வருதலை விடுத்து விரைந்து வரைந்துகொள்வதற்கான வழிவகைகளை எண்ணித்துணிக; வரைந்துகொண்டால், இருவர் வருத்தமும் ஒருங்கே ஒழியும்; ஒன்றிய அன்பினராய் ஒருங்கிருந்து வாழலாம்" என்றுகூறி, விரைவில் வரைந்து கொள்வதன்றி வேறுவழியில்லை என்ற எண்ணம் தலைமகன் உள்ளத்தில் உறுதியாகத் தோன்றுமாறு செய்து, இருவர் துயரும் ஒழிய, இருவரும் இடையீடில்லா இன்பவாழ்வில் வாழ்வதற்கான வழிவகைகளை வகுத்துவிட்டாள்.

தலைமகன், அன்புடையன், ஆற்றலுடையன் என்பதை ஏற்றுக்கொண்டு, அதேநிலையில், 'நின் அன்புடைமையால் அறிவிழந்துவிட்டாள் தலைவி' என்று கூறும் முகத்தான், அவள் அன்பின் மிகுதியினையும் எடுத்துக் காட்டி, 'அறிவற்றவள் அவள் ஆகவே, அவளுக்கு ஏற்பன கூறமுடியவில்லை; ஆகவேதான் நினக்குக் கூறுகின்றேன். 'வாரற்க' என்று கூறுவாள் போல் கூறி, அவன் ஆசையை

அடக்கி, அரியவழிகளையும் அஞ்சாது கடக்கும் ஆற்றலும் துணிவும் உடைய ஆண்மகளுகிய அவனை வெற்றிகொண்டு, அவர்கள் இருவரும் அறவாழ்வு வாழத் துணைபுரியும் தோழியின் அறிவுடைமையினையும், கடமை யுணர்ச்சியினையும் கண்டு மகிழ்க :

"கொடுங்கால் முதலைக் கோள்வல் ஏற்றை
வழிவழக்கு அறுக்கும கானலம் பெருந்துறை
இனமீன் இருங்கழி நீந்தி, நீ நின்
நயனுடைமையின் வருதி, இவள்தன்
மடனுடைமையின் உயங்கும்; யான் அது
கவை மக நஞ்சுண் டாஅங்கு
அஞ்சுவல் பெரும! என் நெஞ்சத்தானே."

(குறுந் : நஉச.)

இப்பாட்டில், தலைவன், தலைவி இருவரின் உள்ளத் துடிப்பினையும் உணர்ந்துள்ளமையால், எதுவும் செய்ய மாட்டாது, வருந்தும் தன் நிலைக்கு, இரட்டைக் குழந்தைகளை யுடையாள் ஒருதாய், அவ்விரு குழந்தைகளும் ஏக காலத்தில் நஞ்சுடைப் பொருளை உண்டக்கால், இந்தக் குழந்தையைக் கவனிப்பதா ? அந்தக் குழந்தையைக் கவனிப்பதா ? நஞ்சுதீர் மருந்தை இந்தக் குழந்தைக்கு முதலில் அளிப்பதா ? அந்தக் குழந்தைக்கு முதலில் அளிப்பதா ? என அறியாது துடிக்கும் தாயர்நிலையினை உவமை காட்டித் தன் உள்ளத்துடிப்பைத் தோழி ஒருவாறு உணர்த்தியுள்ளாள் ; இருவரில் ஒருவர்பாற் சென்ற உள்ளம் இன்றி, நடுநின்ற நல்நெஞ்சினராய் கடமையுணர்ச்சி கொண்டு வாழும் ஒவ்வொருவர் உள்ளத்திலும் இத்தகைய போராட்டம் உருப்பெறுதல் உறுதி. இத்தகைய உள்ளப் போராட்டம் உடையவரே, உண்மையில் உயர்வுடைய மக்களாகவும் மதிக்கப் பெறுவர்.

இவ்வாறு இருவர் நிலையினையும் உணர்ந்து, இருவர்க்கும் ஏற்றதொருவழியைக் காணல் எத்துணை அரிய செயல் என்பதை, மாறுபட்டார் இருவர், ஒருவர் உள்ளத்தை

ஒருவர் உணர்ந்து, இருமையில் ஒருமையுண்டு என உணர வைக்கும் செயல், பகைத்துப பெரும்படைகொண்டு களத்தே நிற்கும் காவலர் இருவரிடையேயும் மாறி மாறிச் சென்று, அவர் மன இருள் போக்கி மாறுபாட்டை நீக்க முயலும் அறிவுடையோர் செயல்போல் அருமையுடைய தாம்.

"இகல்மீக் கடவும் இருபெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல
இருபேர் அச்சமோடு யானும் ஆற்றலேன்"
(குறிஞ்சிப் பாட்டு· உ௭ - கூ)

என்றுகூறி விளக்குகிறாள் மற்றொரு தோழி.

இத்தகைய அறிவுடைய தோழியின் உள்ளத் துடிப்பினை உள்ளவாறு உணர்த்த, தான்பெற்ற இரட்டைப் பிள்ளைகள் ஒரேகாலத்தில் நஞ்சுண்டமை அறிந்து, அது தீர்க்கும் வழிவகை காணத் துடிக்கும் தாயின் உள்ளத் துடிப்பை உவமை கொண்ட அருமை அறிந்து, அப் பாடலைப் பாடிய புலவர்க்குக் கவைமகனர் என அவ்வுவமையினையே பெயராக ஆக்கி மகிழ்ந்த அறிவுடையோர்க்கு அறிவுடை உலகம் தலைவணங்கி வாழ்த்து அளிக்குமாக.



## ௬௰. காலெறி கடிகையார்

மணந்த மனைவியோடிருந்து மகிழ்ந்து வாழும் தலைமகன் ஒருவன், ஈந்து இசைபட வாழும பெருவாழ்வு வாழ எண்ணினான்; அதற்குப் பெரும்பொருள் தேவை என்பதையும் உணர்நதான; இயல்பாகவே அவன் பெரும் பொருள் உடையவன்; எனினும், தன் வாழ்க்கைக்காம் பொருளைத் தானே தேடிப் பெறல்வேண்டும் என்று எண்ணும் உயர் பேருள்ளமுடையவன்.

> "தெண்ணீர அடுபுற்கை யாயினும் தாள் தந்தது
> உண்ணலின் ஊங்கினியது இல"
>
> (திருக்குறள் : ௧௦௬௫.)

என்ற குறளுரை உணர்ந்தவன்; ஆதலின் பொருள்தேடிப் பிறநாடு செல்ல எண்ணினான்; அநநிலையில், அவன் மனைவியின் பேரழகும், அவள் தரும பேரின்பமும அவன் உள்ளத்தே உருபெற்று நிற்கலாயின, வளையணிந்து வனப்பில் மிகுந்து இளமை எழில் தோன்ற நிற்கும அவள் அழகு அவன் கண்ணிற்கு விருந்தாய் அமைந்தது; அவ்வழகு, அவள் தரும் இன்பத்தையும் நினைப்பூட்டிற்று; அவள் வாயில் ஊறும் உமிழ்நீர் தரும இன்பத்தை எண்ணினான்; பொருள்கருதிப் பிறநாடு சென்றுவிட்டால் இவ்வின்பத்தை இழக்கவேண்டி வருமே என்று ஏங்கினான்; பொருள்பெற்று மீண்டுவந்து இல்வாழ்க்கையின் பயன் துய்க்கலாம் எனில் அஃது இயலாது; இளமை கழிந்த பின்னா இருந்து துய்க்கும இன்பம் இன்பமாகாது; இளமையிற் சிறந்த வளமையும் இல்லை; இளமை கழிந்த பின்றை வளமை காமம் தருதலும இன்று; இளமை நெடிதுநாள் நிற்பதும் இல்லை; இன்பம் துய்க்கவேண்டும் என்ற எண்ணம், இளமை தீர்ந்த பின்னர் எழுலும் அரிது; மேலும் இளமை கழிந்தபின்னர் இன்ப உணர்வினராதலும் அத்துணைச் சிறப்புடையதாகாது; ஆனால் இன்ப நுகர்ச்சிக்கு இளமைபோல், பொருளும் இன்றியமையாததாம்.

ஆதலின், அதைப் பெற்றுவந்த பின்னரே இன்பந் துய்க்கவேண்டும் என்று எண்ணுவோம் எனில், அதுவும் இயலாது; ஒருவர் வாழ்நாள் எப்போது உலந்துபோம என்பதை எவரும் அறியார்; இன்று இருப்போர் நாளை இருப்பர் என எண்ணுவதற்கில்லை; வாழும் நாள் கழிந் தாரை, அந்நாள் கழிந்தபின்னர் ஒரு நாழிகையும் வாழ விடான் கூற்றுவன்; பொருள் கருதிப் பிரிந்து சென்றவர் உயிரோடு மீள்வர் என்பதற்கோ, வந்து வீட்டுள் இருந் தாரை உயிரோடு காண்பர் என்பதற்கோ உறுதியில்லை; நிலையற்றது இவ்வாழ்வு; நிலையற்ற இவ் வாழ்க்கையினைப் பெற்றோர், கிடைத்தற்கரிய, கழிந்தால் மீண்டும் பெறலாகா இளமைக்காலத்திலேயே நுகரவேண்டிய இன்பங்களை நுகர்தல் வேண்டும் என்றே அறிவுடையோர் அனைவரும் எண்ணுவர்; உலகமே ஒன்று திரண்டு வந்தாலொத்த பெரும் பொருளே பெறுவதாயினும், அப்பொருள் கருதி அவ்விளமை இன்பம் அழியப் பிரிய எண்ணார்; இவ்வாறெல் லாம், அவன் உள்ளம், இளமை, இன்பம், வாழ்நாள், பொருள் இவற்றின் இயல்புகளை எண்ணி எண்ணி, எதை யும் துணியமாட்டாது இரங்குவதாயிற்று.

தன்னால் காதலிக்கப்பட்டாள் ஒருத்தியின் வாய்நீர், காதலனுக்குச் சாவா மருந்தாம் அமிழ்தேபோல் இன்பம் தரும் என்ப; அந்நீரின் இன்பம், பாலும் தேனும் கலந்த கலவை நீரின் இன்பம் போன்றது என்றெல்லாம் காதலன் பாராட்டுவன்.

"பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர்.'

(திருக்குறள். ககஉக.)

இப்போது நாம் கூறும் தலைமகன், தன் மனைவியின் வாய் ஊறும் நீரின் சுவைக்கு நிகரான சுவையுடைப் பொருளாக வேறு ஒரு பொருளைக் கூறுகின்றான்.

இனிய சுவையுள்ள பொருள்களுள் தலையாயது கரும்பு; மிக மிக இனியாரை உருவகமாக 'என் கரும்பே!'

என அழைப்பதும் காண்க. இக்கரும்பு புலவர்களின் உள்ளத்திற்கும் சுவை தந்துளது; அவர்கள் தாம் பாடிய பாடல்களில் வேண்டியாங்கு எடுத்து ஆண்டு போற்றுவர். நண்பர்கள் இயல்பை விளக்கப் புகுந்த புலவர் ஒருவர், நல்லோர் நட்பு கரும்பை நுனியில் தொடங்கித் தின்று கொண்டே சென்றால், முதலிற் சுவை குறைந்து, வரவர மிகுவதேபோல், பழகப் பழக இன்பம் மிகுந்துகொண்டே செல்லும். தீயோர் நட்பு, கரும்பை அடியிற்றொடங்கித் தின்றுகொண்டே சென்றால், தொடக்கத்தில் பேரினிப்புடையதாய் வரவர இனிமை குறைந்து போவதேபோல், தொடக்கத்தில் நன்றாய் இறுதியில் தீதாய் முடியும் என்று கூறியுள்ளார்.

இவ்வாறு, கரும்பில் அதன் அடிப்பகுதியே மிக்க சுவை உடையது என அறிந்த நம் தலைமகன், தன் மனைவியின் வாயில் ஊறும் நீருக்கு, கரும்பின் அடிப்பகுதியின் மிக்க சுவையினை உவமை கூறுகின்றான்.

இருங்கண் ஞாலத்து ஈண்டு பயப் பெருவளம்
ஒருங்குடன் இயைவதாயினும், கரும்பின்
காலெறி கடிகைக் கண்ணயின்றன்ன
வாலெயிறு ஊறிய வசையில் தீநீர்,
கோலமை குறுந்தொடிக் குறுமகள் ஒழிய,
ஆள்வினை மருங்கிற் பிரியார்; நாளும்
உறன்முறை மரபின் கூற்றத்து
அறனில் கோணற் கறிந்திசி னோரே. (குறுந். உ௬எ.)

இவ்வாறு தலைமகளின் வாயில் ஊறும் நீருக்குக் கரும்பின் அடிப்பகுதியில் வெட்டிய துண்டத்தினின்றும் ஊறும் சாற்றினை உவமைகாட்டிய சிறப்பால், அக்கால மக்கள், இப்பாட்டைப் பாடிய புலவரின் இயற்பெயரை மறந்து "**காலெறி கடிகையார்**" என அவ்வுவமையினையே அவருக்குப் பெயராக வைத்துப் பாராட்டுவாராயினர்.

## எ. குப்பைக் கோழியார்

பெண்மைக்குரிய குணங்களால் நிறைந்த பெண்ணொருத்தி, பெற்றோரும் உற்றோரும் அறியாமல் தக்கான் ஓர் ஆண்மகனோடு காதலொழுக்கம் மேற்கொண்டு மகிழ்ந்து வாழ்ந்திருந்தாள். அவள் காதல்வாழ்விற்கு ஒரு தடை வந்துசேர்ந்தது; மகள் மணப்பருவம் எய்திய மங்கையாயது அறிந்த தாய், அவள், இனியும் விரும்பி யாங்கு எங்கும் செல்லாவாறு இற்செறித்துவிட்டாள். இதனால், தான் விரும்பிய அவ் ஆண்மகனோடு பண்டே போல, பழகுதல் தலைவிக்கு இயலாதாயிற்று; ஆனால், அவன்பால் அவள் கொண்டுள்ள காதலோ பெரிது; அவனைக் காணாது ஒருபோது வாழ்தலும் அவளால் இயலாது, இப்போது அவனைக் காணமாட்டா நிலைவந்துற்றது; அதனால் உண்டான அவள் காதல்நோய் அவளைப் பெரிதும் வருத்துவதாயிற்று; காதல்நோய் பிறர்க்குணர்த்தலாம் பெற்றியுடையதன்று; ஆகவே, அந்நோயைப் புறத்தார்க்குப் புலனாகா வண்ணம் உள்ளடக்கியே வந்தாள்; அதனால் அது அவள் உள்ளுறுப்புக்களை அழிக்கத் தொடங்கி விட்டது; எலும்புகளையும் உருக்கத் தொடங்கி விட்டது; காதல்நோய் பெருகிய காலத்தும், தம் காதலைப் பிறர் உணருமாறு செய்து தலைவன்பால் தாமே சேர்வதைப் பெண்மையுணர்ச்சி தடைசெய்யும்.

> "உடம்பும் உயிரும் வாடியக் காலும்
> என்னுற் றனகொல் இவையெனின் அல்லது
> கிழவோற் சேர்தல் கிழத்திக்கு இல்லை"
>
> (தொல். பொருள். க.)

என்பர் தொல்காப்பியனாரும் ஆகவே, தலைமகன் உறையும் இடம் அடைந்து இன்புறுதல் அவளுக்கு அரிதாயிற்று; அவள் செயலற்றவளானாள்.

இவள் நிலை இஃதெனின், அவனாவது, ஈண்டு வந்து இவள் துயர் போக்கும் ஆற்றல் உடையனோ என்றால்,

இல்லை; அத்துணை எளிதில் அவன் ஈண்டுவரல் இயலாது; ஆகவே அவனும் செயலற்றவனாயினான்.

இந்நிலையில், இருவர் துயரையும் போக்கித் துணைபுரிவாள் தலைமகள் தோழி ஒருத்தியே; இருவர்க்கும் இடையில் நிலவும உறவு முறையினைப் பெற்றோர்க்கும் பிறர்க்கும் உணர்த்தி, மணத்திற்கு ஆவனசெய்தல் அவள் ஒருத்தியினாலேயே இயலும்; ஆனால், அவள் அதை மேற்கொண்டாள் அல்லள்; தன்நிலையினைப பெற்றோர்க்கு உணர்த்தி, மணத்திற்கு ஆவனபுரிநது அறத்தொடு நிற்குமாறு தோழியை வேண்டத தலைவி விருமபுகிறாள். "என் நிலையினைத் தாய்க்கு அறிவிப்பாயாக" என வெளிப்படக் கூறல் அவள் பெண்மைக்குச் சால்பன்று; தன் பெண்மையும் கெடாவாறு, தன் எண்ணமும் நிறைவேறுமாறு தன் கருத்தை வெளியிட விரும்பினாள்; தான் கூறுவனவற்றைக் கேட்கும் அளவில் தோழி வநது நிற்கும் காலம் நோக்கி, எங்கோ நோக்கிக் கூறுவாளாயினாள்.

"அவர்பால் நான்கொண்டுள்ள காதலோ பெரிது; ஆனால், அவரைக் காண இயலாநிலை இப்போது வந்துற்றது; அதனால் உண்டாய நோய் என் உடலையும் அழிக்கத் தொடங்கிவிட்டது; என் உடலே அழிவதாயினும், அவரைச் சென்று அடைதல் என்னால் இயலாது; என்பால் வந்து என்துயர் துடைப்பதும் அவரால் இயலாது; இந்நிலையில் என்னைப்பற்றி நலியும் இந்நோய், தன் முழு ஆற்றலையும் காட்டி என்னை வருத்திவிட்டு, மேலும் அழிக்க ஒன்று இல்லாமையால், அழிக்கும தன் ஆற்றல இழந்து தானே அழிய வேண்டுமேயனறி, இடையிட்டு அதை அழிப்பார் எவரும் இலரே! அந்தோ!! என் செய்வேன்!" என்று கூறினாள்.

தலைவி அவ்வாறுகூறி வருந்துவது கேட்ட தோழி, 'தலைவி இவ்வாறு கூறுவது என் பொருட்டே; இவள் நிலையை இவள் பெற்றோர்க்கு உணர்த்தி, இவள் துயர் தீர்க்குமாறு என்னைப் பணிபபதற்கே இவள் இவ்வாறு

கூறுகிறாள்; ஆகவே, இனி அறத்தொடு நிற்பதே என் கடனும்' எனத் துணிந்தாள்.

இந்த அழகிய காட்சியை இப் புலவர் படம் பிடித்துக் காட்டியுள்ளார்:

"கண்தர வந்த காம ஒள் எரி,
என்புஉற நலியினும் அவரொடு பேணிச்
சென்று நாம் முயங்கற்கு அருங்காட்சியமே,
வந்து அஞர் களைதலை அவர ஆற்றலரே;
உய்த்தனர் விடாஅர்; பிரித்து இடைகளையார்;
குப்பைக் கோழித் தனிப்போர் போல
விளிவாங்கு விளியின் அல்லது
களைவோர் இலை யான் உற்ற நோயே" (குறுந். 305)

ஒருவனோடு ஒருத்தி கொள்ளும் தொடர்பிற்கு முதற் காரணமாயது கண்; கண், அவனை முதலிற் காண்பதினாலேயே அவன் உறவு உண்டாகும்; ஆதலின், ஒரு பெண்ணின் காதலுக்கு முதற்காரணமாயது கண்ணே ஆதலின், காதல் நோயைக் கண் தரவந்த காமம் என்றும், காதல்நோய், நோய் கண்டார் உள்ளுறுப்புக்களையும் உடலையும் எரியிட்ட இழுதென உருக்கி அழிக்குமாதலின், அக்காதலைக் காம ஒள்எரி என்றும், புலவர் இப்பாட்டில் குறிப்பிட்டுள்ளார்.

தலைமகளின் காமநோய் களைவார் எவரும் இன்றி விடப்பட்ட நிலையினை விளக்க, புலவர் அழகிய ஓர் உவமையினை எடுத்து ஆண்டுள்ளார்.

தமிழகத்தில், மக்கள் பண்டு மேற்கொண்ட விளையாட்டுக்களுள், கோழிச்சண்டையும் ஒன்று. சண்டைக் கென்றே மக்கள் கோழிகளை வளர்ப்பர்; ஊரில் விழாப் போன்ற மகிழ்ச்சி மிக்க நாட்களில், கோழிகளைப் போரிட விட்டுப் பெருங்கூட்டமாகக் கூடிநின்று கண்டு களிப்பர்; 'போரில் எங்கள் சேரியைச் சேர்ந்த கோழியே வெல்லும்,'

எனக்கூறிப் போர் தொடங்குவதும், தங்கள் சேரிக் கோழி வென்றமை கண்டு மகிழ்வதும் செய்வர்.

இவ்வாறு, போருக்கென்றே வளர்க்கப்பெறும் கோழிகள் மட்டுமே போரிடும் என்பதில்லை; கோழிகள் இயல்பாகவே போர்க் குணமுடையவாம்; பிறரால் வளர்க்கப் பெறுமல், குப்பைகளை மேய்ந்தே வளரும் கோழிகளும் போரிடும்: ஆனல் அவற்றின் போர் கண்டு மகிழ்வாரோ, அன்றி அவற்றின் போராட்டத்தை இடைநின்று போக்குவாரோ எவரும் இரார்; போரை, அவை தாமே தொடங்கும். காண்பாரைப் பெறுமலே போரிடும்; தாமே ஓய்ந்து அடங்கும்.

இத்தகைய குப்பைக் கோழிகளின் போரை உணர்ந்த புலவர், தலைமகள் கொண்ட காமநோய், களைவார் எவரையும் பெறுமல் விடப்பட்ட நிலையினை விளக்க, பிறரால் விடப்படாமல், கண்டு மகிழ்வாரையும் பெறுமல், இடையிட்டு நீக்குவாரையும் இன்றி, தாமே தொடங்கி, தனியிடத்தே போரிட்டு, தாமே ஓய்ந்து ஒழியும் குப்பைக் கோழிகளின் போரை உவமையாகக் கொண்டார்.

எவர் கண்ணிலும் படாமல், எங்கோ நிகழ்ந்து ஒழிந்து போகும் இழி நிலையுடையதான குப்பைக் கோழிகளின் போரினை, அறிவுடைப் பெருமக்கள் எல்லாம் அறிந்து பாராட்டுமாறு, தம் பாட்டில் அழகிய உவமை வடிவில் எடுத்துக்காட்டிய புலவர் பெருந்தகைக்கு, **குப்பைக் கோழியார்** என்ற அவ் உவமையாலாய பெயர் எத்துணைப் பொருத்தமுடைத்து!

---

## அ. கடவன்மைந்தன்

தலைமகன் கல்வி, பொருள், காவல், புகழ் இவற்றுள் ஒன்று குறித்துப் பிரிந்து வேற்றுநாடு சென்றுள்ளான். அதனால், தலைமகள் பெருந்துன்புறலாயினள்; அவள் துயர், அளந்தறியாப் பெருந்துயராய்ப் பெருகித் துன்புறுத்தலாயின; துன்பத்தால் துயில்கொள்வதையும் மறந்தாள். அவள் அவ்வாறு துயருறுதற்காம் காரணம், "'பிரியேன்' என்று கூறி மணந்த தலைவர் பிரிந்துவிட்டனரே! இருந்து இன்பம் துய்க்க வேண்டிய இளமைக் காலம் கொன்னேகழியப் பிரிந்து சென்றுவிட்டனரே! பிரிந்து தனித்திருந்து வாழ்ந்தறியா யான், எவ்வாறு இத் தனிமையைத் தாங்கி வாழ்வேன்?" என அவள் துயர் கருதிப்பிறந்ததன்று; இல்லறத்தின் பண்பும் பயனும், அன்பும் அறனுமாம என்றும், அவ்வன்பும் அறனும், ஆற்றவும் பொருள்படைத்தார்க்கே வாய்க்கும் என்றும் அறிந்த அறிவுடையாள் ஆதலின், அவள் தனித்துறையும் தன் துயர் கண்டு வருந்திலள், அவள் தன்துயர் காணுத் தகைசால் பூங்கொடியாவள்; ஆதலின், பிரிந்துவிட்டனரே என்று வருந்திலள்.

அவள் வருந்திய வருத்தமெல்லாம், சென்றவர் ஏதம் எதுவுமின்றி இனிது வந்து சேர்தல் வேண்டுமே என்ற எண்ணத்தால்தான்: அவள் அவ்வாறு வருந்துவதால், தலைவன் ஆண்மையில் ஆற்றலில் அவள் குறைகாணுகின்றாள் என்று ஆகாது; கல்லினும் வலியன் தன் கணவன்; அவன் ஆண்மையும், ஆற்றலும் உடையன் என்பதை அவள் உணர்வாள்; எனினும், அவன் சென்ற வழியின் நிலை, அவளை அஞ்சச் செய்கிறது; அவன் சென்ற வழி, கண்மூடிச் சென்றாலும் கருதிய இடத்திற் கொண்டு சேர்க்கும் நேர்வழியன்று. 'நாம் வந்தவழி இதுவோ? அதுவோ? நாம் செல்ல வேண்டியவழி இதுவா? அதுவா?' என்று எவரும் மயங்குதற்காம், ஒன்றேபோல் ஒன்று காணப்பெறும் கவர்த்த வழிகள் பலவற்றை இடை

யிடையே உடையது அவன் சென்றவழி; அதனால், சென்றவர், சென்று சேரவேண்டிய இடத்திற்குச் செல்ல மாட்டாமல் இடைவழியிலேயே இன்னல் பல அடைதலும் கூடும்; அன்றிச் சென்று மீண்டுவருங்கால் வழிதெரியாது மயங்கி, வேறுவழியிற்புகுந்து நிலைதடுமாறி அலைதலும் கூடும் என்று எண்ணினாள்; அச்சம் அவள் உள்ளத்தே குடிபுகுந்து கொண்டது, உறங்க மறுத்து விட்டன அவள் கண்கள்.

'நின் கணவர், வழிதடுமாறுமளவு பழகி அறியாதவரன்று. ஆதலின் வழிமயக்கம் அவருக்கு உண்டாகாது; நேரியவழி அறிந்து செல்வர் ஆதலின் கவலற்க' என்று யாரோ கூறுவதுபோன்ற உணர்ச்சியொன்று உண்டாயிற்று; ஒருவாறு கவலையும் சிறிதே நீங்கிற்று, ஆனால் அடுத்தகணமே 'வழிமயக்கம் அவருக்குண்டாகாது எனினும் வழிஏதம் எதுவும் இன்றி அவர்வந்து சேரவேண்டுமே! அவர் சென்றவழி ஏதமில்லா இனிய வழியன்றே! எங்கும், எந்த நேரத்திலும் ஏதம் பல உண்டாகுமே! அவ்வழிவாழ் ஆறலைகள்வரின் பிழைத்து அவ்வழிவந்தார் அரியர் என்பரே! அதுவேயுமன்றிக் களிறும கடுவாயுமபோன்ற கொடுவிலங்குகளின் வாழ்விடமன்றோ அவர் சென்றவழி? அவற்றின் கொடுமைகளினின்றும் பிழைத்து வருதல்வேண்டுமே' என்று எண்ணினாள்: அவற்றால் அவர் துயருறுவதுபோன்ற காட்சி அவள் மனக்கண்முன் தோன்றி மறைந்தது. அகன்ற அச்சம், மீண்டும் அவளை வந்தடைந்தது. அதனால் அவள் நோய் முன்னினும் பெருகிற்று

மீண்டும் ஒரு தெளிவு. 'நம் தலைவர் அவற்றால் அழிவுறும் அத்துணை எளியரல்லர்; எதிர்த்தார் எவரையும் எளிதில் அழிக்கவல்ல ஈடிலா ஆற்றலுடையவராவர்; ஆதலின், அவை அவரை ஒன்றும் செய்யா; அவற்றால் இவர்க்கு ஏதம் எதுவும் வந்துறாது' என்ற எண்ணம் அவள் உள்ளத்தின் ஒருபால் உதித்தது, உள்ளம் ஒருவாறு ஆறுதல் கொண்டது; ஆனால், 'அவர் எத்துணை

ஆற்றல் உடையரே ஆயினும், அவர் விரைவில் வந்துசேர்தல் இயலாதே; அவர், நனிசேய நாட்டிற்கன்றோ சென்றுள்ளார்; சென்றுள்ள நீண்ட பெரிய வழியினைக் கடந்து எப்போது வந்து சேர்வாரோ? அதுகாறும் எவ்வாறு ஆற்றியிருப்பேன்' என்று எண்ணினள்; அச்சம், மீண்டும் அவள் உள்ளத்தை ஆட்சிசெயத் தொடங்கிவிட்டது. "'நாம் செல்லும் வழியின் இயல்பு இது; இதை அவள் அறிவாள்; அவ்வழியில் நாம சென்றால் அவள் பொறாள்' என்று உணராது சென்றுவிட்டனரே! அவர் உள்ளந்தான் எத்துணைக் கொடுமை உடையது!" என்று வருந்தினள்; அவள் உள்ளம் நோயின் உருவேயாகி உறுதுயர் பெறுவதாயிற்று; அவள் கண்களும உறக்கம் ஒழிந்து துன்புறலாயின

உறக்கம் இன்றி உறுதுயர் உறும தலைமகளின் நிலையினை உணருகிறாள் தோழி "அந்தோ! துயர்க்கொடுமை தாழாது உடல் உருகி மெலியும் இவள் இறுதியில் இறந்துபடுவளோ? அந்தோ! இதற்கு என் செய்வேன்? வேற்றூர் சென்ற தலைவர் எப்போது வருவார்? எப்போது இவள் துயர் நீங்கும்? அவர் வரும்வரை அழிந்துபோகா வண்ணம் இவளை எவ்வாறு காக்கவல்லேன்?" என்று எண்ணி எண்ணி அவளும் துயர் உறுவாளாயினள் அவள் துயர், தலைமகள் துயரினும் கொடிதாயிற்று.

தோழியின் இத்துயர்நிலையினைத் தலைவி உணர்கிறாள். "பிறர் துயர் காணப் பார்த்து இருத்தல் பண்புடையார்க்கு அழகன்று என்பரே! என் கண்முன்னரே, இதோ, இவள் என் உயிர்த்தோழி துயர் உறுகின்றாள்; அதுவும் அவள் துயர் உறுவதற்குக் காரணமும யான் அன்றோ? இத்தகையாள் துயர் போக்குவதன்றோ என் கடன்? ஆனால், அந்தோ! யான் என் செய்வேன்? என் துயரையே என்னால் போக்கிக்கொள்ள முடியவில்லையே; இந்நிலையில், இவள் துயரை எவ்வாறு போக்கவல்லேன்? அவர் சென்ற வழியின்நிலை எண்ணி வருந்தும் என் நோயினும்,

தோழியின் நோயன்றோ பெரிதாக உளது? நான் என் துயரை ஒருவாறு ஆற்றினும் ஆற்றுவன்; ஆனால் தோழியின துயர்நிலைகண்டு தோன்றிய இந்நோயை எவ்வாறு ஆற்ற வல்லேன்? தோழியின் துயர்நிலைகண்டு உளம் பொறாது அழுவதன்றி அதைத் துடைக்கும் ஆற்றல் இல்லா என்னைப்போல் செயலற்றுத் துயர் உறுவாரும் உலகில உளரோ?"

நல்ல ஒரு பசு: கிணற்றிலே விழுந்துவிட்டது; அதைக் கண்டான் ஓர் ஆண்மகன்; அவனோ அருள் நிரம்பிய உள்ளம் படைத்த உயர்ந்தோர் தோன்றிய குடியிலே பிறந்தவன்; அதனால் அதைக் காக்கவேண்டும் என்ற எண்ணம் அவனுக்கு இயல்பாக உண்டாயிற்று; ஆனால், பசுவின் துயரினைத் தன்னால் தனித்துப் போக்க முடியாது என்பதை உணர்ந்தான்: யாரேனும் சிலரைத் துணைக்கு அழைத்தல்வேண்டும்; ஆனால் அதை அவனால் செய்ய முடியவில்லை; அந்த இடத்தில் இருந்தவாறே "அந்தோ! அந்தோ!! பசு ஒன்று கிணற்றில் விழுந்து விட்டது; அவலம்! அவலம!! ஓடிவாருங்கள்; ஓடி வாருங்கள்," என்று உரக்கக் குரலிட்டால் எவரேனும் ஓடிவருவர்; அதை அவனால் செய்யமுடியாது; காரணம், அவனோர் ஊமன்; உள்ளக்கருத்தை உரையால் உணர்த்தல் அவனால் இயலாது; இருந்த இடத்தில் இருந்தவாறே எவரையும கூவி அழைக்க முடியாது என்றால், கண்ணில் கண்டார் எவரிடத்திலாவது ஓடிச்சென்று, நேர்ந்த நிகழ்ச்சிகளை எழுத்தாலோ அன்றி வேறு வகையாலோ அவர்க்கு அறிவித்து அவரை அழைத்துவந்து பசுவின் துயர் போக்கலாம் என்றால், அதையும் அப்போது செய்தல் இயலாது; காரணம், அது நிகழ்ந்த நேரம், இராக்காலம்; எவரும் வெளியில வழங்கார்; வழங்குவார் உளராயினும் அவர் வழங்குவதை அறிந்துகொள்ள முடியா இருட்காலம்; ஆகவே, எங்கேனும் ஓடி, எவரையேனும் கண்டு, நடந்த ஏதத்தை அவர்க்கு எவ்வாறாயினும் உணர்த்தி அழைத்து வருவதும் அவனால் இயலாது.

இவ்வாறு, தன்னாலும் போக்க முடியாது; அதைப் போக்கவல்லாரைக் கண்டு உணர்த்தி அவர் துணைபெற்றுப் போக்கவும் இயலாது; அந்நிலையில் "பசு கிணற்றில் வீழ்ந்து துயர் உறுவதைப் பார்த்துப் பார்த்துத் தானும் துயர் உறுவதல்லது போக்க இயலாது வருந்தும் உயர்திணைப் பிறந்த ஊமனைப்போல், தோழிபடும் துயரைப் பார்த்துத் துன்புறுவதல்லது அதைப் போக்கவல்லேன் அல்லேன்; அந்தோ! என் துயரின் கொடுமைதான் என்னே!" என்று வருந்துவாளாயினள்.

"கவலை யாத்த, அவல நீளிடைச்
சென்றோர் கொடுமை எற்றித், துஞ்சா
நோயினும் நோயாகின்றே, கூவல்
குரால்ஆன் படுதுயர் இராவில் கண்ட
உயர்திணை ஊமன் போலத்
துயர்பொறுக்கல்லேன் தோழி நோய்க்கே.'

(குறுந். உஉச)

இவ்வாறு தனித்துவாழும் தன் துயர்நிலை எண்ணி வருந்துவதினும், தன் துயர்நிலை கண்டு வருந்தும் தோழியின் துயர்நிலை கண்டே பெரிதும் வருந்தினாள் என்று கூறித் தமிழ்நாட்டு மகளிர்தம், தம் துயர்காணாத் தகைமையினைத் தமிழுலகிற்கு உணர்த்திய புலவர், தோழியின் துயர்நிலை கண்டவழி அதைப் போக்கக் கடமைப்பட்டிருந்தும், போக்கவல்ல ஆற்றலின்றிக் கண்டு வருந்தும் தலைமகளின் நிலைக்கு, பசு ஒன்று கிணற்றில் வீழ்ந்து துன்புற்றக்கால், அதைப் போக்கக் கடமைப்பட்ட உயர்குடிப் பிறப்பும் உள்ளமும் உடையான், தன் உறுப்புநலக் குறைவால், அதைப் போக்கவல்ல ஆற்றலும் வகையும் காணாது, அதன் துயர்நிலையினைக் கண்டு கண்டு வருந்தும் ஊமன் ஒருவன் நிலையினை உவமித்த, உயர் பேரிலக்கியப் பண்புடைமையால் **கூவன் மைந்தன்** என்ற புகழ்நிறைந்த பெயர் பெற்றுத் திகழ்வாராயினர்.

---

## ௩௨. செம்புலப் பெயனீரார்

கோப்பெருஞ் சோழனும், பிசிராந்தையாரும் உயிரொத்த நண்பராவர்; கோப்பெருஞ் சோழன், சோழநாட்டு உறையூரைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்திருந்த ஓர் அரசன்; பிசிராந்தையார், பாண்டிய நாட்டுப் பிசிர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த ஒரு புலவர்; இருவரும் வேறு வேறு நாட்டினர்; ஒருவரையொருவர் கேள்வியளவொன்றாலேயே அறிந்திருந்தனர்; பார்த்துப் பழகி அறியார்; என்றாலும் இருவர் உள்ளமும் ஒன்றுபட்டுவிட்டன; இருவரும் நெருங்கிய நண்பராயினர்; நண்பராய பின்னரும் ஒருவரையொருவர் கண்டிலர்; வடக்கிருந்து உயிர் துறக்கவேண்டிய நிலை சோழனுக்கு உண்டாகிவிட்டது; அந் நிலையில், அவனையடுத்திருந்த சிலர், "உயிர் நண்பன் எனப் பெருமை தோன்றப் பேசினையே; அவன் ஒருமுறையும் நின்னைவந்து கண்டிலனே" என்று கூறினர், அதற்கு அவன், "என் நண்பன் என் செல்வக்காலை என்பால் வந்திலன் எனினும், என் துன்பக்காலை வாராதிரான்:

"செல்வக்காலை நிற்பினும்
அல்லற்காலை நில்லலன" (புறம். ௨௧௫)

அவன் இருக்க என் அருகே இடனொழித்து வைக்க" என்று கூறி இறந்தான்.

தம் நண்பனுக்குற்ற துயர் நிலையினைப் புலவர் எவ்வாறோ அறிந்துகொண்டார்; ஓடோடி வந்தார் உறையூருக்கு; நண்பன் நிலை கண்டார்; வருந்தினார்; 'அவன் இறந்த பின்னர் வாழும் வாழ்வும் ஒரு வாழ்வா?' என்று எண்ணினார்; அவன் அருகிலேயே அமர்ந்து வடக்கிருந்து உயிர் நீத்தார்; இவ்விருபெரும் நண்பர் செயல்களையும், அவர்தம் நட்பின் பெருமையினையும்,

"வருவன் என்ற கோனது பெருமையும்
அதுபழு தின்றி வந்தவன் அறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே"
(புறம். ௨௧௭)

என்று புலவர்கள், வியந்து பாராட்டினர். இவ்விருவர் கொண்டநட்பே நட்பாம்; உயரிய நட்பிற்கு ஒருவரை யொருவர் அறிந்து பழக வேண்டுவதில்லை; இருவர் உள்ளமும் ஒன்றுபட்டால் அதுவேபோதும்.

> "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும்" (திருக்குறள் ௭அ௫)

உள்ளம் ஒன்றுபடுவதே உயரிய நட்பாம்;

> "நெஞ்சத்து அகம் நக நட்பது நட்பு" (திருக்குறள். ௭அ௬-௬)

உள்ளம் ஒன்றுபட்டார்க்கு உரையும் செயலும் ஒன்றுபடும்.

> "உள்ளத்தில் உண்மை யொளி உண்டாயின்
> வாக்கினிலே ஒளி உண்டாகும்." (பாரதியார்.)

தமிழ்நாட்டுக் கணவனும மனைவியும் இத்தகைய உள்ள ஒற்றுமை கொண்டு வாழ்ந்தனர்; அக்காலப் புலவர்கள், அவர்கள் அவ்வாறு வாழவேண்டும என்று விரும்பினர்; அத்தகைய உள்ள ஒற்றுமை உடையார்தம் இருவர்க்கிடையே, புறவேற்றுமை எவ்வளவு இருப்பினும், அவற்றைக்கண்டு கவலையுறார்; அப் புறவேற்றுமைகள் எல்லாம் ஒன்றுகூடி எதிர்ப்பினும், அவர்கள் உள்ளங்கள் ஒன்றுபடுவதைத் தடைசெய்தல் இயலாது; அவை ஒன்றுபட்டே தீரும்; ஒன்றுபட்ட உள்ளங்களைப் பிரித்தலும், அப்புறவேற்றுமைகளால் இயலாது. தமிழ்நாட்டுக் காதலர்தம் இவ்வுளள இயல்பைக் காதலன் ஒருவன் தானே உணர்த்தும் முறையில், ஒரு புலவர் உணாததியுள்ளார்.

ஒப்பாரும் மிக்காரும் இல்லா ஆண்மகன் ஒருவன், ஒருநாள் ஓரிடத்தில் தன்னைப்போன்றே ஒப்பாரும், மிக்காரும் இல்லாப் பெண்மகள் ஒருத்தியைக் கண்டான்; அவளும், அவனைக் கண்டாள்; அவளை அவன் அதற்கு முன் அறியான்; அவளும் அவனை அதற்குமுன் அறியாள்; அவள் தாய் யார் என்பது அவனுக்குத் தெரியாது; அவன்

தாய் யார் என்பது அவளுக்குத் தெரியாது; அவன் அவள் தந்தை யார் என்பதை அறியான்; அவள், அவன் தந்தை யார் என்பதை அறியாள்; அவனூர் அவளுக்குத் தெரியாது; அவளூர் அவனுக்குத் தெரியாது. 'வடகடல் இட்ட ஒருநுகம் ஒருதுளை, தென்கடல் இட்ட ஒரு கழி சென்று கோத்தாற்போல' இருவரும் ஓரிடத்தே எதிர்ப் பட்டனர்; நிலமும் நீரும் கலந்த கலவைபோல் இருவர் உள்ளமும் ஒன்று கலந்துவிட்டன.

இருவரும் சிறிதுபொழுது கலந்து உரையாடி மகிழ்ந் தனர்; தலைவன் பிரிந்து விடுவானோ? நம் மகிழ்ச்சிக்குக் கேடு வந்துறுமோ என்ற அச்சம அவளுக்கு உண்டா யிற்று; அவள் உள்ளக்குறிப்பினை உணர்ந்துகொண்ட அவன், அவளுக்கு ஆறுதல் உண்டாக "என் தாயும், நின் தாயும் இதறகுமுன் ஒருவரையொருவர் அறிந்தவரா? அலலர்; என் தநதைக்கும, நின் தநதைக்கும் இதற்குமுன் யாதேனும் உறவுண்டா? இல்லை; நாம் இருவருந்தான் இதற்குமுன் ஒருவரை ஒருவர் கண்டு பழகியதுண்டா? இவ்வாறு நம் புறத்தொடர்பெல்லாம எத்தகைய உறவும் இன்றிக் கிடக்கவும், நாம் இருவரும் ஒருவர்பால் ஒருவர் கொண்டுள்ள உண்மையான அன்பினைபபெற்ற நம் உள ளங்கள் இரண்டும், நல்ல மண்ணும் பெய்த தண்ணீரும் சேர்ந்து உண்டான கலவையே போல் ஒன்றுகலந்துவிட் டன; ஒன்றுபட்ட நம் உள்ளங்கள், இனிப்பிரியா; அவற் றைப் பிரிக்கவும் இயலாது; ஆதலின், 'பிரிந்து விடுவமோ? பிரிவு வந்து நேருமோ?' என்று எண்ணி அஞ்சற்க" என்று கூறினான்.

"யாயும் ஞாயும் யாரா கியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
**செம்புலப் பெயல்நீர் போல**
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே."

(குறந். ௪0.)

உள்ளம் ஒன்றுபடுவதே உயரிய காதலருக்கு உரிய பண்பாம் என்றுணர்ந்த வந்த புலவர், அவ்வுள்ளங்கள் எவ்வாறு ஒன்றுபடுதல் வேண்டும் என்பதை உணர்த்த 'செம்புலப்பெயல்நீர்' கலந்த கலவையாம் அழகிய உவமையினை மேற்கொண்டு, அக காரணத்தினுலேயே "செம்புலப் பெயல்நீரார்" என்ற சிறப்புப் பெயரையும் பெற்றுத் திகழ்ந்துள்ளார்; அவர்க்கு அப்பெயர் வாங்கித்தந்த அவ்வுவமையினை நுணுகி நோக்கினுலன்றி, அவர் உணர்த்தும் காதலர்தம் உள்ள ஒற்றுமையின் இயல்பும், அவர்க்கு அப் பெயரிட்டு வழங்கும் பெருமையின் சிறப்பும் விளங்கா ஆதலின், அவ்வுவமையினைச் சிறிது நோக்குவாம்.

இரு பொருள்கள் சேர்ந்து நின்றன என்ருல், ஒரு பொருளோடு மற்ருெரு பொருள் வந்து சேர்தல் வேண்டும்; அவ்வாறு சேர்ந்து நின்ற இரு பொருள்களுள் ஒன்று, மற்ருென்றைவிடச் சிறந்ததாயின், அச் சிறந்ததன் இயல்பையே ஏனையது பெறும்; சேர்ந்து நின்ற இரு பொருள்களுள் சேர வரும்பொருள், அது எப்பொருளோடு சேர வருகிறதோ அப்பொருளினும் சிறிது தாழ்வுடையதாகவே இருக்கும்; அதனுல், சேரவரும் பொருள், தன் இயல்பு அழிந்து அது சேர்ந்து நிற்கும் பொருளின் இயல்பைப் பெற்றுவிடுமேயன்றி, அப்பொருளின் இயல்பை அழித்து அதற்குத் தன் இயல்பை ஏற்றிவிடும் ஆற்றலுடையதாகாது. "பொன்மலையைச் சேர்ந்த காகமும் பொன் நிறம் பெறும்."

"ஊரங் கணநீர் உரவுநீர்ச் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்."

"ஒண்கதிர் வாண்மதியம் சேர்தலால் ஓங்கிய
அங்கண் விசும்பின் முயலும் தொழப்படூஉம்."

(நாலடியார். கஎரு-கூ.)

எனப் புலவர்கள் கூறுவனவும் காண்க. இவ்வாறு சேர்ந்து நிற்கும் பொருள்களுள், சேரவரும் பொருள்களினும் சேர்த்துக்கொள்ளும் பொருள்களே சிறந்து விளங்குவதி

னுலேயே, ஒருங்கு சேர்ந்து இயங்கும் பொருள்களிடையே மேற்கொள்ளப்படும் 'ஒடு' என்ற உருபினைச் சேரவரும் பொருளின் பின் அமைக்காது, சேர்த்துக் கொள்ளும் பொருளின் பின்னர் அமைப்பதை இலக்கண ஆசிரியர்கள் மேற்கொள்வாராயினர்.

"பாலோடு அளாயநீர் பாலாகும்." (நாலடியார் கஎஎ)

பால் நீர் இரண்டனுள், பால் சிறப்புடையது; நீர் அத் துணைச் சிறப்பில்லாதது; அது, பாலோடு சேர்ந்தால், அதுவும் பாலாய்ச் சிறப்புடையதாகும். ஆகவே சிறப் புடைய பால் என்பதோடு, 'ஒடு' கொடுத்து வழங்கினர்.

"ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே."
(தொல். சொல். வேற்றுமை மயங் : அ)

என்பது விதி. இந்த நியதியை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்பட்டது.

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும்." (திருக்குறள் : சஙஉ)

என்ற வள்ளுவர் காட்டிய உவமை, "செம்புலப் பெயர் நீர் போல்" என்ற இந்த உவமையினையும் அந்த முறைமை யின் அடிப்படையில் பொருள் காணுதல் கூடாது; இந்த உவமையின் பொருளாய் விளங்கும் உள்ளங்களுக்கு உரிய ராய அவனும் அவளும ஒருவரின் ஒருவர் உயர்ந்தவரல்லர்; ஒருவரைச் சார்ந்து ஒருவா வாழவேண்டிய நிலையினை உடையாரல்லர்; உருவானும் திருவானும் ஒத்த பண்பின ராவர்.

"ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப." (தொல். களவு : உ)

என்பர் தொல்காப்பியனாரும். அத்தகையார் இருவர் உள் ளமும் இணைந்தன; ஒருவர் உள்ளம் நின்றாங்கு நிற்க, ஏனையோர் உள்ளமே உருகி, அவர் உள்ளத்தோடு கலந் தது என்று கூறுதல் பொருந்தாது; அதுதான் உண்மை யெனின், அஃது ஒருதலைக் காமமாம் கைக்கிளையாம்;

அன்பின் ஐந்திணையின்பாற் படாது; அவன் உள்ளம் உருகி, அவள் உள்ளத்தே புகுந்தது, அவள் உள்ளம்உருகி அவன் உள்ளத்தே புகுந்தது; அவன் தன் இயல்பு கெட்டு அவள் இயல்பானான்: அவளும் தன் இயல்பு கெட்டு அவன் இயல்பானாள்; முழு ஆண்மைத்தன்மை அவனிடம் குடி கொள்ளவில்லை; முழுப் பெண்மைத்தன்மையும் அவளிடம் இல்லை; ஆண்மையில் சிறிது குறைந்தான் அவன்; பெண் மையிற் சிறிது குறைந்தாள் அவள்; ஆண்மையும் உரனும் அவன்பால் நில்லாது ஓடின: நாணும் மடனும் இவள்பால் நில்லாது மறைந்தன; இவ்வாறு இருவரும் தம்தம் இயல் பிற் குறைந்து, ஏனையோர் இயல்பை ஏற்று, **இரண்டறக் கலப்பதே உண்மைக் காதலுக்கு இயல்பாம்**; அந்நிலையில் ஒருவரைவிட ஒருவர் உயர்ந்தவர் என்ற நிலை இராது; அவ்வெண்ணம் இருத்தலும் கூடாது.

"இருவருமே ஒருவா எனில் எவர் பெரியா சிறியர்"

எனக் கேட்கும் காதலன் ஒருவன் கூற்றைக் கூர்ந்து உணர்க. ஆண்டவன், ஆண் பெண் வடிவினன் என்ற உண்மை இதையே உறுதி செய்வதும் காண்க.

இயல்பால் ஒருவரின் ஒருவர் உயர்ந்தவரல்லர்; ஒத்த வரே என்று கொள்ளினும், எவர் உள்ளம் முதலில் நெகிழ்ந்து, ஏனையோர் உள்ளத்தில் புகுந்தது என்று கண்டு, அவ்வழியாக உயர்வு தாழ்வு கொள்ளலாம் என்று கருதினால் அதுவும் இயலாது; கூடாது.

"அண்ணலும் நோக்கினான். அவளும நோக்கினாள்."
(கம்ப. மிதிலைக்: ௩௫)

என்பதைப் போல இருவரும் ஒரே நேரத்தில் காண்பர்; இருவர் உள்ளமும் ஒரே நேரத்தில் நெகிழும்; ஒருவர் உள் ளத்தில் ஒருவர் உள்ளம் மாறிக் குடிபுகுதலும் ஒரே நேரத்தில் நிகழும், ஆதலின், 'எவர் முன் அணைந்தார்? எவர் பின் அணைந்தார்?' என்று கூறுதலும் இயலாது.

"சிவகாமி! யான் உனது சிதம்பரனே என்னச்
செப்புமுனம் இருவரும் அற்று ஒருருவமானார்

> "எவர்தாம்முன் அணைந்தனர்என்று இதுகாறும் அறியோம்
> இருவரும்ஒன் றாயினரென் றேஅறையும் சுருதி."

என்ற சிவகாமி சரிதச்செய்யுளைக் (சஅ) காண்க.

ஆதலின், காதலர் இருவர் உள்ளம் கலந்த முறையினை விளக்கவந்த 'செம்புலப் பெயல்நீர்' என்ற உவமையில்வரும் புலம், நீர் என்ற இரண்டையும், நிலத்தோடு நீர் வந்து சேர்ந்தது, அதனால், நீர், நிறமும் குணமும் அற்ற தன் இயல்புகெட்டு, நிலத்தின் இயல்பாம் செந்நிறத்தைப் பெற்றது எனப் பொருள்கொள்ளுதல் தவறாம்; நிலத்தோடு நீர் வந்துசேரவில்லை; நீரோடும் நிலம்வந்து சேரவில்லை; நிலத்தின் இயல்பை நீர் பெற்றுவிடவில்லை; நீரின் இயல்பை நிலமும் பெற்றுவிடவில்லை; இரண்டுமே ஒன்று கலந்தன; இரண்டுமே தம் இயல்பு இழந்தன; அங்கே தனி நீரும் இல்லை; தனிப்புலமும் இல்லை; நீரின் ஒடுந்தன்மையும் இல்லை; நிலத்தின் திண்மைத்தன்மையும் இல்லை; நீரும் நிலமும் மறைய, சேறு என்ற புதுப்பொருள் தோன்றிற்று; அங்கே நீரின்தன்மையும் உண்டு; நிலத்தின்தன்மையும் உண்டு; இருபொருளும் அவற்றின் இரு இயல்புகளும் இரண்டறக் கலந்து காட்சியளிக்கும்.

இவ்வாறு, நிலமும் நீரும் தத்தமக்குரிய பண்புகளைத் தனித்தனியே பெற்றிராது; அவற்றை ஓர் அளவு இழந்து, தம் பண்புகள் பிரிக்க ஒண்ணாவாறு கலந்து நிற்கப் புதிய தோர் உருவினைப் பெற்றாற்போல், தனி ஆண் உள்ளமும், தனிப் பெண் உள்ளமும் வேறுபட்ட இருபொருள் என்ற இயல்பினை இழந்து, பின்னர்ப் பிரித்துக்காண இயலாவாறு இரண்டறக்கலந்த புது உருவினைப் பெற்றுவிட்டன என்று கூறி உண்மைக் காதலர்தம உள்ளத்தன்மையை உள்ளவாறு உணர்த்தவல்ல பொருள்செறிந்த சிறந்த உவமையினைக் கண்டார்க்கு, அவ்வுவமையால் "செம்புலப் பெயனீரார்" எனப் பெயரிட்டுப் பெருமைப்படுத்தியது தமிழுலகம் எத்துணைப் பொருத்தம்! எத்துணைச்சிறப்பு!!

---

## ௧௦. நனிமகளூர்

பழங்காலத் தமிழ்ப் பேரூர்கள், பண்பாட்டிற் சிறந்தன; கோட்டையும் வாயிலும் கோயிலும் கொண்டு குடிவாழ்வார்க்குப் பாதுகாப்பளிப்பன; நெல்லும் பொன்னும் நிறைந்து, நெடுநிலத்துள்ளாரையும் தம்பால் ஈர்க்கும் நீர்மைய; ஆடரங்குகளும் அறங்கூர் அவைகளும் பெற்று, அழகும் அறமும் விளங்குவன; பேரூர்கள் ஒவ்வொன்றையும் சூழ்ந்து, பகைவர் புகுவதற்கும் அஞ்சும் காவற்காடு அமைந்திருக்கும்: அகத்தே நன்செய் நிலங்கள் செந்நெல் விளைந்து செழித்து விளங்கும்; பொய்கைகள், கழுநீர் மலர்ந்து கவின்பெறத் தோன்றும்; வயல்களில் உழவர்கள் ஏர்பல கொண்டு தொழிலாற்றும் காட்சி, கண்கொளாக் காட்சியாகும்; ஊர்ப்புறத்தே பசுக்கள் நிரை நிரையாக மேய்ந்து மகிழ்ந்து வாழும்; உலக மக்கள் எல்லாம் ஒருங்கேபுகினும் இடங்கொடுக்கும் பேரிடம் கொண்ட பெருவாயில்கள் பல, நகரைச்சூழ அமைந்து அணிதரும்.

ஊர்நடுவே அமைந்த மன்றங்களில், மகளிர் பலரும் கூடிக் குரவையும் துணங்கையும் ஆடி மகிழ்வர்; அறங்கூறும் அவைகளில், சான்றோர் பலரும் சேர்ந்திருந்து நகரில் அறனல்லன நிகழாவண்ணம் காத்து நிற்பர்; வேற்றார்களில வாழ வழியின்றி வந்து சேர்ந்த சுற்றத்தையும் ஓம்பித் தாமும் இனிதுவாழும் செழுங்குடிச் செல்வர் பலர் வாழ்ந்திருப்பர்; பேரூர்களில் உள்ள வீடுகள் தோறும், நெல்முதலாம் ஒன்பான்வகை உணவும் நிறைந்து கிடக்கும் குதிர்கள், குன்றுகள்போல் தோன்றிக் காட்சி தரும்; நாளங்காடிகளின் நறுமணம், மக்கள் மனத்திற்கு மகிழ்ச்சி தருவதாம்; விழாக்குறித்தும் வெற்றிகுறித்தும் எடுத்த கொடிகள், நகரின் எம்மருங்கும் நின்று அசைந்து அழகு தரும்.

தமிழ்நாட்டுப் பேரூர்கள், இவ்வாறு வளத்தால் வனப்புடையதாய், ஆடல் பாடல்களால் அழகுடையதாய், காவற்சிறப்பாற் கவினுடையதாய் விளங்குவது கண்ட புல

வர்கள், அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு, பேதைமை, நிறை முதலாம் பெண்மைக்குணங்களால் நிறைந்தும், பேரழகாற் சிறந்தும் விளங்கும் தமிழ்நாட்டு மகளிர் தமக்கு அப்பேரூர்களை உவமைகூறிப் பாராட்டுவதை மரபாகக் கொண்டனர் :

"ஆர்க்காடன்ன இவள் பழிதீர் மாணலம்." (குறுந்: உருஅ)

"வளங்கெழு தொண்டி அன்ன இவள்நலம்." (அகம் ௬0)

"கள்கமழ் பொறையாறு அன்னஎன நற்றோள்."
(நற் : ௧௩௧)

"பெரும்பெயர்க் கூடல் அன்னநின கரும்புடைத்தோள்."
(நற் : ௩௯)

"கூடல் நாளங் காடி நாறும் நறுநுதல்." (அகம் : ௯௩)

"பிணை நெல்லின் அள்ளூர் அன்ன என் ஒண்டொடி."
(அகம் . ௪௬)

"கழுமலத் தன்ன அம்மா மேனித் தொன்னலம."
(அகம் : உ௭0)

"வேம்பி அன்ன என் நலமெழில் இளநலம்."
(அகம் : உ௪௯)

"வஞ்சி அன்ன என் நலம்." (அகம் : ௩௯௬)

"பல்பூங் கானல் பவத்திரி அனஇவள்
நல்லெழில் இளநலம்." (அகம் . ௩௪0)

புலவர்தம் பாராட்டைப் பெறுதற்காம் பெருஞ்சிறப்புற்றுத் திகழ்ந்த பேரூர்கள், பகையரசர் படையெடுப்பால் பாழுறுவதும உண்டு ; பாழான பேரூர்கள் பார்க்கவும் ஒண்ணுப் பெருங்கேடடையும்.

காவற்காடுகள் அழிவுறும் ; வளங்குன்றா வயல்களில் விளைந்த பயிர்வகைகள் நெருப்பிட்டு எரிக்கப்பெறும் ; பசுநிரைகள் மேய்ந்த இடங்களிலெல்லாம் காட்டுவிலங்குகளின் கூட்டமே காணப்பெறும் ; ஊர்மன்றங்கள் மகளிர்

மகிழ்ந்து ஆடிய குரவையையும் துணங்கையையும் இழந்து பொலிவுகுன்றித் தோன்றும்; ஆன்றோர் இருந்து அற முரைத்த அவைக்களத்தே, பேய்கள் கூடிக் குலாவும்; அகமும் முகமும் மலர வருவாரை எதிர்நோக்கி நின்ற மகளிரெல்லாம், மக்களையும் மனையையும் இழந்ததை எண்ணி எண்ணி வாய்விட்டுப் புலம்புவர்; வந்தார்க்கெல் லாம் விருந்தளித்துப்புரந்த பெருங்குடிச் செல்வர்கள், தம் செல்வம் இழந்து, வறியராய் வாழ்விழந்து, தம்மை வாழ் விப்பாரைத் தேடிப் பிறநாடு நோக்கிச் சென்றுவிடுவர்; நெல்லிருந்த குதிர்கள் முற்றும் எரிந்து பாழாக, பாழான அவ்விடங்களில் கோட்டான்கள் கூடிக் கூவிக் கொண்டிருக் கும்; கழுநீர் மலர்ந்து கண்ணிற்கு மகிழ்ச்சி அளித்த பொய்கைகள், கோரை பல வளர்ந்து பாழ்ங்குளமாம்; ஏர்பல நிறைந்து எழில்பெறவிளங்கிய வயல்களில், பார்க்கு மிடமெங்கும் பன்றிகளின் பெருங்கூட்டமே காணப்படும்; இவ்வாறு நாடு எனும் பேர் மறைந்து காடெனும் பேர் விளங்குமாறு, ஊர் இருந்த இடமெல்லாம் பாழாகும். அவ்வாறு பாழான ஒரு காட்சியைப் படம்பிடித்துக் காட்டி யுள்ளார் ஒரு புலவர் :

“கடிகாவின் நிலை தொலைச்சி,
இழிபு அறியாப் பெருந்தண்பணை
குரூஉக் கொடிய எரிமேய,
நாடு எனும்பேர் காடாக,
ஆ சேந்தவழி மாசேப்ப,
ஊர் இருந்தவழி பாழாக,
இலங்குவளை மடமங்கையர்
துணங்கை அம்சீர் தழூஉ மறப்ப,
அவை இருந்த பெரும்பொதியில்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பு ஆட,
அணங்கு வழங்கும் அகலாங்கண்
நிலத்தாற்றும் குழூஉப் புதவின்
அரந்தைப் பெண்டிர் இனைந்தனர் அகவக்,

கொழும்பதிய குடிதேம்பிச்
செழுஙகேளிர நிழல்சேர,
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
குடுமிக் கூகை குராலொடு முரலக்,
கழுநீர பொலிந்த கண்ணகன் பொய்கைக்
களிறுமாய் செருந்தியொடு கண்பமன்று ஊர்தர,
நல்லோ நடந்த நசைசால் விளைவயல்
பன்மயிர்ப் பிணவொடு கேழல் உகள,
வாஅ மாமையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎம."

(மதுரைககாஞ்சி : கருஅ - எசு)

இவ்வாறு பகைவர் படைகளால் பாழான இடங்களின் கொடுமை, அழிந்துபோன விசயநகரப் பேரரசின் தலை நகராகிய ஹம்பியினையும், இரண்டாம உலகப் பெரும் போரில் செர்மானியப்படையால் பெருமபாழுற்ற இரஷ்யப் பெரு நகராகிய ஸ்டாலின்கிராடு நகரையும் கண்டார்க்கு நன்கு புலனும்.

பொன்னும் பொருளும் நிறைந்து பொலிவு தோன்ற விளங்கிய பேரூர்களைப் பெண்மைநலத்தால் நிறைந்து சிறந்து விளங்கிய மகளிர்க்கு உவமைகொண்ட புலவர்கள், கணவரைப்பிரிந்து கவினிழந்து நிற்கும் மகளிர்க்குப் பாழுற்றுப் பலவளமும் இழந்து, குடிவாழ்வாரை அற்றுத் தம் பண்டைப்பொலிவு இழந்து கிடக்கும் பேரூர்களை உவமையாகக்கொள்வதையும் மரபாகக் கொண்டுள்ளனர்.

புலவர் தனிமகனார், அத்தகைய பாழூர் ஒன்றையும், வாழ்வாரை இழந்து வெற்றிடமாகக் கிடக்கும் அப்பாழ் நிலத்தை இரவு பகலாகத் தனியே காத்துக்கிடக்கும் காவலன் ஒருவனையும் கண்டார் ; அவ்விடத்தின் கொடுங் காட்சிகளும, அக்காவலனின் அவலநிலையும் அவர் உள்ளத்தைத் தொட்டன ; அழகிய ஒரு பாட்டில், தம் உள்ளத் துயரை உணர்த்துவாராய், அக்காலமகளிர்களின் மாண்புடைய உள்ளத்தின் உயர்வை உணர்த்திச் சென்றுள்ளார்.

வாழ்வாரை இழந்து பாழான இடங்களை அணுகவும் பார்க்கவுமே மக்கள் அஞ்சுவர் ஆதலாலும், ஆங்குப் பேணத் தக்க பொருள் ஒன்றும் இராது ஆதலாலும், அவ்விடங் களைக் காக்கவேண்டிய நிலைமை எவர்க்கும் உண்டாகாது; அவ்விடங்களைக் காவல்புரியக் கருதுவோரும், அக்காவற் றொழிலை ஏற்க முன்வருவோரும் எவரும் இரார்.

ஆனால், அத்தகைய பாழ் இடங்களையும் காத்தல் வேண்டும் என்றுகொண்டு, அக்காவற்றொழிலைத் தனியே ஒருவன்பால் ஒப்படைக்க, அவனும் அவ்விடத்தே சென்று இரவு பகலாகத் தான் ஒருவனாகவே நின்று காத்து நிற் பான் எனில், அவன் நிலை என்னாம? அக்காவற்றொழிலும் ஒருநாளில் ஒழியாது தொடர்ந்து செல்வதாயின் அவன் துயரின் கொடுமைக்கும் ஓர் எல்லை உளதாமோ? அத்த கைய துயராளன் ஒருவனை, புலவர் தனிமகனார் தம்முடைய பாட்டொன்றின் உவமையாக மேற்கொண்டுள்ளார்.

கணவன் பொருளீட்டும் முயற்சிமேற்கொண்டு பிரிந்து சென்றுளான்; சென்றகாலை, 'கார்காலத் தொடக் கத்தே நில்லாது மீண்டுவிடுவேன்: வருந்தற்க' என்று தன் காதலிபால் கூறிச் சென்றிருந்தான்; அவன் மனைவியோ அவன்பாற் கொண்ட பேரன்பினள்; அவனை அன்றுவரை பிரிந்தறியாதவள்; என்றாலும், இல்லறம் நல்லறமாகப் பெரும்பொருள் தேவை என உணர்ந்த கடனறி உள்ளத் தவளாதலின், அவன் கூறிச்சென்ற கார்காலம் வரும்வரை ஒருவாறு ஆற்றியிருந்தாள்.

கார்காலம் தொடங்கிவிட்டது; அவன் வரவில்லை; கீழ்க்கடல் நீரை வாரிக்கொண்ட மேகங்கள், கொண்டல் கொண்டலாக எழத் தொடங்கிவிட்டன; அவன் வந்திலன்; மேகங்கள் மேலைத்திசைநோக்கி எழலாயின; அப்போதும் அவன் வந்திலன்; மேகங்கள் எழுந்து பரந்துவிட்டமை யால், உலகெலாம் இருண்டுவிடுவதையும் கண்டாள்; ஆனால் அவனைக் கண்டிலள்; உலகிருள் எல்லாம் ஒருங்கே ஒழிந்து, அவ்வுலகெலாம் நன்கு தோன்றுமாறு தோன்றிய

மின்னலையும் கண்டாள்; கணவன் வரக்கண்டிலள்; ஓரிடத்தே அன்றி உலகம் முழுதும் பெய்த மழையையும் கண்டாள்; இடித்துப் பெய்த மேகம் நீர் முற்றும் வற்றி வெண்ணிறம் பெற்றுத் தென்திசை நோக்கி ஓடி மறைவதையும் கண்டாள்; அந்நிலையிலும் அவன் வந்திலன்; ஒளிவிடும் மின்னலும், பெய்யும் மழையும், ஒலிக்கும் இடியும் அவர் சென்ற நாட்டிலும் நிகழ்ந்திருக்குமே; அவற்றைக் கண்டும் வந்திலரே என்று வருந்தினாள்; வாடினாள்.

அவள், நாணும் நிறையும் முதலாம் பெண்மைக் குணங்களால் நிறைந்தவள்தான்; ஆனால், தலைவன்பால் கொண்டுள்ள அவள் காதலும், அவள காட்டிய நெறி பிறழா அவள் கற்பு வாழ்வும், அப் பெண்மைக்குணங்களி னும் சாலச் சிறப்புடையன என உணர்ந்தவள்; உடலிற்கு இன்றியமையாதது உயிர்; ஒருவர்க்கு உயிரினும் சிறந்த ஒரு பொருள் இல்லை என்ப; ஆனால், நாணும் நிறையும் முதலாம் பெண்மைக்குணங்கள் உயிரினும் சிறந்தன வாகும்.

"உயிரினும் சிறந்தன்று நாணே." (தொல். பொருள்: ௧௧௩)

என்பர் தொல்காப்பியர். நாணம் உயிர் இரண்டனுள் ஒன்றே பெறலாகும்; ஒன்றை விரும்பின் ஒன்றை இழத்தல் வேண்டும் என்ற நிலை உண்டானால், உயர்ந்தோர் உயிரையே இழப்பர்; நாணை இழக்க எண்ணார்.

"நாணால் உயிரைத் துறப்பர்; உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாணாள் பவர்." (திருக்குறள்: ௧0௧௭)

நாண்இல்லா வாழ்வு, உயிருடை வாழ்வாகாது; அது, பிறர் இயக்க இயங்கும் பாவைவாழ்வு போலாம்.

"நாண்அகத் தில்லார் இயக்கம், மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று." (திருக்குறள். ௧0௨0)

"தாயிற் சிறந்தன்று நாண்." (திருக்கோவையார்: ௨0௪)

என்றும்,

"..................என் கண்மணி போன்று
ஒருநாள் பிரியாது, உயிரிற் பழகி, உடன்வளர்ந்த
வருநாண்" (திருக்கோவையார்.)

என்றும் அதன் பெருமை பேசுவர் மணிவாசகப் பெருந்தகையாரும்.

இத்துணைப் பெருமை வாய்ந்த நாண் முதலாம் பெண்மைக்குணங்களை அவள், அவன்பால் கொண்ட காதற் பெருமையால் இழந்துவிட்டாள்; காதல் மிக்கவழி நாண் நில்லாது; காதலும் நாணும் ஒருவழி நில்லா; ஒன்றுள்ள இடத்தில் ஒன்று இராது.

"காமம் விடுஒன்றோ; நாண்விடு நன்னெஞ்சே!
யானோ பொறேனிவ் விரண்டு." (திருக்குறள்: ௧௨௪௭)

என்று காதல் உள்ளம் கொண்டார் ஒருவர் கூறுவதும் காண்க. காதலுக்கு முன்னே நாண் நில்லாது; காதலை எதிர்க்கும் ஆற்றல் நாணிற்கு இல்லை; உப்பணை கொண்டு பெருகிவரும் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்துதல் இயலாது; அதைப்போலவே உள்ளம் கவர்ந்து எழுந்து ஓங்கி வரும் காதலைத்தடுத்து நிறுத்தும் ஆற்றல் நாணிற்கும் நிறைக்கும் இல்லை.

"உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம்." (அகம்: ௨0௮)

"சிறையும் உண்டோ செழும்புனல் மிக்குழீ?
நிறையும் உண்டோ காமம்காழ்க் கொளின்?"

(மணி, ௫ ௧௧ - ௨0)

என்று அறிஞர்கள் காதற்சிறப்புரைத்துள்ளமை காண்க.

காதலின் இயல்புணர்ந்த வள்ளுவர், அதற்குப்

"பெண்மை உடைக்கும் படை." (திருக்குறள்: ௧௨௫௮)

எனப் பெயரிட்டு அழைப்பர்.

நாணம் உயிரினும் சிறந்தது; ஆகவே உயிரைவிட்டாயினும் நாணைக் காத்தல் நல்லோர்க்குக் கடனே எனினும், அந்நாணைக் காட்டினும் நற்குடிப்பிறந்த மகளிர்க்குக் கற்புச் சிறந்ததாகும்; உயிரினும் சிறந்தது நாண் என்றும், தாயினும் சிறந்தது நாண் என்றும் உரைத்த ஆசிரியர் தொல்காப்பியனாரும, மணிவாசகப் பெருந்தகையாரும்,

" ........ .. . ......நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று." (தொல் பொருள்: ககஉ)

என்றும்,

" தாயிற் சிறந்தன்று நாணைய லாருக்கு அந் நாண்,தகைசால்
சேயிற சிறந்தமென் றோளி! திண் கற்பின் விழுமிதன்று."
(திருக்கோவையார் : உ0௪)

என்றும் கூறுவர். ஆகவே, நாணை இழந்தாயினும் கற்பைக் காத்தல் அவர் தலையாய கடமையாகும்; கற்பாவது, காதலர் கற்பித்த நெறிநிற்றலாம்; ஆகவே, "ஆற்றி இருக்க; ஆண்டு நில்லாது அண்மையில் மீள்வேன்" என்று உரைத்துச் சென்ற சொல்லைத் தேறியிருத்தல் இவர்தம் நீங்காக கடமையாயிற்று. ஆகவே உயிரைத் தாங்கி, நாணை இழந்து வாழலாயினர்; இவ்வாறு நாண் இழந்து வாழும் வாழ்க்கையின் துயர்நிலையினையும், காதல் கற்பு இவற்றின் ஆற்றலையும சிறப்பையும்,

" ....................என்னொடும் வளர்ந்த
பொற்பார் திருநாண், பொருப்பர் விருப்புப் புகுந்துநுந்தக்
கற்பார் கடுங்கால் கலக்கிப் பறித்து எறியக்கழிக."
(திருக்கோவையார்: உ0அ)

என்று பாராட்டிப் பெண்களின் வாழ்வு உடன் பிறந்த நாணும் அழிய வாழும் கொடுமை மிக்குக் காணப்படுதலின், அவர்கள் பிறந்து பெருந்துயர் உறுவதினும் பிறவாமையே நன்றாம்.

" இற்பாற் பிறவற்க ஏழையர் வாழி எழுமையுமே."
(திருக்கோவையார்: உ0அ)

என்று கூறும் ஒரு பெண்ணின் உள்ளத்தையும் உணர்க.

தலைவன்பால் கொண்ட காதலாலும், கற்பின் சிறப் புணர்ந்த காரணத்தாலும், நாணும் நிறையும் முதலாம் பெண்மைக்குணங்களை எல்லாம் இழந்து நிற்கிறாள் தலைவி; நாண் அகத்தில்லா அவள் உடல், உயிரற்ற பாவை போன்றாகிவிட்டது; சுருங்கக் கூறினால், அவள் நடைப் பிணம் ஆயினாள்; அந்நிலையில் அவளுக்குத் துணையாய் இருந்தது அவள் உள்ளம் ஒன்றே; அதுவும் அவள்பால் நில்லாது அவனிருக்கும் இடம் தேடிச் சென்றுவிட்டது; அஃதாவது, அது, அவன் நினைவாகவே ஆகிவிட்டது.

"கெட்டார்க்கு நட்டார் இல்" என்ப. அதைப் போல, பெண்மைக் குணங்களை எல்லாம் இழந்து நிற்கும் தன்னைத் தன்னெஞ்சும் கைவிட்டுச் சென்றமை கழி பெரும் துன்பத்தைத் தந்தது. எல்லாம் ஒழியத் தனித்து நின்ற உடலை ஓம்பியிருக்கும நிலையினை எண்ணினாள்; துயர் எல்லை கடந்தது. "நான் ஏனோ உயிர் வாழ்கிறேன்? இந்த நிலையிலும் உயிர் வாழவேண்டியுளதே! இந்த உடலும் அழிந்தால் இந்நிலை எனக்கிராதன்றே? எல்லாம் ஒழிந்த பின்னரும், இந்த உடல் மட்டும் ஏனோ ஒழியாது உளது? அஃது இருப்பதாலன்றோ அதைக் காக்கவேண்டி நான்வாழ வேண்டியுளது? அந்தோ என் உடலே! நீ அழியாயா? எல்லாம் அழியவும் அழியாது கிடக்கும் இப்பாழ் உடலைத் தனியே காத்துநிற்கும் என் உயிரே! நின் நிலைகண்டு வருந்துகின்றேன்," என்றுகூறி வருந்துகிறாள்.

இவ்வாறு காதற் சிறப்பால், நாணும் நிறையும் முதலாம் பெண்மைக்குணங்களை இழந்து, நெஞ்சத் துணையும் பெறாது தனித்துயருற்றுவாடும் தலைமகள் ஒருத்தியின் நிலைக்கு, வாழ்வோரெல்லாம் ஓடிப்போமாறு முழுதும் பாழுற்ற ஓர் இடத்தைக் காத்து நிற்கும் தனி மகன் ஒருவனை உவமை கூறித் தனிமகனார் என்ற தனிச் சிறப்பைப் பெற்றுவிட்டார் நம்புலவர் பெருந்தகையார்.

"குணகடல் முகந்து, குடக்கேர்பு இருளி,
மண்திணி ஞாலம் விளங்கக், கம்மியர்

செம்பு சொரி பானையின் மின்னி, எவ்வாயும்
தன்தொழில் வாய்த்த இன்குரல் எழிலி,
தென்புல மருங்கில் சென்றற் றாங்கு
நெஞ்சம அவாவயின் சென்றன, ஈண்டொழிந்து
உண்டல் அளித்து என்உடம்பே; விறற் போர
வெஞ்சின வேந்தன் பகையலைக் கலங்கி
வாழ்வோர் போகிய பேரூர்ப்
பாழ்காத் திருந்த தனிமகன் போன்றே." (நற் ௧௫௩)

புலவர் தனிமகனார், பழங்கால அரசர், தம பகைவர் நாட்டைப் பாழாக்கும கொடுமை, கற்பே பொற்புடைக் குணமாம்; அதை எத்துணைக் கேடுறினும் காத்தல் தம் கடனும் என உணரும் சங்காலத் தமிழ்மகளிர் உள்ளம், செம்பால் பானை செய்து அதற்கு விளக்கம் தருதற்குக் கடைந்தெடுக்கும் தொழில் நுணுக்கம் தெரிய வாழ்ந்த தமிழர் தம் நாகரிகச் சிறப்பு, கீழ்க்கடலில் படிந்து நீருண்டு மேலைத்திசை நோக்கி எழுநது பரந்து மினனி இடித்துப் பெய்து பின்னர் தென்திசை நோக்கிப் பாயும் புயலின் தன்மை ஆகிய இவை எல்லாம், தம் ஒரு பாட்டிலேயே அமையப பாடிய சிறப்பு பாராட்டி மகிழ்தற் குரியதாம். உவமையாற் பெயர்பெற்ற பெருமையுடைய இப்புலவர், இந்த ஒரு பாட்டிலேயே, மின்னலுக்குக் கம்மியர் செம்புசொரி பானை, தலைவியின நெஞ்சம் தலைவன்பால் சென்றமைக்குக் கீழ்ககடலில் எழுநத மேகம் தென்புலமருங்கிற் சென்று சோர்ந்தமை, பெண்மைக் குணமெல்லாம் இழந்து தனித்துத துயருறும் தலைவியின் நிலைக்கு வாழ்வோர் போகிய பேரூர்ப்பாழ் காத்திருநத தனிமகனின் துயர்நிலை ஆகிய அழகிய மூன்று உவமைகளை ஆண்ட அவர் புலமைநலம் புகழ்ந்து போற்றுதற் குரியதாம்.

---

# ௧௧. தேய்புரிப் பழங்கயிற்றினர்

மக்கள் உள்ளம் ஆசை உடையது; ஆசை, மக்கள் வாழ்வின் வளர்ச்சிக்கு அதன் உயர்விற்கு உறுதுணை புரிவது; ஆசையற்ற ஒருவன் வாழ்வில் வளர்ச்சியை வனப்பைக் காணல் இயலாது; ஆனல், அவ்வாசை அளவிற்குட்பட்டதாக இருத்தல் வேண்டும்; "ஆசைக்கோர் அளவில்லை" என்ற நிலையை அடைந்துவிடுதல் ஆகாது; ஆசை அளவுமீறிச் செல்வதை ஒருவாறு ஏற்றுக்கொள்ளி னும், அது ஆகாத பொருள்மீது உண்டாதல் சிறிதும் கூடாது; ஆசை நல்லனவற்றின்மீது செல்லும்வரை, அதை, நல்லது; அனைவர்பாலும் இருக்கவேண்டுவது என்று கருதிக்கொள்ளலாம்; ஆனல் அது தீய பொருள் கள்பால் செல்வதாயின், அதை, அந்நிலையிலேயே அடக்க வும், அகற்றவும் வேண்டும்.

ஆனல், உலகத்தில் மிகச்சிலரே போதும் என்ற பொன்னன மனம படைத்துப் புகழ் பெற்றவராவர்; உலக உயிர்கள் பலவும் அளவிற்குமீறிய ஆசையின் வடிவாகவே காணப்படுகின்றன; அதைப்போலவே, நல்லபொருள்கள் பால் நாட்டம கொள்வதினும், தீயபொருள்கள்பால் தோன்றிய ஆசைக்கு அடிமையாவதையே உள்ளம் பெரி தும் விரும்புகிறது. நல்ல பொருள்கள்மேற் சென்ற ஆசை உடையார், நாட்டில் அரியர்; தீயபொருள்கள்பால் ஆசை செல்வதையே பெரும்பாலோர் விரும்புவர்; இந்நிலை அத் தகைய உள்ளம் உடையார்க்கும், அவர்கள் வாழும் நாட் டிற்கும் கேடு பல விளைவிக்கும்; ஆதலின், உள்ளத்தை அது சென்றவழிச் செல்லவிடுதல் கூடாது; அதை அடக்கி ஆளுதல் வேண்டும்; உள்ளம், ஆசைக்கு அடிமைப் படுதல் கூடாது; ஆசையை அது அடிமைகொள்ளுதல் வேண்டும்; ஆசைக்கு அடிமைப்பட்ட உள்ளம், உலக இன்பம் ஒரு சிறிதையும் உண்ணுது; ஆசையை அடிமை கொண்ட உள்ளம், உலக இன்பம அனைத்தையும் ஒருங்கே துய்க்கும்.

“ஆசைக்கு அடியான் அகில லோகத்தினுக்கும்
ஆசற்றநல் அடியான் ஆவானே—ஆசை
தனை அடிமைகொண்டவனே தப்பாது உலகந்
தனை அடிமை கொண்டவனே தான்.” (நீதிவெண்பா · கஉ)

என்ப.

ஆசைக்கு அடிமைப்பட்டு அதன்வழி நின்ற உள்ளம், அவ்வடிமைத் தளையினின்றும் விடுதலைபெற விரும்புவதில்லை; விரும்பினாலும், அடிமைப்பட்டு ஆற்றல் இழந்து போன அதனால் அஃது இயலவும் இயலாது; ஆகவே, அவ்வுள்ளத்தை ஆசைத்தளையினின்றும் மீட்க வேறு ஒரு பொருள் துணைசெயல் வேண்டும்; அவ்வாற்றல் உடையது அறிவு ஒன்றே; உள்ளம் செல்ல விரும்பிய இடங்களிலெல்லாம் சென்று கெட்டொழியவிடாது, தீய பொருள்களபால் சென்ற அதன் போக்கைத் தடுத்து நற்பொருள்பால் போகவிடுதலும், நற்பொருள்பாலும், அது விரும்பியாங்கு அளவின்றி ஆசை கொள்ளவிடாது, அளவே செல்லவிடுதலும் அறிவின் கடமையாகும்.

“சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு.” (திருக்குறள் : ௪௨௨)

இவ்வறிவையே ஆறாவது அறிவு என்ப; மன அறிவு என வழங்கப்பெறுவதும் இதுவே, இவ்வறிவினைப் பெற்றவர் மட்டுமே மக்கள் என மதிக்கப்பெறுவர் என்று கூறுவர் ஆசிரியர் தொல்காப்பியனார்.

“மக்கள் தாமே ஆறறி வுயிரே” (தொல். மரபு: ௩௩௬)

“ஆறறிவதுவே அவற்றொடு மனனே.” (தொல். மரபு: ௩௩௨)

இவ்வறிவு வாய்க்கப் பெறாது, உள்ளம் சென்றவழி ஓடும் இயல்புடையார், செய்யத்தக்க செயல் இவை, செய்யத் தகாச் செயல் இவை என உணரும் ஆற்றல் இல்லாதவராகி விடுவராதலின், அவர்கள் மக்கள் என மதிக்கப்படார். மாக்கள் எனவே மதிக்கப் பெறுவர்.

“தக்க இன்ன; தகாதன இன்ன என்று
ஒக்க உன்னலராயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே” (கம்பராமா. கிட்கிந் ௧௩௨)

நல்லெண்ணம் கொண்டு நன்னெறிக்கண் நிறுத்த முன்வரும் அறிவின் கட்டளைக்கு உள்ளம் இணங்கிவிடுதல் எளிதில் நிகழ்வதில்லை; உள்ளம் ஆசைக்கு அடிமைப்பட்டு விட்ட காரணத்தால், அறிவின் தொண்டு தன்னை உடையானை உயர்நிலைக்கு உய்விக்கும் என்பதை உணரமாட்டாது, அறிவொடு மாறுபட்டுப் போரிடும். உள்ளத்திற்கும் அறிவிற்கும் உண்டாகும் இப்போராட்டம், பெரும் போராட்டமாம்; இதில் அறிவு தனித்து நிற்க, உள்ளம் கண், காது, மூக்கு நாக்கு, உடல் ஆக இவைவழியாக வெளிப்பட்டுத்தோன்றும் ஆசைகள் ஐந்தின் துணைபெற்றுப் போரிடுவதால், பெரும்பாலான இடங்களில் அறிவே தோற்றுவிடும்; ஒரு சில இடங்களில் மட்டும் அது வெல்வதும் உண்டு; மதயானை, உருவால் பெரியதே எனினும் சிறிய அங்குசத்திற்கு அது அடங்கிவிடும் இயல்புடையதாகும்; அதைப்போலவே, ஆசைகள் மதயானை போன்ற ஆற்றல் உடையனவே என்றாலும், உண்மை என்ற உரமிக்க அறிவு அவ்வாசைகளை அடிமைகொள்ளும் ஆற்றலை ஒரோவழிப் பெறுவதும் உண்டு. ஆனால், அவ்வாறு வென்ற அறிவுடையார் உலகத்தில் மிகச் சிலராவர், அத்தகையாரே போற்றற்கும், புகழ்வதற்கும் உரியவராவர்; அவர் ஒழுக்கமே “பொய்தீர் ஒழுக்கம்” எனப் பாராட்டப்பெறும்.

“பொறிவாயில் ஐந்து அவித்தான பொயதீர ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.” (திருக்குறள் ௬)

என அவர்க்கு வாழ்த்துக் கூறுவர் வள்ளுவப்பெருந்தகையார்.

மக்களை மூவகையினராகப் பிரிக்கலாம்; ஆசைக்கு அடிமைப்பட்ட உள்ள முடையவர்; ஆசை ஆகாது, அந்த

அடக்குதல்வேண்டும் என உணர்ந்து போராடிப் போராடி இறுதிவரை வெற்றி தோல்வி காணமாட்டாமல் மாண்டு மடிந்தவர்; ஆசைக்கு அடிமைப்பட்ட உள்ளத்தைத் தமக்கு அடிமை கொண்ட அறிவுடையவர் முதல் வகையைச் சேர்ந்தோர், ஆசை தவறு என்று உணரும் உணர்ச்சியே இல்லாதவர், தக்க இன்ன, தகாதன இன்ன என்று உணரமாட்டா முதன்மையான விலங்கின நிலைச் சேர்ந்தவர்; ஆதலின், அவர்கள் மக்கள் என மதிக்கும் தகுதி உடையாரல்லர்: மூன்றும் வகையினர் முற்றும் துறந்து முழுமுதற்றன்மை பெற்றவர், மக்கட்கு மேலாம நிலையினை எய்தி மாண்புற்றார்; ஆக, இவ்விருவர்க்கும உலகவாழ்வோடு உறவு இல்லை. உலகவாழ்வோடு உற வுடையவர், ஆசையும உடையராய், அதன் இயல்புணர்ந்து அடக்கி ஆளவேண்டும் என்ற எண்ணமும் கொண்டு ஓயாது போர் புரிபவராவர்

அத்தகையார் நிலை, அந்தோ! மிகமிக வருந்தத்தக்க தாம; அவர் தம் உள்ளத்திற்கும அறிவிற்கும் நடை பெறும் போர், அம்மம்ம! கொடிது கொடிது!! அவற்றுள் ஒன்று அழிய, ஏனையது வெலலுமவரை போர் ஓயாது: இரண்டும் நிகர் இணையிலலா ஆற்றல் உடையவை; ஆதலின், போர் மிகமிகக் கடுமையாகவே இருக்கும்: அது நீண்ட காலப் போராகவும், ஆயுட்காலப் போராகவும் ஆகும்; இரு பெரும படைகள் நின்று போரிடும் போர்க்களமும, அதைச் சூழ உள்ள இடமும எத்துணைப் பாழுறும் என் பதைப் பார்த்திருக்கிறோம

அறிவிற்கும, ஆசைக்கு அடிமைப்பட்ட உள்ளத்திற் கும நடைபெறும இப்போராட்டம நிகழும் இடமாகிய ஒருவன் உடல்நிலை என்னும! எத்துணைக் கேடுறும்! அவன் உடற்கேட்டை வாயால் உரைக்கவும படுமோ? இத்தகைப் போராட்டத்தால அழிந்தார் தாம எத்தனை எத்தனை கோடி? அதை எண்ணிப் பார்த்தலும இயலுமோ? இப் போராட்டத்தால அவர் உடல் அழிவது உறுதி என்று

னும், அவர் உயிர் போற்றப்படும்; புகழப்படும்; வணங்கவும் படும்; ஆதலின், ஆசைக்கு அடிமைப்பட்டு அழிந்துவிடா வண்ணம உள்ளத்தை அடக்கி ஒருவழி நிறுத்தவேண்டும் என்ற உணர்வு வரப்பெற்ற உரனுடையோர் உலகத்தில் மிகச் சிலரே எனினும், அம்மிகச் சிலராலேயே இவ்வுலகம இயங்குகிறது.

> "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே
> நிகழ்ச்சி அவர்கட் டாக லான."

என்ப.

உள்ளமும் அறிவும் ஒருவழி நில்லாது, மாறுபட்டுப் பொரும் இப்போராட்டக் கொடுமையினை உணர்ந்த ஒரு புலவர், அதை அழகிய ஓர் உவமையால் நன்கு விளக்கியுள்ளார்.

அண்மையில் மணம் முடித்துக்கொண்ட இளைஞன் ஒருவன்; இல்லிருந்து நல்லறமாற்றி வையத்துள் வாழ் வாங்கு வாழவேண்டும என்ற நலனுள்ளம் உடையவன்; அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும், துற வோர்க்கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின் விருந்து எதிர்கோடலும் இல்லறத்தார்க்கு இயல்புடைப் பண்பாம் என உணர்நதவன்; 'இசையும், இன்பமும், ஈதலும் மூன் றும் அசையுடன் இருநதோர்க்கு' ஆகாது என்ற அறிவும் உடையான்; ஆதலின், அழகும் அன்பும நிறைந்த தன் ஆருயிர் மனைவியைப் பிரிநது பொருள் சேர்க்க வேண்டி வேற்றூர் நோக்கிப் புறப்பட்டு விட்டான்; அவளைப் பிரிந்து வந்துவிட்டானே ஒழிய, இடைவழியில் அவள் அழகும் அன்பும் அவன் உள்ளத்தைத் தன்பால் ஈர்த்துக் கொண்டே இருக்கலாயின.

கண், காது, நாக்கு, மூக்கு, உடல் ஆகிய இவற்றுள் ஒன்றின் வழியாகப்பெறும் இன்பத்திற்கே அடிமையாகி விடும் இயல்புடையது உள்ளம்; பெண்களோ, இவ் ஐவ

கைப் பொறியானும் பெறும் இன்பம் அனைத்தையும் ஒருங்கே உடையவர் என்ப.

"கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள." (திருக்குறள்: ககஙக.)

ஆதலின், மனித உள்ளம் மகளிர்பால் எளிதில் இரங்கிவிடும் இயல்புடையதாகும்; இளைஞன் மனைவியோ பேரழகும், பேரன்பும் உடைய பெண்மணியாவாள்; பின்னிவிடப் பெற்றுப் பின்புறத்தே தாழ்ந்துகிடக்கும் கூந்தல் அழகையும், நெய்தல்மலர்போல் நிறங்கொண்டு அருள் ஒழுகும் கண்களின் அழகையுமே ஆயுட்காலம் முழுதும் கண்டு மகிழலாம் போல் தோன்றும்; ஆதலின், இளைஞன் உள்ளம், அவள்பால் கொண்ட ஆசைக்கு அடிமையாகிவிட்டதில் வியப்பொன்றும் இல்லை; மேலும், அவன் பிரிந்து வருகையில், பொருள்வயிற் பிரிதல் ஆடவர்க்கு இயல்பு என்ற உலகியற்கு அஞ்சிப் பிரிவிற்கு உடன் பட்டாள் எனினும், 'இதற்கு முன் சிறிது காலமும் பிரிந்தறியா இவனைப் பிரிந்து எவ்வாறு இத்துணைக் காலம் ஆற்றி வாழ்வேன்' என்று எண்ணி எண்ணி வருந்தியே வழி அனுப்பினள்; அவள் அழகிற்கும் அன்பிற்கும் மேலாக, அக்காலை அவள் கொண்ட துயர்நிலை அவன் உள்ளத்தை மிகுதியும் வருத்துவதாயிற்று; அதனால், அது அவள் ஆசைக்கு முழுதும் அடிமையாகிவிட்டது.

உடனே அது, வழியே சென்று கொண்டிருந்த இளைஞன் கால்களைத் தளைத்துவிட்டது. 'அன்பும் அழகும் உடையாரைப் பிரிந்து வருவதே தவறு; நமக்கு இன்பம் தருவார் வருந்த விட்டுவருவது மேலும் தவறாம்; அவர் துயர் போக்கவேண்டிய கடமை கருதியாவது மீண்டு வீடு அடைதல் வேண்டும்' என்றது; இளைஞன் ஏற்கெனவே காதலால் கட்டுண்டவன்; காதலால், தான் பண்டு பெற்றிருந்த நாணையும் நல்லாண்மையையும் இழந்து பெற்றவன்; அத்தகையான், தன்னால் காதலிக்கப் பெற்றாரின் துயர் நிலையினைப் பிறர் எடுத்துக்காட்டிய பிறகும், அவர்பால்

சென்று அவர் துயர் போக்காது, வேறுவினை மேற்செல்லத் தயங்குவானாயினன்; ஆகவே அவன் ஆங்கேயே நின்றுவிட்டான்.

பொருள் சேர்க்கும் நன்முயற்சியில் முனைந்து முன் வந்த இளைஞன், திடீரென நின்றுவிட்டதையும், அவனுக்கு அவன் உள்ளம் கூறுவனவற்றையும், அவ்வுரைகேட்டு அவன் மயங்கி நிற்பதையும் அவன் அறிவு உணர்ந்தது; உடனே அது, அவன் உள்ளத்தை நோக்கி, "எவ் வினையும் தொடங்காமல் இருப்பது நன்று; தொடங்கினால், அதைக் குறைவற முடித்துவிடுதல் வேண்டும்; தொடங்கி இடையே மடங்குதல் மாண்புடையார்க்கு அழகன்று, ஆகவே 'எண்ணித் துணிக' என்ப; தொடங்கிவிட்டோம், இடையே கைவிடுதல் அறியாமை மட்டும் அன்று; நம் செயல் பிறரால் இகழவும்படும்; ஆதலின் மேற்கொண்ட வினையை மறந்து வழியே மீளுதல் அறிவும் அன்று, ஆண்மையுமாகாது; ஆகவே, உள்ளமே! நீ விரைந்து எதையும் முடிவு செய்துவிடாதே; சிறிது பொறுமையோடிரு; அவன் முயற்சியைத் தடைசெய்யாதே" என்று கூறலாயிற்று

அறிவின் அறவுரை கேட்ட இளைஞன் கால்கள், உள்ளத்தின் வழியே ஊர்நோக்கிச் செல்வதை நிறுத்திக் கொண்டன; உள்ளம் பின்புறம் ஈர்ப்ப, அறிவு முன்னே உந்த, இளைஞன் செய்வதறியாது முன்னோக்கியும் செல்லாது, பின்நோக்கியும் வாராது நின்ற நிலையிலேயே இருப்பானாயினன்; உள்ளம் காட்டிய காதலியின் துயர நிலை அவனை வீடுநோக்கிச் செல்லத் தூண்டும், பிறரால் பழிக்கப்படுவாய் என்ற அறிவின் அச்சுறுத்தல், உள்ளம் வழிச் செல்வதைத் தடுக்கும்; இவ்வாறு உள்ளத்திற்கும், அறிவிற்கும் இடையே உண்டான இப் போராட்டத்தில் ஒரு பாற்றுணியமாட்டாமல் இளைஞன் வருந்தி வாடலாயினன், இத்தகைய போராட்டத்தின் விளைவால், தன் உடல் கெட்டு அழிந்துவிடுமோ என்று அஞ்சினான், அஞ்சினான் கண் முன் வந்து நின்றது ஒரு காட்சி.

இரண்டு பெரிய ஆண் யானைகள் மதங்கொண்டு மாறு பட்டுப் போரிடுகின்றன ; அவை இரண்டின் போராட்டத்தின் நடுவிடமாக அமைந்துவிட்டது ஒரு கயிறு; யானைகள் இரண்டும், அக் கயிற்றின் இரு முனைகளையும் பற்றி ஈர்க்கின்றன , இக்காட்சி பள்ளியில் நடைபெறும் கயிறீர்த்தல் (Tug-of-war) விளையாட்டை நினைப்பூட்டுவதாக அமைந்துளது ; யானைகள் இரண்டுமே, ஆற்றலாலோ அன்றி எண்ணத்தாலோ ஒன்றற்கொன்று இளைத்தன அல்ல ; இந்நிலையில், அவற்றின் இடைப்பட்ட கயிறு, எவ்வளவு புதுமையும் எத்துணைப் பருமையும் உடையதாயினும், அது அறுந்து அழியாது அப் போராட்டத்தின் இறுதி வரை நின்று நிலைக்கும் என்பது அரிதினும் அரிது ; ஆனால், அவ் யானைகள் இப்போது பற்றியிருக்கும் கயிறோ, நைந்து தேய்ந்து போன புரிகளைகொண்ட ஒரு பழங் கயிறு ! அது, அப் போராட்டத்தின் தொடக்கத்திலேயே அழிந்துபோவது உறுதி ; அது சிறிது சிறிதாக அறுந்து அழிந்துகொண்டே வரவும் தொடங்கிவிட்டது.

அக் காட்சியினை மேலும்காண அஞ்சினன் இளைஞன் ; அறிவும் உள்ளமும் மாறுபட்டுப் பொரும் நிலைக்களமாம் தன் உடலும், யானைகளால் ஈர்ப்புண்ட கயிறேபோல் அழிய வேண்டியது தானே என்று எண்ணி இரங்கலாயினன்

'புறந்தாழ்பு இருண்ட கூந்தல், போதின்
நிறம்பெறும் ஈரிதழ் பொலிந்த உண்கண்,
உள்ளம் பிணிக்கொண் டோள்வயின் நெஞ்சம்
'செல்லல் தீர்க்கம் செல்வாம்' என்னும் ;
'செய்வினை முடியாது எவ்வம் செய்தல்
எய்யா மையோடு இளிவுதலைத் தரும்' என
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும் ; ஆயிடை
ஒளிறேந்து மருப்பின் களிறுமாறு பற்றிய

தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்! என் வருந்திய உடம்பே.”

(நற்றிணை: உஅ௪.)

இவ்வாறு, உள்ளத்திற்கும் அறிவிற்கும் இடையே நடைபெறும் போராட்டம், இருபெரும் யானைகளுக கிடையே நடைபெறும் போராட்டத்திற்கு ஒப்பாகும் என்று கூறி, அப் போராட்டத்தின் விளைவால், அவ்வுயரிய உரனும் உள்ளமும் உடையார் தம் உடல், நலம் குன்றிக் கெட்டு அழிவதற்குப் போரிடும் இரு யானைகள்பற்றி ஈர்க்கும் தேய்புரிப் பழங்கயிறு, புரி நைந்து அறுந்து அழிவதை உவமையாக்கி அழகிய பாடல் ஒன்று பாடி, உயர்ந்தோர் ஒழுக்கநெறி உணர்த்திய இம் முதுபெரும் புலவர்க்குத் தேய்புரிப் பழங்கயிற்றினர் என்ற பெயரிட்டுப் போற்றினர் தம் புலமையின் சிறப்பே சிறப்பு!

## ௧௨. மீனெறி தூண்டிலார்

மீனெறி தூண்டிலார் என்ற இப்புலவர் பாடிய பாட்டொன்று குறுந்தொகைக்கண் இடம் பெற்றுளது. ஒரு தலைவனும், ஒரு தலைவியும் காதலித்துக் களவொழுக்கம் மேற்கொண்டு ஒழுகுகின்றனர்; தலைமகன், கற்பொழுக்கத்தினும் களவொழுக்கமே இன்பம் நிறைந்தது எனவும், கற்பொழுக்கநெறியினை மேற்கொண்ட பின்னர், களவொழுக்க இன்பத்தைப் பெறல் இயலாது எனவும் எண்ணினான்.

அதனால், களவொழுக்கத்தினையே மேலும் சிலநாள் மேற்கொள்ள விரும்பினான்; ஆனால், அது தலைவிக்குத் துயர் தருவதாயிற்று; களவொழுக்க நெறிநின்ற தலைமகன், தலைமகளைக் காண இரவென்றும் பகலென்றும் பாராமல், கடத்தற்கரிய வழிபல கடந்து வருதல் வேண்டும், அவன் வரும் வழிஏதங்களை எண்ணும் தலைமகளுக்குத் துயர் மிகும், அவ்வழியில் அவன் வருங்கால், அவனுக்கு ஏதேனும் இடையூறு நேரின் என்னாம் என எண்ணி எண்ணி ஏங்குவாளாயினள்; இதனால், அவள் நலன் குன்றத் தொடங்கிவிட்டது; அவள்நிலை கண்ட தோழி, "தலைமகன் தவறாது வந்து தலையளி செய்யவும் நீ நலம் குன்றுவது ஏன்? எங்கே ஒழிந்தன நின் நலன் எல்லாம்?" என்று வினவினாள்.

அதற்கு அவள், "நான் இங்கு இருக்கின்றேன்; அவர் நலன் என் நலன்; ஆகவே, என் நலன் எல்லாம், அவர்க்குத் துணைபுரிவான் வேண்டி அவரோடு தங்கிவிட்டன; அதைப் பெறல் என்னால் இயலாது; அதை மீண்டும் நான் பெறல் வேண்டுமாயின், அவர் என்னை மணந்துகொள்ளுதல் வேண்டும்" என்று விடை கூறினாள். இக்கருத்து அடங்கியது அப்பாட்டு.

அதில், தலைமகனுடைய காட்டைப்பற்றிக் கூறுங்கால், "அது யானைகள் நிறைந்தது; யானைகளுக்கு உணவான

மூங்கில்களும் அங்கே நிறைய உண்டு; வானுற ஓங்கிவளர்ந் திருக்கும் அம் மூங்கில்களை யானைகள் பற்றி வளைத்து அவற்றின் தழைகளை உண்ணும்; அவை, அவ்வாறு தின்று கொண்டிருக்கும்போது, அக்காட்டிற்கு அணித்தே உள்ள தினைப்புனங்களைக் காவல் புரிவோர், தினைக்கதிர்களை உண்ணவரும் யானை போன்ற கொடியவைகளை விரட்ட வேண்டிக் கவண் வீசுவர்; அக்கவணொலி, மூங்கில் தழைகளை தின்றுகொண்டிருக்கும் யானைகளின் காதிற் பட்டவுடனே, பற்றியிருந்த மூங்கில்களைக் கைவிட்டு யானைகள் பருண்டு ஓடிவிடும். யானைகளால் விடப்பட்ட மூங்கில்கள் விரைந்து விண்ணோக்கிப் பாயும்," என்று பாடியுள்ளார்.

யானையின் பிடியினின்றும் விடுபட்ட மூங்கில்கள், விண் நோக்கி விரைதற்கு, தூண்டில்கொண்டு மீன் பிடிப்போன், தன் தூண்டிலில் மீன் சிக்குண்டுவிட்டது என்பது அறிந்தவுடனே, அதை விரைந்து மேலே தூக்குவன். அந்நிலையில் அத்தூண்டிற்கோல் எத்துணை விரைவாக, எத்துணை உயரம் மேல்நோக்கி எழுமோ, அத்துணை விரைவாக, அத்துணை உயரம், அம்மூங்கில்கள் நிமிர்ந்துவிடும் என்று உவமைகூறி, மீனெறி தூண்டிலார் என்ற பெயரையும் பெற்றார் என்ப.

"யானே, ஈண்டை யேனே; என் நலனே
ஏனல் காவலர் கவணொலி வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
**மீனெறி தூண்டிலின்** நிவக்கும்
கானக நாடனொடு ஆண்டொழிந் தன்றே.' (குறுந். ருச.)

கபிலர், தாம் பாடிய ஐங்குறுநூற்றுச் செய்யு ளொன்றில், "மீனெறி தூண்டில" என்ற இதே உவமை யினை இந்த ஆசிரியர், இந்த உவமையினை எந்தப் பொருளை விளக்க மேற்கொண்டுள்ளாரோ, அதே பொருளை விளக்க மேற்கொண்டுள்ளார்; இவ்வுவமையினையேயன்றி, "மீனெறி தூண்டிலின் நிவக்கும்" என்ற தொடரையும் மேற்கொண் டுள்ளார்.

"சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்
குரங்கின வன்பறழ் பாய்ந்தென, இலஞ்சி
மீனெறி தூண்டிலின் நிவக்கும்." (ஐங்குறு : உ௭அ)

இதனால் கபிலர் காலத்திற்கு முன்னரே இப்பாட்டும், இப்பாட்டில் ஆளப்பட்டுள்ள யானைகைவிடு பசுங்கழை மீனெறி தூண்டில் என்ற அழகிய உவமையும் அறிஞர்களால் பாராட்டப் பெற்றனபோலும் என எண்ணுதலும் கூடும்.

---

# கரு. விட்ட குதிரையார்

தமிழிலக்கியச் செய்யுட்களுள் மக்களுக்குத் திருந்திய பண்பாட்டினை உணர்த்தவல்லன அகத்துறை தழுவிய செய்யுட்களே ஆம்; அவ்வகத்துறையினுள் பெண்களின் பண்பு நலங்கள் பலவும் தோன்றி விளங்கும் இடம் களவொழுக்கமே ஆதலின், புலவர்களெல்லாம் அக்களவொழுக்கக் கைகோள் பற்றியே பெரிதும் பாடுவாராயினர். விட்ட குதிரையார் பாடிய பாடலாக நமக்குக் கிடைத்துள்ள ஒரு பாட்டும் இக் களவொழுக்க நெறியினையே உணர்த்துகிறது.

தலைவியின் அன்பைப்பெற்ற தலைமகன் ஒருவன் களவொழுக்க நெறியிலேயே மேலும் சில நாள் செல்ல விரும்பினான்; தலைவியைக் களவிற் காணல் அரிது என்பதையும் அவன் அறிவான்; பலநாள் முயன்றும் அவளைக் காணமாட்டாது வறிதே மீண்டும் உள்ளான்; என்றாலும், அவன் உள்ளம் அக் களவொழுக்க இன்பத்தையே பெரிதும் விரும்புவதாயிற்று.

ஒருநாள் தலைமகன் ஊர் சென்றான்; அவள் தோழியைக் கண்டான்; தன் விருப்பத்தினை ஏற்குமாறு வேண்டினான்; அவளும் அதை ஏற்றுக்கொண்டு தலைமகனை எவ்வாற்றானும் ஆண்டுக் கொணர்வதாகக் கூறிச்சென்றாள்; சென்று தலைமகளைக் கண்டாள்; தலைமகளோ, அவனைக் காணமாட்டாமையால் கொண்ட துயரும் சினமும் உடையவளாய்க் காணப்பட்டாள்.

தோழி, மக்களின் உள்ளப்பண்பு உணர்ந்தவள்: இந்நிலையில், அவளிடம் தலைவன் விருப்பத்தினைக் கூறினால், நம்நிலை குறித்து வருந்தாது, அவன்நிலை குறித்து வருந்துகின்றனளே எனச் சினப்பள் என அறிவாள்; ஆகவே, 'தலைமகன் பெரிதும் அறிவற்றவன்; அவனை எண்ணி எண்ணி வருந்தும் நம் வருத்தத்தினை அறியாது கொன்னே உளனே' என்று தொடக்கத்தில் தலைவனைப் பழித்தாள்.

தலைவி சிறிது நெகிழ்ந்து தன் சொற்களுக்குக் காது கொடுத்துள்ளாள் என்பதை அறிந்தபின்னர், "நாம் வருந்துகிறோம் இவ்வாறு; அவனாவது வருத்தமின்றி வாழ் கின்றானா? அவனும் நம்மைப்போன்றே நம் நலன்வேண்டி, அதையே எண்ணி வருந்துகின்றான்; அவன் வருந்த நிலை யினைக் கண்டுவந்த சிலா, கடுங்கோடையால் உண்ணும் உணவையும் குடிக்கும் நீரையும் இழந்ததோடு நில்லாமல், கோடையின் கொடிய வெம்மையால் வாடி வருந்தும் நம் காளைமாடுகளைப்போல், அவனும் நம் நலம்பெற மாட்டா மையால் மெலிந்து வாடுகின்றான் என்ப; என்னே அவன் அறியாமை!" என்று கூறினாள்.

"விட்ட குதிரை விசைப்பின் அன்ன
விசும்புதோய பசுங்கழைக் குன்ற நாடன்
யாம்தற் படர்ந்தனம் அறியான்: தானும்
வேனில் ஆனேறு போலச
சாயினன் என்பநம் மாணலம் நயந்தே." (குறுந்: எச)

தலைமகள், தன் துயரினும் தலைவன் துயரினை எண் ணியே வருந்தும் இயல்பினள் ஆதலின், அவன் வாடி மெலிகிறான் எனக் கூறக் கேட்டவுடனே தன் துயரையும், தன்துயர் பெருக ஒழுகும் அவன் தவறையும் மறந்து, அவனை எவ்வாற்றானும் கண்டு அவன் துயர் போக்குதல் வேண்டும் என்று எண்ணினாள் அவனைக் காணும் வழி வகைகளைச் செய்யுமாறு தோழியை வேண்டினாள்; தோழி, தான் முன்னியது எளிதில் முடிந்தமை கண்டு மகிழ்ந் தாள்; இக்காட்சியைக் காட்டும் புலவர், காட்டு மூங்கில் வளைந்து மேல் எழுவதற்கு அவிழ்த்து விடப்பட்ட போர்க் குதிரைகள் விரைந்து பாய்வதை உவமை காட்டி அதனாலேயே விட்டகுதிரையார் எனவும் பெயர்பெற்றார்.

---

## ௧௪. வில்லக விரலினர்

"புல்லிதழ் பூவிற்கும் உண்டு" என்ப. கற்பே பொற்பெனக்கொண்ட தலைவி, அறிவே உருவெனவந்த தோழி, அருள் வடிவாம் செவிலி, அன்பின் திருவுருவாம் நற்றாய் போன்ற மகளிர்குலமாணிக்கங்கள் வாழ்ந்த தமிழகத்தில், பரத்தையர் போன்ற பண்பிலா மகளிர் சிலரும் வாழ்ந்திருக்கக் காண்கிறோம். தலைவி, தோழி, நற்றாய், செவிலி முதலாம் உயர்குலமகளிர்தம் மாண்புகளைப் பாராட்டிப் பரவும் பழந்தமிழ்ப் பாடல்கள், பரத்தையர் என்ற இப்பழி நிறை மகளிரைப்பற்றியும் பகர்கின்றன. பரத்தையரொழுக்கம் தமிழகத்தில் பண்டுதொட்டே இருந்தது என்பது தமிழர் தம் நாகரிகப் பண்பாட்டிற்கு ஓர் இழுக்கே.

பரத்தையர்ப் பிரிவு பழந்தமிழ்ப் பாடல்களில் இடம் பெற்றமைக்குப் புலவர்கள் பலவாறு அமைதிகாண முயல்வர். தலைவியின் ஊடலுக்குக் காரணம் வேண்டும் எனப் பிற்காலப் புலவர்கள் படைத்துக்கொண்ட ஒரு துறையே பரத்தையர் பிரிவு என்பர் சிலர். பரத்தையர் உறவு மேற்கொண்டு, தலைமகன் ஒழுக்கத்தின் இழுக்கிய காலத்தும், தலைவி தன்னிலையில் சிறிதும் மாறாமல் அத்தலைவன்பாட்டுக் குறையாத அன்புகொண்டொழுகினாள் எனக் கூறித், தலைமகளின் கற்பின் பொற்பினைக் குன்றிலிட்ட விளக்கெனத் தோன்றச் செய்யவே இப் பரத்தையர்ப் பிரிவொழுக்கம் மேற்கொள்ளப்பட்டது என்பர் மற்றும் சிலர். மணிவாசகப்பெருந்தகையாரின் திருச்சிற்றம்பலக் கோவைக்கு உரைகண்ட பேராசிரியர், "பரத்தையிற் பிரிவென்பது தலைமகளை வரைந்தெய்திய பின்னர், வைகலும் பாலை நுகர்வானொருவன் இடையே புளிங்காடியும் நுகர்ந்து அதன் இனிமையை நுகர்ந்தாற்போல, அவள் நுகர்ச்சியின் இனிமையறிவதற்குப் புறப்பெண்டிர்மாட்டுப் பிரியாநிற்றல்; அல்லதூஉம், பண்ணும் பாடலும் முதலாயின காட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால் தான் எல்லார்க்குந் தலைவனாதலின் அவர்க்கும் இன்பம் செய்யப் பிரியாநிற்றல் என்றுமாம்; அல்லதூஉம் தலை

மகளை ஊடலறிதற்குப் பிரிதல் என்றுமாம்," என்று கூறி அமைதிகாண முயல்வர்

பரத்தையர் ஒழுக்கத்திற்குப் புலவர்கள் எத்தகைய அமைதி காட்டினும், அவ்வொழுக்கம் இழுக்குடையது என்பதில் சிறிதும் ஐயம் இல்லை, வள்ளுவப் பெருந்தகையார் பத்துக் குறட்பாக்களில் அவ்வொழுக்கத்தைப் பழிப்பர் 'அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய்தொடியார,' 'பயன் தூக்கிப் பண்புரைக்கும் பண்பில் மகளிர்,' 'பொருட் பெண்டிர்,' 'இருமனப் பெண்டிர்' எனப் பரத்தையர்களையும் 'நிறைநெஞ்சம் இல்லவர்,' 'திருநீக்கப் பட்டார்' என அப்பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டாரையும் பழிப்பது காண்க

இவ்வாறு பலராலும் பழிக்கப்பெறும் பரத்தையருள், பொருளையே பொருளெனக் கருதும் புல்லொழுக்கம் மிக்க சேரிப் பரத்தையரைப்போலன்றி, தலைமகனின் அன்பு ஒன்றையே கருதிக் காதல்கொண்டு அவன் ஒருவனை அன்றிப் பிறர் எவரையும் மனத்தாலும் தொடா மாண்புடையராய் வாழ்ந்தோரும் உளர் அவர்களுள் சிலர் தலைமகனை முறைப்படி மணந்து பின்முறை வதுவைப் பெருமனைக் கிழத்தியாம் பெருநிலை பெற்றோரும் உளர். அத்தகையார்களை இற்பரத்தை, காதற்பரத்தை என்ற பெயர் சூட்டிப் பாராட்டுகின்றன பழந்தமிழ்ப் பாடல்கள். இத்தகைய பண்புடைய பரத்தையர் பழந் தமிழகத்தில் பலர் வாழ்ந்திருந்தனர், மாதவியின் மாண்புகண்டவர், பரத்தையர் குலம் முழுவதையுமே பழிக்க எண்ணார் அன்றோ? அத்தகைய பண்புடைய பரத்தை யொருத்தியின் உள்ளத்தின் உயர்வைப் புலவர் வில்லக விரலினார் தாம்பாடிய பாட்டொன்றில் விளக்கியுள்ளார்.

தலைவன் பரத்தையரொழுக்கம் மேற்கொண்டான் என்பதறிந்த தலைமகள், தலைவனின் தவறான ஒழுக்கத்திற்குப் பரத்தையே காரணமாம் எனக் கருதிப் பரத்தையைப் பழிக்கலாயினள்.

தலைவியின் பழியுரைகளைப் பரத்தை கேட்டாள்; தலைவியின் செயல் கண்டு வருந்தினாள். "தலைவனை ஆசை காட்டி ஆட்கொண்டேன் என்று கூறுகின்றனர்; நான் அத்தகையாளல்லள்; தலைவர்மாட்டு எனக்கு அன்பு உண்டு என்பது உண்மை; ஆனால், அதற்காகத் தலைமகள் வருந்த அவரை வலிந்து பெறவோ அவர் என் வீட்டிலேயே இருக்கவோ விரும்புவேனல்லன்; ஈண்டு அவரே வந்தார்; வந்தாரை மகிழ்ந்து வரவேற்று வாழ்வதில் தவறு இல்லை என்றே அவரோடு வாழ்வேன்; பிரிந்துசெல்ல அவர் விரும்புவராயின், பிரியவிட்டுத் தனித்திருந்து வருந்தி வாழ்வேனேயன்றிப் போகவிடாது தடை செய்யேன்; இவ்வாறாகவும் தலைவி என்னைப் பழிப்பது ஏனோ?" என்று கூறி வருந்தினாள். அன்பின் விழையாது பொருள் விழையும் பரத்தைமை இழந்து, அன்புகொண்டு விழையும் அறிவுடையளாய இப்பரத்தையின் பண்புடைமையினைப் பாராட்டுவோமாக!

"பொய்கை ஆம்பல் அணிநிறக் கொழுமுகை
வண்டுவாய் திறக்கும் தண்டுறை யூரனொடு
இருப்பின் இருமருங் கினமே; கிடப்பின்
வில்லக விரலிற் பொருந்தி அவன்
நல்லகம் சேரின் ஒருமருங் கினமே." (குறுந். ௩௭0)

பண்புடைய பரத்தை யொருத்தியின் நலம் பாராட்டும் இப்பாட்டில் தலைவன் தன்மனை வந்தக்கால், அன்பால் அவனோடு இரண்டறக் கலந்துபோம் அவள் நிலைக்கு வில்லைப் பிடித்த கைவிரல்கள் ஒன்றோடொன்று நெருங்க இணைந்து நிற்கும் நிலையினை உவமை காட்டிய காரணத்தால், இப்பாட்டாசிரியர்க்கு வில்லக விரலினார் என்பதே பெயராய் அமைந்தது; பரத்தை யொருத்தியின் பண்புளம் கண்டு பாராட்டும் புலவர், விற்பயிற்சியும் உடையார் என்பது அவ்வுவமையால் அறியப்படுதல் காண்க.

## கரு. ஓரிற் பிச்சையார்

'இசையும், இன்பமும், ஈதலும் மூன்றும் அசைவுடன் இருப்போர்க்கு அரும்புணர்வில்' என அறிந்த உள்ளத்தனைய தலைவன், தன் மனைவியை அரிதிற்பிரிந்து பொருள் தேடச் சென்றுவிட்டான்; சென்றக்கால், 'வினையை விரைவில் முடித்துக்கொண்டு கார்காலம் தொடங்க வந்து சேர்வன்; வருந்தற்க' என்று கூறிச் சென்றிருந்தான். அவன் மனைவியும் தன் கடமை உணர்ந்தவள்; 'அறவோர்க்களித்தலும், அந்தணர் ஓம்பலும், துறவோர்க்கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின் விருந்து எதிர்கோடலும்' மகளிரின் தலையாயகடன்; அக்கடனாற்ற பெரும்பொருள் தேவை; அதைப பெற்றுவரச் செல்கிறான் கணவன் எனத் தெளிந்த உள்ளத்தளாய் அவன் செல்ல இசைந்தாள்; செல்ல இசைநதது அவள் கடமை உள்ளம்; ஆனால் அவள் அன்புள்ளம், அவன் பிரிவைப் பொறாது பெரிதும் வருந்துவதாயிற்று; அவன் பிரிவையே எண்ணி எண்ணித் துயருறுவாளாயினள்.

இவளுக்கு ஒரு தோழி; அவள்வேறு தான்வேறு என வாழ்ந்தறியாதவள்; இவள் துயரைத் தன்துயரெனக் கொண்டாள்; அவள் துயர்போக்க எவ்வளவோ முயன்றாள்; முடியவில்லை; அவன் வந்தாலன்றி அவள் துயர் தீராது என உணர்ந்தாள்; அவன் வரவை எதிர்நோக்கும் தோழி, அவன்வரும் காலத்தை அறியப் பெரிதும் விரைந்தாள்; அவன் கார்காலத்தொடக்கத்தே வருவதாகக் கூறிச் சென்றான்; ஆகவே, கார்காலம் எப்போது வரும் என்பதை அறிந்தால், அவன்வரும் காலதனதை அறிந்து கொள்ளுதல் கூடும்; ஆகவே கார்காலம் தொடங்கும் காலத்தை அறிநதுகொளள விரும்பினாள்; ஆனால், அதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை; ஒரு பொருளை எதிர்நோக்கி யிருபபார்க்கு உள்ளம் ஒருவழி நில்லாது; அது எப்போது வரும், எப்போது வரும் என்ற ஏக்கமே பெரிதாம்; அதனால் அதுவரும் காலத்தை ஆராய்ந்து

அறியும் ஆற்றல் அவர்க்கு இல்லாது போகும்; அது வரும் காலத்தை அறிந்துகொள்வதில் அவர்க்கிருக்கும ஆர்வம், அது எப்போது வரும் என்பதை எதிர்ப்படுவார் எவரையும் கேட்கத் தூண்டும்; இஃது உலகியல். மேலும் நாட்களை அளந்து அறிந்து காட்டவல்ல நாட்காட்டிகள் (Calendar) இல்லாக்காலம் அது; கோளின் நிலை அறிந்தே நாளை அறிந்துவந்தனர் அக்கால மக்கள்; கோள்களின் நிலைமாற்றங்களை அறியவல்லாராலேயே நாட்களை அறிந்து கூறல் இயலும்; அவ்வறிவினை அக்கால மக்கள் அனைவரும் பெற்றிருந்தாரல்லர். அதை அறிந்து கூறவல்ல அறிவர் சிலர் இருந்தனர்.

அறிவராவார், காம வெகுளி மயக்கமற்று, இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற முக்கால நிகழ்ச்சிகளை முற்றும் உணரவல்ல மூதறிவுடையோராவர்; "மறுவில் செய்தி, மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன்" (புறத்: ௨௦), அவர் கூறும் அறவுரைகளைக் கேளாரும், கேட்க மறுப்போரும் அக்காலத்து அரியர் ஆதலின், தலைவனும் தலைவியும் அவர் கூறும் அறநெறி நின்று வாழக் கடமைப்பட்டவராவர். ஆதலின், அவர்க்கு நல்லனகூறி, அல்லன கடிதலே அறிவர்தம் கடன் என மேற்கொண்டிருந்தனர்; தலைவனும், தலைவியும் அறநெறியிற் பிறழ்ந்தபோது வன்சொல் பல வழங்கி இடித்துரைத்து நன்னெறிப்படுத்துவதிலும் அவர்கள் நாட்டம் உடையராவர்.

"கழிவினும், வரவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும், அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய வாகும் என்ப."

"சொல்லிய கிளவி அறிவர்க்கும் உரிய."

"இடித்துவரை நிறுத்தலும் அவர தாகும்,
கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்."

(கற்பு: ௧௨, ௧௩, ௧௪)

என்று அக்கால அறிவர்க்கு இலக்கணம் வகுப்பர் ஆசியர் தொல்காப்பியனார்.

தலைவன்வரும் கார்காலம் எப்போது வரும் என்பதை அறியத் துடித்த தோழி, அது அறிந்து கூறவல்ல அறிவரை அடைந்தாள்; அவரை வணங்கினாள்; "பெரியீர்! எம் தலைவர் வாடைவீசும் குளிர்காலத்தே வருவேன் எனக் கூறிச் சென்றுளார்; அக்காலம் எப்போது வருமோ என்று ஏங்கி வருந்துகிறாள் எம் தலைவி; அக்காலம் எப்போது வரும்! அருள் கூர்ந்து அறிந்து கூறுங்கள்; கூறுவீராயின் உங்களுக்குப் பெரும் புண்ணியம் உண்டாம்; நீங்கள், உங்கள் உணவிற்காகவேண்டி ஊர் முழுதும் அலைந்து திரியாமல், குற்றம் தீர்ந்து விளங்கும் தெருவில், நாய் உறைதல் அறியா நன்மைமிக்க வீடு ஒன்றிலேயே, செந்நெல் அரிசியாலாய சோற்றையும், தூய வெண்ணிற நெய்யையும் பெற்று வயிறார உண்டு, பனிக்காலத்தே விரும்பிக் குடித்தற்காம வெப்பம் பொருந்திய நீரையும் செப்புக் கலத்தில் வேண்டும் அளவுபெற்று மகிழ்வீராக," என்று வாழ்த்தி நின்றாள்.

இச்சிறு நிகழ்ச்சியை, ஒரு புலவர் அழகிய ஓவியமாக்கி நமக்கு அளித்துள்ளார்.

" ஆசில் தெருவில், நாய்இல் வியன்கடைச்
செந்நெல் அமலை வெண்மை வெள்ளிழுது
ஓரிற் பிச்சை ஆர மாந்தி
அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச் செப்பில் பெறீஇயரோ நீயே!
மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை
எக்கால் வருவ தென்றி?
அக்கால் வருவர் எம்காத லோரே." (குறுந்: உஎஎ)

அறிவர், தமக்கு வேண்டும் வெண்ணெய் கலந்த செந்நெற் சோற்றினை வீடுதோறும் சென்று இரந்து உண்ணாமல், ஒரு வீட்டிலேயே பெற்று உண்டனர் என்றும், அவர் அவ்வாறு உண்ட உணவை ஒரு வீட்டாரே இட்டனர் என்றும் கூறி, அவ்வுணவை ஓரில் பிச்சை என்ற பெயரிட்டுப் பெருமைப்படுத்திய சிறப்பால், இப்புலவர், ஓரிற் பிச்சையார் என்ற பெயர் பெற்றுப் பெருமை உறுவாராயினர்

குப்பையும், கூளமுமாம் கழிபொருளும், கழிநீரும் கலந்து முடைநாற்றம் வீசும் நகரங்களையும்,

"முகத்தான் அமர்ந்து இனிதுநோக்கி, அகத்தானும்
இன்சொ லினதே அறம்." (திருக்: கூ௩)

என்ற பண்டைத் தமிழ்ப்பண்பை மறந்து, புலிநிகர் பெரு நாய்களை வாயிலில் நிறுத்தி, 'நாய்கள் ஜாக்கிரதை' (Beware of dogs) என்ற எழுத்தோவியங்களை எழுதி மாட்டும் நாகரிகம் நனிவிளங்கும் மாடங்களையும், வீடு நோக்கிவரும் பிச்சைக்காரர்களை ஓட ஓட விரட்டுவோரும், வாயால் இல்லை என்பதற்கு மாறாக நாமும் இட்டோம் என்று சிறிதே அளித்துக் கையால் இல்லை என்று கூறி வழி அனுப்புவோரும் ஆய பெருங் கொடைவள்ளல்களையும்கொண்ட இன்றைய தமிழுலகம், ஆசில் பெருந் தெருக்களையும், நாயில்வியன் கடைவீடுகளையும், வீடுநோக்கி வந்த பிச்சைக்காரர், மேலும் ஒரு வீடு சென்று இரக்கவேண்டிய நிலை இன்றி வயிறார உண்ணுமாறு வெண்ணெய் கலந்த செந்நெற் சோறும, வெந்நீரும் விரும்பித்தரும் பேருள்ளம் படைத்த பெருமக்களையும் கொண்ட பண்டைத் தமிழுலகத்தின் பண்பறிந்து அறிவுகொள்ளுமாக.

---

## கக௯. கங்குல் வெள்ளத்தார்

உலக உயிர்கள் அனைத்தும் பிறப்பால் ஒத்த நிலையின என்றாலும், அவை தம்முள் வேறுபடுவது அவை ஒவ்வொன்றும் மேற்கொண்டொழுகும் தொழில் வேற்றுமையான்ஆம் என்று கூறுகின்றார் ஆசிரியர் வள்ளுவப் பெருந்தகையார் :

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்." (திருக்: கஎ௨)

இஃது ஓரளவு உண்மையே எனினும், ஊன்றி நோக்கியவிடத்து, அவ்வேறுபாடு, அவ்வுயிர்கள் மேற்கொள்ளும் தொழில் வேறுபாட்டான் ஆகிறது என்பதினும், அவ்வுயிர்கள்தம் மனவேறுபாட்டான் ஆகிறது எனக்கொள்வதே பொருத்தமாதல் விளங்கும். ஒருவரின் சொல் வேறுபாடு, தொழில்வேறுபாடுகளுக்குக் காரணமாய் நிற்பது அவர்தம் மனவேறுபாடேயாம்.

"உள்ளத்தில் உண்மையொளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண்டாகும்."

என்ற பாரதியார் பாட்டும்,

"மனத்துக்கண் மாசிலனாதலே அறமாம்."

என்ற வள்ளுவர் வாக்கும்,

"நினைத்தலும செய்தலோடு ஒக்கும்."

என்ற பரிமேலழகர் உரையும் இக் கருத்தையே அரண் செய்தல் காண்க.

மக்கள், இவ்வாறு ஒத்த உள்ளத்தினராய் இல்லாது இருத்தலின், அவர்களால் காணப்படும் பொருள் ஒன்றே ஆகவும், காணும் அம்மக்கள் உள்ளத்தே பல்வேறு எண்ணங்கள் எழுகின்றன. நிலவொளி வீசி எழும் முழுத்திங்கள், உலகில் உள்ள எல்லாவுயிர்க்கும் ஒத்த காட்சியையே அளிக்கின்றது என்றாலும், அதைக் காணும் அரசன்

உள்ளம் பகைவர் நாடுமீது படையெடுத்துச்செல்ல இக் காலம் எத்துணை நல்லகாலம் என எண்ணுகிறது; உழவன் உள்ளம், பயிர்களுக்கு இளைப்பின்றி நீர்பாய்ச்ச இன்பம் அளிக்குமே இக்காலம் என எண்ணுகிறது; கள்ளர் உள்ளம், தம் தொழிலைத் தடைசெய்கின்றதே இந்நில வொளி என அத்திங்களைக் காய்கின்றது; இளைஞர் உள்ளம், மணல்வீடு கட்டி மகிழ்ந்து விளையாடத் துள்ளு கிறது. மணமகன் ஒருவனைப்பற்றி எண்ணுங்கால், மண மகள் தந்தை, மணமகனின் கல்வியின் மாண்பை நோக்கு கின்றான்; மணமகள் தாய், மணமகனின் செல்வச் செருக் கில் சிந்தனை செலுத்துகிறாள்; மணமகள், மணமகனின் அழகிலும் ஆண்மையிலும் அறிவை இழக்கிறாள்;

“ ‘ஆரணம் காண்’என்பர் அந்தணர்; யோகியர் ‘ஆகமத்தின்
காரணம் காண்’என்பர்; காமுகர் ‘காமநன் னூலது’என்பர்,
‘ஏரணம் காண்’என்பர் எண்ணர்; ‘எழுத்து’ என்பர் இன்புலவோர்;
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே ”

என்ற செய்யுளும் இக்கருத்தே கூறுதல் காண்க. புகார் நகரத்தே இந்திரவிழா சிறப்பாக நடைபெறுகிறது. ஆனால், கோவலனோடு கூடியுறையும் வாய்ப்பினளாய மாதவி, மகிழ்ச்சியாற் சிறந்து விழாக் காணச் செல்லுகிறாள்; அவனைப் பிரிந்துறையும் பெருந் துன்பினளாய கண்ணகி கருங்கண்ணளாய்க் கலங்கி நிற்கின்றாள் என்ற காட்சிகளைச் சிலப்பதிகாரம் சித்திரித்துக் காட்டுவதையும் காண்க.

இவ்வாறு காணப்படும் ஒரேபொருள் காண்பார்தம் தகுதிக்கேற்ப அவர்தம் உள்ளத்தே பல்வேறு வகைப்பட்ட கருத்துக்களைத் தோற்றுவிப்பதே அன்றி, காணுகின்ற ஒருவர் உள்ளத்திலேயே காலவேறுபாட்டான், வேறுபட்ட கருத்துக்களைத் தோற்றுவிப்பதும் உண்டு. ஞாயிற்றின் தோற்றம் என்றும் ஒன்றாகவே இருப்பினும், அதை இளமையில் கண்டக்கால் எழுந்த உள்ளக்கிளர்ச்சி, அவர்க்கு முதுமையில் அதைக் காணுங்கால் உண்டாகுதல் இல்லை.

மாலைக்காலம் மனக்கினிய காட்சிகளையுடையது; அணிபெறத் தோன்றும் ஆறும், சோலையும்; மகளிர் சூடிக்கொள்ளுதற்காம் மணமிக்க மலர்களை மனம் உவக்கும்வகை தொடுத்து விலைகூறிவரும் மலர் மகள்; வீடு நோக்கிவரும் ஆக்களைத் தொடர்ந்துவரும் ஆனேறுகள்; ஆணும் பெண்ணுமாய் அணி அணியாய்ப் பறந்துவரும் பறவைகள்; ஆயன்குழல்; கோயில் முழவு ஆகிய இவை அக்கால அணிகளாம். மாலைக்காலத்தின் இம் மாண்புகளில் மாறுதல் நிகழ்தல் எப்போதும் இல்லை; ஆனால், கணவனோடு கலந்துறையும் மகளிர்க்கே இத்தகைய மாலைக்காலம் மனம் நிறை மகிழ்ச்சியினை அளிக்கவல்லதாம். கணவனைப்பிரிந்து தனித்துறையும் தலைமகள் ஒருத்திக்கு அம்மாலைக்காலமும், அக்காலக் காட்சிகளும், அவள் தன் கணவனோடு கூடியிருந்தகாலத்து இன்ப நிகழ்ச்சிகளை நினைவூட்டிப் பெருந் துயரையே தரும். 'காதலர் இல்லாதவிடத்துக் காணும் மாலைக்காலம், கொலைக்களத்தே கொல்ல வரும கொலையாளிகளைப்போல் தோன்றிக் கொடுமை செய்கிறதே!' என்றும், 'இம்மாலை இத்துணைக் கொடியது என்பதைக் காதலரொடு கலந்துறை காலத்து அறியேனே!' என்றும் கூறி வருந்துகிறாள் ஒரு தலைவி.

"காதலா இல்வழி, மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும்." (திருக்: கஉஉச)

"மாலை நோய்செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்தது இலேன்." (திருக்: கஉஉக)

மாலையின் மாண்பு என்றும் ஒன்றேயாகவும், மகளிர், தம் சூழ்நிலைக்கேற்ப, அதை இன்பஊற்றாகவும், துன்பச் சூழலாகவும் மாற்றி மாற்றிக் கொள்வதைப்போன்றே, இரவுக்காலத்தையும் மதிப்பர். தலைவனோடுறையும் பெருவாழ்வு பெற்றாளொருத்திக்கு இரவு பேரின்பம் தருவதாய்த் தோன்றும். அத்தகையாள், இதுகாலை; இது பகல்; இது மாலை; இது நள்ளிருள்; இது விடியல் எனப் பொழுதைப் பிரித்தறியும் ஆற்றலையும் இழப்பள்; அந்த அறிவு நல்லோர் காதலுக்குச் சான்றாகாது என்ப.

"காலையும், பகலும், கையறுமாலையும்
ஊர்துஞ்சு யாமமும், விடியலும் என்று
இப்பொழுதிடை தெரியின பொய்யே காமம்."
(குறுந்: ௩௨)

அப்பேறு பெற்றாள் பொழுது கழிவதையும் அறியாள்;

"செங்கதிர்ச் செல்வன் எழுச்சியும், பாடும்
திங்களும நாளும் தெளிதல் செய்யாா.'

என்று அவர் நிலையினை விளக்குவர் பெருங்கதை யாசிரியர். அத்தகைய இனிய இரவையும, அதில் இன்துயிலையும் பெற்றாள் ஒருமகள், விடிந்ததுபொழுது என அறிவிக்கத் தன் குரலை எழுப்பித தன் துயிலிற்குக் கேடுவிளைத்த சேவலைச் சினந்து சபிக்கும் குறுந்தொகைச் செய்யுள், மகளிர் தம் மனஇயல்பை நன்கு விளக்குவது காண்க.

இவ்வாறு, கணவரோடு உடனுறை மகளிர்க்குப் பேரின்பம்தந்து அளவால் குறுகியதுபோல் தோன்றும் இரவு, தம் கணவர் கல்வி, பொருள் முதலாயின குறித்துப் பிரிந்து சென்றாராகத் தனித்துறை மகளிர்க்கு நிறைதுயர் தந்து பெருகிததோன்றும்; ஊரெலாம் துஞ்சியவிடத்தும் அம்மகளிர்க்கு உறக்கம் வாராது; சென்ற கணவரையே எண்ணி இருக்கும் அவர் உறக்கம் கொள்ளார்; தாம்மட்டும் உறங்காது இருக்கவும, கவலையற்று உறங்கும் ஊரார் மாட்டுப் பெருங்கோபம் உண்டாம்; கணவரோடு இருந்த காலத்தில் கணத்தில்கழிந்த இரவு, பிரிந்து தனித்துறையும் காலத்தில் ஓர்இரவு ஒரு யுகம்போல் நீண்டுதோன்றும். "ஒருநாள் எழுநாள்போல் தோன்றும்." அத்தகைய இரவை,

"கொடியார் கொடுமையின் தாம்கொடிய, இந்நாள்
நெடிய கழியும் இரா." (திருக் ௧௧௬௯)

எனச் சினந்து கூறுகிறாள் ஒரு தலைமகள்.

மகளிர் மாலைக்காலத்தையும், நள்ளிருள் யாமத்தையும் மதிக்கும் மதிப்பீடு இது. மாலைகண்டு மருண்டு, இரவு

கண்டு அரற்றும் தலைமகள் ஒருத்தியின் நிலையினை ஈண்டுக் காண்க. கணவன் யாதோ ஒருகாரணம்பற்றி வெளிநாடு சென்றுளான். தலைவி தனித்துவாழ்கிறாள்; ஒருநாள் மாலை; மாலைக்காட்சிகள் தன் மனத்துயரைத் தூண்டி விட்டதாக வருந்தி நிற்பாளாயினள்; அவள் அருகே அவள் ஆருயிர்த்தோழி நிற்கிறாள்; ஆற்றியிருப்பதே மக ளிர்க்கு அறமாம் என அறிந்த அறிவுடையாளவள்; தான் அறிந்த இவ்வறவுரையினைத் தலைவிக்கு உணர்த்தி ஆற்றக் கடமைப்பட்டவள் தான் என உணர்ந்தாள்; 'இம் மாலைக் காட்சிகளால் மதிமருண்டு மனத்துயர்கொண்டு வருந்து வது அழகன்று; ஆற்றியிருத்தலே அறநெறியொழுகும் அன்புடை மகளிர்க்கு அறமாம்' என்று கூறினாள். அது கேட்ட தலைமகள், "தோழி! ஆற்றியிரு; ஆற்றியிரு; என் கின்றனை; ஆற்றியிருக்கவே யானும் விரும்புகின்றேன்; ஆனால், அந்தோ! யான் என்செய்வேன்? பகலோ கழிந்து விட்டது; முல்லையும் மலர்ந்து மணநகமழத் தொடங்கி விட்டது; ஞாயிறு வெப்பம்குறைந்து குளிர்ந்துவிட்டது; இந்த இன்பச்சூழல், அந்தோ! என்னைச் செயலறும்படி செய்துவிடுகிறதே! என்செய்வேன்? எவ்வாறு ஆற்று வேன்? நின் அறிவின் துணைகொண்டு, இரவு தொடங்கும் வரை உளதாகிய சிறுபொழுதாம் இம் மாலைக்காலத்தை ஒருவாறு கழித்துவிடுதலும் கூடும்; ஆனால், அதனால் யாது பயன்? இம் மாலையைத் தொடர்ந்து வருகிறதே இரவு! அவ்விரவிற்கு எல்லை காண்பதே அரிதாயிற்றே! கடலிற்குக் கரை காணினும் காணலாம், இவ்விரவிற்கு எல்லைகாணல் இயலாதே! அத்துணை நெடியஇரவை யான் எங்ஙனம் ஆற்றுவன்? என் ஆற்றல் இத்தகையதாகவும், அதனை அறிந்துகொள்ளாது 'ஆற்றியிரு; ஆற்றியிரு' என ஓயாது உரைக்கின்றனையே; நின் செயலின் அறியாமை தான் என்னே?" என்றுகூறி, தலைவனைப்பிரிந்து தனித்து வாழ்தலறியாத் தன் உள்ளத்தினை உணர்த்தினாள்:

எல்லை கழிய, முல்லை மலரக்,
கதிர் சினம் தணிந்த கையறு மாலையும்
இரவு வரம்பாக நீந்தினம் ஆயின்,

எவன் கொல்? வாழி தோழி!
கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே. (குறுந்: ௩௮௭)

தமிழில் மிகப்பெரும் எண்களைக் குறிக்கவரும் எண்ணுப் பெயர்களுள், தாமரை, வெள்ளம், ஆம்பல் என்பன சிறப்புடையனவாம்; இப்பெயர்களை,

"ஐ, அம், பல் எனவரூஉம் இறுதி
அல் பெயர் எண்." (தொல். எழுத்து: ௩௯௩)

என வழங்குவர் ஆசிரியர் தொல்காப்பியனார். அளவிடற்கரியது என்ற காரணத்தினாலேயே மழை பெய்தவிடத்துப் பெருகிவரும் பெருநீரை வெள்ளம் என்று பெயரிட்டு அழைப்பாராயினர்; தமிழ்நாட்டுப் பேச்சுவழக்கில், தேவைக்கு மேற்பட்டது என்ற பொருளில் வெள்ளம் என்றசொல் இன்றும் வழங்கக் காண்கிறோம். இச் செய்யுளுள், தனித்திருக்கும் மகளிர்க்கு மிகநீண்டு தோன்றும் இரவினைக் குறிப்பிடக் கங்குல் வெள்ளம் என்ற தொடரை மேற்கொண்ட இப் பெருமையினால் இச் செய்யுளைப் பாடிய புலவர், தம் இயற்பெயர் மறைய, கங்குல் வெள்ளத்தார் என்ற சிறப்புப்பெயரினைப் பெறுவாராயினர்.

---

## கஎ. குறியிறையார்

தலைவியோடிருந்து அவளுக்கு அறிவுரை கூறியும், அவள் துயர் போக்கியும் துணைபுரிதல் தோழியின் கடமை. அது நன்கு நடைபெற அவள் விரும்புவாள்; அதற்கு அவள் பலப்பல வழிகளை மேற்கொள்வாள்; தோழியின் தொண்டு நிறைவேற அவள்பால் வன்கண் சூழ்ச்சிகள் பல வேண்டியிருக்கும். தலைவனைப் பிரிந்து தனித்துறையும் தலைவியின் துயர்போக்கி ஆற்றும்செயல் அத்துணை எளியதன்று; தலைவி, பிரிவுத்துயரை எளிதில்மறந்து மனமகிழ்ச்சி கொள்வாளல்லள்; ஆதலின் அவள் துயர் போக்கத் தோழி பலவழிகளை மேற்கொள்ள வேண்டிவரும். உலகியலும், அறநெறியும் பயன்படாது போயவிடத்து, 'இவளை நம்மால் ஆற்றுதல் அரிது; அவளே அழுது ஓயட்டும்' எனவிட்டுத் தன் தோல்வியை ஒப்புக்கொள்வாளல்லள்; அவளை ஆற்றி வெற்றிபெறவே விரும்புவாள்; எல்லா முறையும் தோல்வியுற்றவிடத்து அவள் மேற்கொள்ளும் முறை யொன்றுண்டு

தலைவி, தலைவன் தன்னைப்பிரிந்து சென்றுவிட்டான்; தனித்து விட்டுச்சென்ற அவன் செயல் அறக்கொடிது என்றெல்லாம் எண்ணும் இயல்பினளாயினும், தலைவனைத் தன்முன் பிறர் பழிகூறுவதைப் பொறாள்; 'தகைசான்ற சொற்காத்த'லன்றோ தலையாய தமிழ்ப்பெண்ணின் கடமை? இந்த உண்மையினை உணர்வாள் தோழி; தலைவியின் துயர்போக்கத் தான் மேற்கொண்ட முயற்சியெல்லாம் தோற்றுவிட்டபின்னர், தோழி தலைவியின் காதில்படுமாறு, 'என்ன தலைவன் இவன்? அறநெறி யுள்ளதநளாய எம் தலைவி எதையும மறந்து அழுதுநிறகுமாறு தனித்திருக்க விட்டுப் பிரிந்துவிட்டானே; அறநெறி யுணர்ந்தவனா அவன்? அன்புடையான் என்று அன்று எண்ணியது தவறு; ஆற்றவும் கொடியான் அவன்; அத்தகைய கொடியவனை நினைந்துகொண்டு இவள் அழுகிறாள்; இவள் பேதைமைதான் என்னே?" என்று கூறுவாள். கேட்ட

வுடனே தலைவிக்குச் சினம் பிறக்கும்; 'நம் தலைவரை நம் கண்முன் பிறர் பழித்துரைக்கின்றனரே; அவரைப் பழித்துரைக்க இந்தத்தோழி யார்?' என வெகுள்வாள்; ஆனால் அவளோ குணமென்னும் குன்றேறி நின்றவள்; ஆதலின் உடனே சினம் மறையும்; தன் தவறு தன்முன் வந்துநிற்கும்; தலைவன் தவறு செய்துவிட்டான் என்று எண்ணிய தாலன்றோ யான் அவன்பிரிவை ஆற்றாது அரற்றினேன்? யானே அவன்மீது குறைகண்டேன் எனின், அவன் உண்மை இயல்பை—உள்ள அன்பை உள்ளவாறு உணராத பிறர், அவன்பால் குறை காண்பதில் வியப்பொன்றும் இல்லையன்றே? ஆகவே, தோழி தலைவனைப் பழித்துரைத்ததற்கு யானே காரணம்; தவறியவள் யான்; தோழி அல்லள் என்று உணர்வாள்; உடனே அழுகை ஓயும்; அழுகையைக் கைவிடுவதோடு நில்லாள்; "தோழி! தலைவன் ஏதோ தவறு செய்துவிட்டான் என்று கூறுகின்றனையே! அவரை நீ அறிவாயா? உலகமே நிலைமாறினும் அவர்மாட்டுக் குறை நிகழாது; தெரியுமா? அவரை அறியாதநீ அவரைப பழிகூறுவதை இனியும் மேற்கொள்ளாதே" என்று கூறவும் தலைப்படுவள். தலைவியின் செயல் கண்ட தோழி தன் கடன்முடித்த வெற்றிக்களிப்பால் உள்ளூர நகைகொள்வள். இது தோழியின் தொண்டுகளுள் ஒன்று; அத்தகைய தோழி ஒருத்தியின் தொண்டினைக் கூறுவதே இச் செய்யுள்.

தலைவியொருத்தி பிரிந்துசென்ற தன் கணவனையே நினைந்து வருந்திக்கொண்டிருக்கிறாள்; அவள் தோழி அவள் துயர் போக்கத் தன்னாலானதெலாம் செய்து பார்த்துவிட்டாள்; பயனில்லை; இறுதியில் தலைவியிடம் சென்றாள்; அவளை நோக்கி, "தலைவி! யானைகள் குட்டியாய் இருக்கும்போது பார்த்திருக்கிறாய் அல்லவா?" என்றாள்; தோழி ஏதோ புதிய நிகழ்ச்சி யொன்றைக் கூறப்போகிறாள் என எண்ணிய தலைவி "ஆம்" என்றாள்; உடனே தோழி, "அந்த யானைக் கன்றுகள் காட்டில் வாழும் குறுகிய முன்கைகளையுடைய குறவர்களின்

குழந்தைகளோடு ஆடி மகிழும் காட்சியைக் கண்டதுண்டா?" என்றாள்; தலைவி, "ஆம்" என்றாள். "சில ஆண்டுகள் கழிந்தபின்னர், அந்தக் குறச்சிறுவர்கள் காத்து நிற்கும் புனத்துத்தினையை அன்று அவரோடு ஆடி மகிழ்ந்த அதே யானைகள் புகுந்து அழிப்பதையும், தம் புனத்துட்புகுந்து கேடுசெய்யும் அந்த யானைகளைக் குறச் சிறுவர்கள் அடித்து விரட்டுவதையும் கண்டதுண்டா?" என்றாள்; தலைவி அதற்கும் ஆம் என்றாள். "விளையாடும் சிறு பருவத்தில், இந்த யானைக்கன்றுகள் பிறிதொரு காலத்தில தாம் காகரும் தினைப்புனத்துட் புகுந்து பாழ் செய்யும் எனக் குறச் சிறுவர்கள் அறிந்திருப்பார்களானால், அந்த யானைக்கன்றுகளோடு ஆடி, அவற்றிற்கு மகிழ்ச்சி அளித்திருப்பார்களா? அன்று அந்த அறிவு அவர்களுக்கு இல்லை; ஆகவே அவற்றோடு ஆடி மகிழ்ந்தார்கள்; இன்று அழிக்கின்றன அவை; இந்த நிலையில், "அன்று நம்மோடு ஆடிய யானைகள் இவை; இவற்றை அடித்து ஓட்டுவதா? கூடாது; இப்போதும் அவற்றோடு ஆடி மகிழ அழைப் போம்" என்று எண்ணாது, கவண்வீசித் துரத்த அன்றோ தொடங்குகின்றனர்; குறச் சிறுவர் உணர்ந்த இச் சிறு உண்மையினையும் நீ உணர்ந்தாயல்லை; என்னே நின் பேதைமை? தலைவர் அன்று நம்மோடு கூடி ஆடி மகிழ்ந் தார்; குறச் சிறுவர்களோடு யானைகள் ஆடி மகிழ்ந்ததைப் போல; இன்று பிரிந்து சென்று நமக்குத் துயர் தருகிறார், யானைகள் புனத்தை அழிப்பதுபோல்; அவர் இயல்பு அது; நின் அறிவு என்னாயிற்று? கேடு செய்யும் யானைகளைக் குறவர்கள் அடித்து விரட்டுவதுபோல், துயர் விளைக்கும் தலைவரை மறந்து ஒதுக்குவதைவிட்டு அவரையே நினைந்து வருந்துகின்றனையே; இஃது அறிவுடைமையா?" என்ற பொருள்தோன்றக் கூறி நிறுத்தினாள்.

> "முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி
> நறவுமலி பாக்கத்துக் குறமகள் ஈன்ற
> **குறியிறைப்** புதல்வரொடு மறுவந்தோடி
> முன்னாள் இனியதாகிப், பின்னாள்

அவர்திணை மேய்தந் தாங்குப்
பகையாகின்று அவர் நகைவிளையாட்டே."

(குறுந் : ௩௯௪)

தலைவனைத் தோழி பழிக்கத் தன் ஆற்றாமை எந்த அளவு துணைபுரிந்து விட்டது என்பது அறிந்து அஞ்சிய தலைவி உள்ளம் தெளிந்து உறுதி கொள்வாள்; தோழி, தன் கடன் குறைவற முடிந்தது கண்டு மகிழ்வாள்

தலைமகளைத் தேற்ற வன்சொல் சிறிதாவது வழங்க வேண்டும் என்ற நோக்கத்தினாலேயே, தோழி குறவர் செயலைக் குறிப்பிட்டாள் எனினும், அதனால் தலைவனை வெறுத்தல் வேண்டும் என்னும் கருத்தினள் அல்லள்; அவள் அவ்வாறு கூறுவது அறமுமாகாது; தோழிக்கு அது கருத்தன்று என்பதை அறிவிக்கவே குறச் சிறுவர்களைக் குறுகிய முன்கையினர்—குறியிறைப் புதல்வர்—என்றார்; குறுங்கையர்பால் பேரறிவுகாணல் அரிது; பேரறிவினர் நீண்டகையினராதல் இயல்பு. குறவர் செயல் அறச் செயலற்றது; அவர் செயல் நமக்குப் பொருந்தாதென்பதைக் குறியிறை என்ற ஒரு சொல்லினாலேயே விளங்கவைத்தமையால் இச் செய்யுளைப்பாடிய புலவர் குறியிறையார் என வழங்கப்பட்டார்.

---

## கரு. கூகைக் கோழியார்

செல்வம் எங்கும் ஓர் அளவினதாகாது ஒருவரிடத்தே பெருகியும், மற்றொருவரிடத்தே குறைந்தும் நிற்பதே உலகப் போராட்டங்களுக்கு அடிப்படையாம். இந்த உண்மையினை மக்கள் இன்றேபோல் அன்றும் உணர்ந்திருந்தனர்; அதனால், அச்செல்வம் அவ்வாறு நெறியின்றிக் குவிவதை நிறுத்தி நிறைசெய்யவேண்டும் என்று அவர்களும் எண்ணினர்; ஆனால், அதற்கு அவர்கள் மேற்கொண்டமுறை இக்கால முறையினும் முற்றிலும் வேறுபட்டது; ஆனால் முழுப்பயன் அளிக்கவல்லது; அம்முறைகளுள் ஒன்றே,

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை." (திருக்: ௩௨௨)

என்ற திருக்குறள் போன்ற அறவுரை கூறல். பெரும்பொருள் பெற்றார்பால் தேங்கிக்கிடக்கும் பொருள், அது பெறாத ஏழைகள்பால் சென்று சேரவேண்டும் எனின், அதைச் செல்வர்களினின்றும் வலிதிற் கவர்ந்து அளிப்பது கூடாது; அதனால் நாட்டில் அமைதிக்குப்பதில் ஆத்திரமே நிலவும். ஆகவே அந்தச் செயலைச் செல்வர்கள் தாமே விரும்பிச் செய்தல்வேண்டும் என விரும்பினர் அக்கால மக்கள்; அதற்கு அவர்கள் மேற்கொண்ட வழிகளில் ஒன்றே நிலையாமையினை எடுத்துக் கூறுவது. உடலும், பொருளும் அழிவற்றன என்ற எண்ணம் பெரும்பொருள் சேர்க்கத்தூண்டும். அவை நிலையற்றன; ஒருநாள் அழியக்கூடியன என்ற எண்ணம் அவற்றின்பால் பற்றறச்செய்யத் துணைபுரியும்; அந்த எண்ணம் உண்டாயவர் அவற்றின்பால் உள்ளத்தைச் செலுத்தார்; இஃது இயற்கை நியதி; இந்த உண்மையை உணர்ந்த புலவர்கள், செல்வர்கள் உள்ளத்தில் இவ்வுண்மை குடிபுகும் வகையில் நிலையாமையினை விளக்கிப் பல பாக்களைப் பாடிச்சென்றனர்; அந்த எண்ணம் இடம்பெற்ற உள்ளத்தினராய காரணத்தால் அக்காலச் செல்வர்கள், தாம் சேர்த்த பொருளைத் தமக்

கெனவே கொள்ளாது, அது ஏழைமக்களுக்கும் பயன் படுமாறு பல்வேறு அறத்துறைகளை மேற்கொண்டனர்; இதனால் அக்கால மக்களிடையே அழிவுதரும் பொருளா தாரப்பூசல் இடம்பெறாது போயிற்று.

இத்தகைய அரும்பணி ஆற்றிய புலவர்களுள் கூகைக் கோழியாரும் ஒருவர். அரசன் ஒருவனைக் கண்டார்; அவன் மறத்தைப் பாடினார்; அவன் பெருமையைப் பாடினார்; பின்னர்ச் சுடுகாட்டின் இயல்பினைச் சுட்டிக் காட்டினார்: நிலம் பிளவுபடுமாறு படர்ந்துசெல்லும் பெரு வேர்களையுடைய பழைய மரங்கள், அம்மரப் பொந்துகளில் இருந்துகொண்டு கேட்போர்க்கு அச்சம் வருமாறு கூவிக் கொண்டிருக்கும் பேராந்தைகள், இறந்து வீழ்ந்தோர் உடல்களைக் கவிழ்த்துவைக்கும் எண்ணத் தொலையாத் தாழிகள் முதலாயின இருப்பதை எடுத்துக் கூறினார். தாழிகளின் நினைவு, நாமும் ஒரு நாள் அழியவேண்டியவர் களே என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் உண்டாக் கியதை உணர்ந்தார்; அவ்வாறு இறந்து அக்காடு அடைந்த பின்னர்ப் பெறமுடியாத பேரின்பம் ஒன்று உண்டு; அதை இன்றே அடைவோம் என்றார்; அரசன் உள்ளமும் அவர் வழிச்சென்றது; உடனே புலவர் "அந்த இன்பம் ஈத்துவக்கும் இன்பம்; நின்னைப் பாடிவரும் பாண்மகளுக் குப் பொன்மாலையும், பாணனுக்குப் பொற்றாமரைப் பூவும் தந்து பெருமைசெய்து, ஆட்டுக்கடாவைக் கொன்றுபெற்ற ஊனைத் தீயிலிட்டுச் சுட்டுக் காயம் முதலாயின இட்டுச் சமைத்த நல்ல உணவினை நாமும் உண்டு, நம்பால் வந்து இரப்போர்க்கும் ஈந்து அவர் இன்முகம் கண்டு மகிழ்ந்து வாழும் வாழ்வு பின்னர்க் கிடைக்காது; அதை இன்றே பெறுவோமாக" என்று கூறி அமைந்தார்.

"வாடா மாலை பாடினி அணியப்,
பாணன் சென்னிக் கேணி பூவா
எரிமருள் தாமரைப்பெருமலர் தயங்க,
மைவிடை இரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்
காயம் கனிந்த கண்ணகன் கொழுங்குறை

நறவுண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப
உண்டும், தின்றும், இரப்போர்க்கு ஈய்ந்தும்,
மகிழ்கம் வம்மோ மறப்போ ரோயே!
அரிய ஆகலும் உரிய; பெரும்!
நிலம்பக வீழ்ந்த அலங்கல் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுமென இயம்பும்
கூகைக்கோழி ஆனாத்
தாழிய பெருங்காடு எய்திய ஞான்றே." (புறம்: ௩௬௪)

இந்தப் பாட்டைப் பாடிய புலவர் கூகைக் கோழியார். கயமனார், ஐயாதிச் சிறுவெண்டேரையார் முதலாய புலவர்கள் வாழ்ந்தகாலத்தே வாழ்ந்தவர். அவர்கள் பாராட்டிய தலைவனையே இவரும் பாடியுள்ளார்; இவர் பாடிய பாட்டாக நமக்குக் கிடைத்துளது பெருங் காஞ்சித்துறை தழுவிய இப்பாடல் ஒன்றே. இதில் முதுகாட்டின் இயல்பை விளக்கிக்கூறும் பகுதியில், அது முதிர்ந்து பருத்த பெருமரங்களையுடையது; அம்மரப் பொந்துகளில் பேராந்தைகள் இருந்துகொண்டு கேட்பார்க்கு அச்சம் வருமாறு கூவும் என்று கூறிவருங்கால், அப்பேராந்தையினைக் கூகைக்கோழி என்று பெயரிட்டு அழைத்துள்ளமையால் இவர் பெயர் கூகைக்கோழியார் என வழங்கப் பட்டது.

---

## ௧௧௯. தும்பி சொகினனார்

இவர் இயற்பெயர் யாது என்பதில் புலவர்களிடையே ஒருமைப்பாடு உண்டாகவில்லை. நற்றிணை உரையாசிரியர், “இவர் பெயர் தும்பிசேகீரன்: கீரன் என்பது இயற்பெயர்; சே—அடைமொழி. இதன் பொருள் விளங்காமையால் இவர் பெயரைச் சேர்கீரனாரென்று பதிப்பிக்கலாயிற்று; தமது பாடலிலே தும்பியை.......பாராட்டிக் கூறலின், இவர் தும்பிசேகீரனா ரெனப்பட்டார்” என்று எழுதியுள்ளார். டாக்டர் உ. வே. சா. அவர்கள், “தும்பியை விளித்துக் கூறியதாக அமைத்தமையின் இச் செய்யுளைப் பாடிய புலவர் தும்பிசேர் கீரனாரென்னும் பெயர்பெற்றார் போலும்; இதனைத் தும்பிசொகினனென்று படித்தற்கும் இடமுண்டு” எனக் குறுந்தொகையிலும், “தும்பி: ஒரு வகை வண்டு; சொகினம: நிமித்தம். தும்பியை நோக்கிச் செய்திகூறிய சிறப்பால் இவர் தும்பி சொகினனார் எனப் பெயர் பெற்றார்போலும்; தும்பிசேர்கீரனார் என்றும் பிரதிபேதமுண்டு” எனப் புறநானூற்றிலும் கூறியுள்ளார். திருவாளர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் “சொகினன் என்பது காரணம்பற்றி வந்தபெயர்; அவர் தொழில், நிமித்தங்கூறுதல். நிமித்தம் கூறுவார்க்கு அரசர் ஊர்பல அளித்துச் சிறப்புச்செய்தல் உண்டு; அவ்வாறே இவரும் அரசரால் சிறப்புச் செய்யப்பெற்றுளார்; அவ்வாறு அவர் பெற்றஊர் வேங்கடத்துக் கண்மையில் உள்ள திருச்சானூர்; அது பண்டைக்காலத்தில் திருச்சொகினனூர் என வழங்கியுளது என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள; ஆகவே இவர் தொண்டை நாட்டினராவர்” என்றும், “அவர் பெயர்க்கு முன்வரும் தும்பி என்ற சிறப்புப்பெயர், தும்பியைப் பாடிய காரணத்தால் வந்ததன்று; அது காரணமாயின், பாலைபாடிய என்பதேபோல், தும்பி பாடிய சொகினனார் என வந்திருக்கும்; சில ஏடுகளில் தும்பி என்பது தும்பை எனக் காணப்படுகிறது; தொண்டைநாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்துப் பொன்னேரிக்கு வடக்கே “தும்மூரு”

என்ற ஓர் ஊர் உளது; அவ்வூர்க் கோயிலில் காணப்படும் சோழர்காலக் கல்வெட்டுக்கள், அவ்வூரைத் தும்பையூர் என்று குறிப்பிடுகின்றன; சொகினனார் இத் தும்பையூரைச் சேர்ந்தவராவர்; ஆகவே அவர் பெயர் தும்பைச் சொகினனார் என்றே வழங்குதல்வேண்டும்'' என்றும் கூறுவர்.

தும்பியைப் பாடியவர் பெயர், தும்பியைப் பாடிய என்றே அடையடுத்தல்வேண்டும் எனல் பொருந்தாது; ஓரேர் உழவு, தனிமகன், தொடித்தலை விழுத்தண்டு முதலாயவற்றைப் பாடிய புலவர் பெயர்கள் ஓரேர் உழவு பாடிய, தனிமகன் பாடிய, தொடித்தலை விழுத்தண்டு பாடிய என அடையடுத்து வராமல், ஓரேர உழவனார், தனிமகனார், தொடித்தலை விழுத்தண்டினார் என்றே வழங்குதல் காண்க. பல நூல்களைப்பற்றிய பல ஏடுகளில் பயில வழங்கும் தும்பி என்ற பாடத்தை ஒதுக்கிவிட்டு, புறநானூறு ஏடு ஒன்றில்மட்டும் கண்ட தும்பை என்ற பாடத்தினைமட்டும் மேற்கொள்வதும், அதையே உண்மையெனக்கொண்டு, அந்தச் சொல், தொண்டைநாட்டில் உள்ள ஓர் ஊரின் பெயரோடு ஒற்றுமை உடையதாக உளது என்ற ஒரே காரணம் காட்டி, வேறு நல்ல சான்று எதுவும் காட்டாமலே, அவர் அவ்வூரினர் எனக் கூறுவதும் பொருந்தாது.

நமக்குக் கிடைத்த இவர் பாடல்கள் ஆறு; புறத்தில் ஒன்று; நற்றிணையில் ஒன்று; குறுந்தொகையில் நான்கு; இவர் பாடல்கள் அனைத்தும் எவர் பெயரையும குறிப்பிடாமல் பொதுவாகவே அமைந்துவிட்டமையால், இவர் வரலாறு எதையும் அறிநதுகொள்வதறகு இயலாது போயிற்று.

கணவனை இழந்தமகளிர் அவன் நடுகல்முன் இடத்தை மெழுகித் தூய்மைசெய்து வழிபடும் வழக்காற்றினை அடிப்படையாகக்கொண்டு பாடிய புறநானூற்றுப் பாட்டில், தன் கண்ணீரையே நீராகக்கொண்டு மெழுகுவாள்,

"மெழுகும் ஆப்பிதன் கண்கலுழ் நீரான்"

என்று கூறும் பகுதி, கணவனை இழந்த மகளிர் தம் கடுந் துயர்க்காட்சியினை நம் கண்முன்கொண்டு நிறுத்துவதாகும்.

இற்செறிக்கப்பட்ட தலைமகள் ஒருத்தி, தும்பியொன்றை நோக்கி, "மலர்தோறும்சென்று மதுவைத் தேடி அலையும் ஏ மணிச்சிறைத் தும்பி! இங்கே இவ்வாறு அலைவதைவிடுத்து எம் தலைவர் நாட்டிற்குச் செல்; அவர் நாடு வளத்திற் சிறந்தது; அந்நாட்டு மலைகளில் வரிசை வரிசையாகத் தேனடைகள் தொங்கும்; ஆகவே ஆங்குச் சென்றால் கவலையின்றி வாழ்வை; ஆங்குச் சென்றபின்னர், இத்துணையும் கூறிய எனக்காக ஒன்றுசெய்ய வேண்டுகிறேன்; நீ செய்யப்போவது கெடுதி யுடையதன்று; நல்லதொன்றையே செய்யச்சொல்கிறேன்; நல்லதுசெய்ய நீ அஞ்சவேண்டியதில்லை; ஆண்டுச்சென்றால், அவரைக் கண்டு, "நம் காதலி இன்னும் இற்செறிக்கப்பட்டுளாள்; அவள் சுற்றத்தார் உழைத்துப்பெற்ற பொருளும் வலியும் உடைய உயர்ந்தோராவர்; ஆதலின் அவர்களறியாது அவளை அடைதல் அரிது: முறைப்படி சேரின், வரவேற்று விரும்புவ அளிக்கும் அருள்உள்ளம் உடையராவர் என்று கூறுக," என்று பாடிய பாடற்பொருளும்,

தான் அவ்வாறு வேண்டவும் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், வேலியிற் படர்ந்திருக்கும் கொடிகளில் மலர்ந்து மணக்கும் பீர்க்கம்பூவில் உள்ள தேனைத் தேடிச் சென்றும், தன் இனிய பெடையுள்ள இடம் நோக்கிச் சென்று கூடி மகிழ்ந்தும் காலம் கடத்தும் தும்பியைச் சினந்துநோக்கி, "ஏ தும்பி! நின் உடல்தான் கரிது என்று எண்ணினேன்; நின் அறிவும் கரிது என்பதை அறியாதுபோயினேன்; கொடுமை உள்ளம் படைத்த நின்னிடத்தில் என் குறையினைக் கூறிய காரணத்தினாலேயே இந்நோய் முன்னினும்பெருகித் துயர் செய்வதாயிற்று" என்றுகூறும் நற்றிணைப் பகுதியும்,

பரத்தையர் ஒழுக்கம்பூண்டு தவறிய தலைமகனுக்காகத் தலைவிபால் தூதுவந்தவர்களை நோக்கி "பெரியவர்கள் நெடிய பெரிய தேர்செய்து அதில் ஏறி அமர்ந்து ஊர்ந்து மகிழ்வார்கள் என்றால், இளஞ்சிறுவர்கள், சிறிய தேர் செய்து அதை ஈர்த்தே இன்புறுவர்; அதைப்போன்றே, தலைவனைப்பெற்றுப் பேரின்பம் அடையும பேற்றினை எவராயினும் பெறட்டும்; நாங்கள் அவன் அன்று அளித்த நட்புரிமை ஒன்றை உள்ளத்தில்கொண்டே மகிழ்ந்து வாழ்வோம்; ஆகவே அவர்பொருட்டுத் தூதுவர வேண்டியதில்லை" எனத் தோழிகூறும பகுதியும் நயம்செறிந்து தோன்றுதல் காண்க.

தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்து இன்புறாஅர் ஆயினும் கையின்
ஈர்த்து இன்புறூஉம் இளையோர் போல,
உற்று இன்புறேஎம் ஆயினும், நற்றேர்ப்
பொய்கை யூரன் கேண்மை
செய்திின் புற்றனெம்; செறிந்தன வளையே.

(குறுந் : சுக.)

## ௨௦. தொடித்தலை விழுத்தண்டினார்

"சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது"

என்றார் பெரியாரொருவர்; உள்ளம் ஒருவழி நில்லாது ஏதேனும் ஒன்றை எண்ணிக்கொண்டேயிருக்கும் இயல்புடையது; ஒலி, ஒளிகளினும் விரைந்து செல்லக்கூடிய வன்மை உடையது; உலகனைத்தையும் ஒரு நொடியில் சுற்றிவந்துவிடும் உள்ளத்தை ஒரு நொடிப்பொழுதும் ஓயவைத்து உறங்கவைத்தல் இயலாது; ஒன்றைவிட்டு ஒன்றைத் தொடர்ந்து எண்ணிக்கொண்டே யிருக்கும்; தொடர்பில்லாத பல பொருள்களைத் தொடர்ந்து எண்ணிக் கொண்டேயிருக்கும்; உள்ளத்தின் இவ்வியல்பை யுணர்ந்தே அதை மனக்குரங்கு என அழைப்பர். உள்ளம் நிகழ்கால நிகழ்ச்சிகளைமட்டுமே வரிசையாக எண்ணிப் பார்க்கும் என்று கொள்ளுதல்கூடாது; எதிர்கால நிகழ்ச்சிகள் எவ்வெவ்வாறு இருத்தல்வேண்டும் என்று எண்ணி ஏங்குவதும் உண்டு; எதிர்காலத்தை எண்ணி ஏங்கும் உள்ளம் இறந்தகால நிகழ்ச்சிகளையும் நினைவூட்டிக் காண்பதும் உண்டு.

வாழ்நாள் முழுதும் ஒரேநிலையில், அதாவது என்றும் வறியராகவோ, அல்லது என்றும் செல்வராகவோ வாழ்ந்தவர் உலகத்து அரியர்; தொடக்கத்தில் பெருவாழ்வு வாழ்ந்து இறுதியில் வறியரானவரும், தொடக்கத்தில் நிறைந்த வறுமை வாழ்வினராய்ப் பின்னர்ப் பெருவாழ்வு பெற்றவருமே உலகத்தில் இடம் பெற்றிருக்கக் காண்கிறோம். வறுமையில் தொடங்கி வளத்தில் வாழ்வு நடாத்துவோர் சிறிது அறிவுடையராயின் தம் பழங்காலவாழ்வை மறவாது, அது கற்றுத்தந்த பாடத்தை மனதில் இருத்திப் பண்புடைவாழ்வை மேற்கொள்வர்; அவர்பால் அவ்வறிவு இல்லாதுபோயின், அன்னார் தம் பண்டைய நிலையினை மறந்து செல்வச்செருக்கால் செய்வதறியாது கேடு பல செய்து வீழ்வர்; பெருவாழ்வில் வாழ்ந்து கெட்டவர் நல்லவராயின், அவர் தம் பண்டைய நிகழ்ச்சிகளை எல்லாம்

எண்ணிப்பார்த்து அவை இப்போது இல்லையே என்று எண்ணி எண்ணி ஏங்குவதோடு, அவ்வாறு கெடுதற்கு அன்று தாம்செய்த பிழையினையும் உணர்ந்து, அந்தப் பிழை மீண்டும் தம்பால் நிகழாவண்ணம் விழிப்பாயிருப்பர்; இந்நெறியால் மக்கள் தம் இறந்தகால நிகழ்ச்சிகளை எண்ணிப்பாாத்தல் எத்துணை நன்று என்பது புலனும்.

மக்கள் வாழ்நாளில் இளமைக்காலத்தைப்போன்ற இன்பம் நிறைநத காலத்தை வேறு எப்போதும் காணல் அரிது; இளமைக்காலந்தான் இன்பம் துய்ப்பதற்கு ஏற்ற காலமாகும்; இளமை கழிந்தகாலத்தில் இன்பம துய்ப்பதும் கூடாது; அஃது இயலவும் இயலாது;

> "இளமையிற் சிறந்த வளமையும் இல்லை;
> இளமை கழிந்த பின்றை வளமை
> காமம் தருதலும இன்றே" (நற் : கஉசு.)

என்று அறிஞர் ஒருவரும் கூறுவர். முதுமை எய்தியவர், தம் இளமைக்கால இன்பநிகழ்ச்சிகளை எண்ணிப்பார்த்து அவற்றை இப்போது பெறமுடியவில்லையே என்று ஏங்கி நிற்பது உலகியல். அத்தகைய முதியோர் ஒருவரைத் தொடித்தலை விழுத்தண்டினார் பாடிய புறநானூற்றுப் பாடல் ஒன்று நமக்கு அறிமுகம் செய்துவைக்கிறது.

ஆற்றுப் படுகையிலும், கடற்கரையிலும் பரந்துகிடக்கும் மணலில் பாவைசெய்து, அதற்குப் பலநிற மலர்களைப் பறித்துச் சூட்டி ஆடும் இளைஞன் ஒருவன்; அருகே உள்ள குளிர்ந்த நீர்நிலைகளில் குதித்து ஆடும் மகளிரையும் கூட்டிக்கொண்டு, அவர் கைகளோடு தன் கைகளைக் கோத்து உலாவி, அவர்கள் ஆடியபடியெல்லாம் ஆடித் தீர்த்துப் பின்னர்த் தன்னைப்போன்றே உள்ளத்தே எத்துணையும் வஞ்சனை நஞ்சினைப்பெறாத சிறுவர்களோடு சென்று, ஒரு நீர்நிலையினை அடைநது, அந் நீர்நிலைக்கு அணித்தே வளர்ந்துள்ள உயரிய மரத்தின்கிளைகளுள், நீர்வழிச் சாய்ந்துநிற்கும் கிளையில் ஏறிநின்று, கரையில் நிற்பார் எல்லாம் அச்சத்தால் கண்இமையாது கலங்கிப்

பார்த்துக்கொண்டிருக்க, நீர்மேலோங்கி எழுந்து சிதறு மாறு தூடும் எனக்குதித்து நீர்நிலையின் அடிவரை மூழ்கிச் சென்று மண்கொணர்ந்து காட்டி மகிழ்வான்; அத்தகைய இளமைவாழ்வையுடைய அவன் இப்போது ஆண்டு முதிர்ந்து கிழவனாகிவிட்டான்; நடை தளர்ந்துவிட்டது; ஆகவே கையில் ஊன்றுகோல் ஏந்திக்கொண்டான்; கோல் கொண்ட பின்னரும் நடுக்கம் தீர்ந்திலது; சில சொற் களைக் கூறியவுடனே பெருமூச்சுவாங்கத் தொடங்கிவிடும்; இருமல் வேறு இடையிடையே தோன்றித் துயர்செய்யும்; இந்த அளவிற்கு மூத்துவிட்டான்; அந்த நிலையில் அவ னுக்குத் தன் இளமைக்கால இனிய காட்சிகள் கண்முன்பு நிற்கலாயின; அவற்றைக் கண்ட அவன் கண்கள் நீர் மல்கின; அவனும் 'அந்தநாள் வாழ்வு எங்கோ சென்று மறைந்துவிட்டதே! அதை மீண்டும்பெற எங்கேசென்று தேடுவேன்?' என்று கூறிக் கலங்குவானாயினன்.

இனி நினைந்து இரக்க மாகின்று: திணிமணல்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்,
தணகயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து,
தழுவுவழித் தழீஇத், தூங்குவழித் தூங்கி,
மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு
உயாசினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோடு ஏறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து,
குளித்துமணல் கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே? யாண்டுண்டு கொல்லோ?
**தொடித்தலை விழுத்தண்டு** ஊன்றி, நடுக்குற்று
இரும் இடை மிடைந்த, சிலசொல்
பெருமூதாளரேம் ஆகிய எமக்கே. (புறம்: உ௪௩)

இந்தப் பாட்டில், கிழவர் ஏந்திய கைத்தடியினைப் பற்றிக் கூறுங்கால், அது தலையில் பூண் உடையது; மிக வும் பருமை உடையது என்று கூறியது, அந்த முதிர்ந்த நிலையில் அவர்க்குப் பொருளாய் நிற்பது அத்தடி ஒன்று

மட்டுமே என்பதைத அறிவித்தற்காம்; ஆண்டு முதிர்ந் தோர்க்கு அரியபொருளாக விளங்கும் தடியினைத் தொடித் தலை விழுத்தண்டு எனச் சிறப்பித்துக் கூறினமையால், இப் பாட்டாசிரியர் பெயர் தொடித்தலை விழுத்தண்டினார் என வழங்கலாயிற்று.

இந்தப் பாட்டைப் பாடிய புலவர், தொடித்தலை விழுத் தண்டினார் என்பதல்லது, அவர் இயற்பெயரோ, அவர் காலப் புலவர்கள் யாவர் என்பதோ, அவர் பாடல்கேட்டுப் பாராட்டிப் பரிசில் அளித்த பெருங் கொடைவள்ளல் யாவன் என்பதோ எதுவும் அறிந்துகொள்ள முடிய வில்லை. திருவாளர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை யவர்கள், இந்தச் செய்யுள் தொடித்தலை விழுத்தண்டினார், ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனை பாராட்டிய பாடல்களுள் ஒன்றெனக்கூறி, இப் பாட்டுப் பாடுதற்குக் காரணமாய் இருந்த சூழ்நிலை ஒன்றையும குறிப்பிடுகிறார். இப் பாட்டிற்கும, ஒலலையூர் கிழான்மகன் பெருஞ்சாத்த னுக்கும் தொடர்பு உண்டு என்பதை டாக்டர் உ. வே. சா. அவர்களின் புறநானூற்றுப் பதிப்பில் வரும் கொளு உணர்த்தவில்லை; ஆனால், பாடினோர், பாடப்பட்டோர் வரலாற்றில், ஒல்லையூர் கிழான்மகன் பெருஞ்சாத்தனைப் பாராட்டிய புலவர்களுள் ஒருவராக இவரையும் கூறியுள் ளார். ஆனால், தாம் கொள்ளும் பாட பேதங்களுக்கெல் லாம் ஆதாரம் காட்டிச்செல்லும் பண்பினராய டாக்டர் உ. வே. சா. அவர்கள், ஈண்டு அவ்வாறு கொண்டதற்கு ஆதாரமாய சான்று இது என எதையும் கூறினாரல்லர்; பிள்ளையவர்கள் ஐயர் அவர்களினும் ஒருபடி முன்சென்று, "ஒல்லையூர் கிழான் மகனை பெருஞ்சாத்தன் பேரிளையனாய் இருந்தகாலத்தில் ஒருகால் தொடித்தலை விழுத்தண்டினார் என்னும் சான்றோர் அவனைக் காணச்சென்றார்; சாத்த னும் அவரை மிக்க அன்புடன் வரவேற்று இனிமை மிகப் பேசி அளவளாவினன்; வேறுபல சான்றோரும் அங்கே கூடியிருந்தனர்; அக் கூட்டத்தில் இளமையின் வளமை பற்றிப் பேச்சுண்டாயிற்று;........நம் தொடித்தலை விழுத்

தண்டினர், இளமைச் செய்கைகளை ஒருவகையால் தொகுத்துரைப்பாராய் இப்பாட்டைப் பாடினர்'' என இப் பாட்டுப் பாடுவதற்குக் காரணமாய சூழ்நிலையினையும் வரைந்து காட்டுவர்; ஆனல், தாம் அவ்வாறு கூறுதற்குப், புறநானூற்றில் பாடினேர், பாடப்பட்டோர் வரலாற்றுப் பகுதியில் டாக்டர். உ. வே. சா. அவர்கள் குறிப்பிடும் ஆதாரமற்ற சான்றுதான? அல்லது தமக்குக் கிடைத்ததாகக்கூறும் அரித்துவார மங்கலம் வா. கோபாலசாமி ரகுநாத ராசாளியார் ஏட்டுப் பிரதியில் அவ்வாறு கூறப் பட்டுளதா என எதையும் கூறிஞரல்லர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட ஒரு பாட்டைக்குறித்து யார் எதை வேண்டுமானலும் கூறிவிடலாம் என்ற நிலையினை உண்டாக்கிவிடாமல், கூறும் எதற்கும் பொருந்தும் ஆதாரம் உண்டு என்பதை உணரும்வகையில் உணர்த்துவதைத் தமிழறிஞர்கள் ஒழுக்கமாகக் கொள்வார்களாக.

---

## உக. நெடுவெண் நிலவினர்

தலைவன் ஒருவன் தலைமகள் ஒருத்தியைக் கண்டு அன்புகொண்டான்; அவ் விருவர்க்கும் இடையில்வளர்ந்த காதலைத் தலைமகள் தமர் அறியார்; ஆகவே தலைவன் தன் காதலியைக் காண இரவுக்காலத்தே வரலாயினன்; தலைவி அவன்பால் பேரன்பினள்; அவனைச் சிறிதுபோது பிரிந்திருப்பதையும் பொருள்; ஆகவே அவன் களவில் வந்து செல்வதைத் தலைமகளின் உயிர்த்தோழி கண்டித்து நிறுத்த அஞ்சினள்; ஆனல் மற்ருேர் அச்சம் அவள் உள்ளத்தில் வளர்ந்துகொண்டே வந்தது; தலைவன் வரும் வழி கொடுவிலங்குகள் வாழும் காட்டுவழியாம்; புலிகள் நிறைந்தது; மேலும் வேங்கைமலர் உதிர்ந்த பாறைகள் புலிகளைப்போலவே தோன்றும; இரவில் வரும் தலைவன், அத்தகைய பாறைகளைக் கண்டு பழகியவன், ஒருநாள் உண்மையான புலியையும் இரவு மயக்கத்தால் வேங்கை மலர் உதிர்ந்த பாறைஎனக் கருதிவிடுதலுங் கூடும்; அதனல் அவனுக்குக் கேடுண்டாகவும் கூடும்; அப்படிப் பட்ட நிலை யாதேனும் உண்டாகிவிடின் தலைவியின் நிலை என்னும் என்று அஞ்சினள்; ஆகவே அவன் காட்டுவழி வருவதை நிறுத்தி விரைவில் மணந்துகொள்ளுமாறு செய் தல்வேண்டும் எனத் துணிந்தாள்; ஆனல் இதை எவ்வாறு அவனிடம் கூறுவது என எண்ணிக்கொண்டிருந்தாள்; ஒருநாள் இரவு, தலைமகன் வந்து வீட்டின் பின்புறம் நின்று கொண்டிருக்கிருன்; நிலவு நன்ருகக் காய்கிறது; காதலர் தம் களவொழுக்கத்திற்கு நிலவொளி இடையூறும்; இந்த நிலையினைத் தோழி நன்கு பயன்படுத்திக் கொண்டாள்; தாங்கள் தலைவனைக்காணப் பெரிதும் துடித்துக்கொண் டிருப்பதைப்போலவும், அதற்குத் தடையாய் நிலவு வந்து விட்டது கண்டு வருந்துவதுபோலவும் தலைவன் எண்ணு' மாறு நிலவை நோக்கி, "நிலவே, தலைவர், தலைவியைக் காண, அரியகாட்டைக் கடந்து வந்துளார்; வந்த அவர் தலைவியை அடைந்து இன்புறுவாறு இடையில் தடை யாய் நின்று காய்கிருய்; நிலவு வீசத்தொடங்கிய நீ விரை

வில் மறைந்தாவது போவாய் என்றால், நீண்டுகொண்டே போகிறது நின்ஒளி; ஆகவே, தலைவர்க்கு நீ நல்லது செய்கின்றாயல்லை'' எனத் தலைவன் காதில் படுமாறு கூறினாள்.

> கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
> இரும்புலிக் குருளையிற் றோன்றும் காட்டிடை
> எல்லி வருநர், களவிற்கு
> நல்லை யல்லை, நெடுவெண் நிலவே. (குறுந்: சஎ.)

இவ்வாறு தோழி கூறக்கேட்ட தலைமகன், தன் வரும் வழி ஏதம் கண்டு தலைவி வருந்துகிறாள் எனவும், தன்னைக் கூடப் பெறாமல் தடைசெய்யும் நிலவு ஒளிகண்டும் வருந்துகிறாள் என்றும், இவ்வாறு அருஞ்சுரம் கடந்துவந்தும் தலைவிக்கு இன்பம் அளிக்காமல் துன்பமே அளிக்கும் இக் களவொழுக்கைக் கைவிட்டுக் கடிதில் மணம்புரிந்துகொள் வதே நலம் என்றும் எண்ணிச்செல்வன்; இவ்வாறு தான் கருதியது முடிக்கும் கருத்தினளாய தோழியின் செயலைக் கூறும் இப்பாட்டில், ஆசிரியர் நிலவை, நெடுவெண் நிலவு என்று கூறியுள்ளார்; உண்மையில் தலைவனுக்கு இடையூறாய் இருந்தது என்றாலும், தங்கள் தலைவன், காட்டில், புலி எது, பாறை எது என எளிதில் அறிந்துகொள்ளத் துணைபுரிகிறது இந்நிலவு; தலைவன் களவொழுக்கத்திற் குத் தடைவிதித்து மணம்கொள் முயற்சியில் தலைமகனை உந்தவேண்டும் என்ற தம் எண்ணத்திற்கு உறுதுணை புரிந்தது இந்நிலவு என்ற கருத்தினள் தோழியாதலின் அவள் நிலவை நெடுவெண் நிலவு எனப் பாராட்டினாள் என்றகருத்து வெளிப்படப் பாடியுள்ளமையால், இப் பாட் டாசிரியரும், அத் தொடரின் பெயரையே பெற்று **நெடு வெண் நிலவினார்** என அழைக்கப்பெற்றுளார்.

---

## உஉ. பதடிவைகலார்

போலிப் பொருள்கள் புகுந்துவிட்ட காலம் இது; உண்மையான பொருள் ஒன்று இருந்தால், அதன் உண்மையான இயல்பினைப் பெறுமல், அதன் உருவத்தைமட்டும் பெற்றிருக்கும் பொருள் ஒன்று இருக்கும். நெல் உண்டு: நெல்லைப்போன்ற பதடி உண்டு; அதன் உள்ளே அரிசி இராது; அதைக் கருக்காய் என்பர்; மக்களிலும் பதடி உண்டு என்பர் வள்ளுவர்;

"பயனில்சொல் பாராட்டுவானை மகன் எனல்
மக்கட் பதடி எனல்" (திருக்: ககூ௬)

என்ற அவர் குறள் காண்க; மக்கட் பண்பில்லாக் கயவர்களைக் கூறுங்கால்,

"மக்களே போல்வர் கயவர்" (திருக்: க0எக)

என்று கூறுவதையும் காண்க. இவ்வாறு உலகப் பொருள்கள் ஒவ்வொன்றிற்கும் போலிகளாகிய பதடிகள் இருப்பதைபபோன்றே, நாட்களிலும் பதடிகள் உண்டு; நாட்களில் பதடியாவது, நாள் பயன்படாமல் கழிவது; வீரனுக்கு ஒருநாள் பயன்படாத நாளாகக்கழிதல், அன்று அவன் போர்க்களம் புகுந்து பகைவர்களை அழித்து வெற்றிகொண்டு, அம்முயற்சியில் புண்பெறுது கழிதலாம்;

"விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து" (திருக்: எஎசு)

என வள்ளுவர் பேசும் வீரத்தின் சிறப்பை நோக்குக.

நாள் அளிக்கும் பயன் இது என்பது அவரவர்கள் மனநிலைக்கேற்ப மாறுபடும்; குறுந்தொகையில் வரும் தலைமகன் ஒருவன், பயனின்றிக் கழிந்த பதடிநாள் ஒன்றைக் குறிப்பிடுகின்றான்; மணந்துகொண்ட மனைவியோடு மனையில் இருந்து அவளோடு உறங்கி எழுந்த நாட்களே பயனுடைய நாட்கள்; அவைதாம் உண்மையில் வாழ்ந்த

நாட்கள்; அவளைவிட்டுப் பிரிந்துசென்று தனித்துறைந்த நாட்கள் எல்லாம் பயனின்றிக் கழிந்த நாட்களேயாம்; ஆதலின் அவையெல்லாம் பதடிநாட்கள் என்று கூறும் அவன் உள்ளத்தை உணர்க;

"எல்லாம் எவனோ பதடி வைகல்!
பாணர் படுமலை பண்ணிய எழாலின்
வானகத் தெழுஞ்சுவர் நல்லிசை வீழப்
பெய்த புலத்துப் பூத்த முல்லைப்
பசுமுகைத் தாது நாறும நறுநுதல்
அரிவை தோளிணைத துஞ்சிக்
கழிந்தநாள் இவண வாழும் நாளே." (குறுந்: ௩௨௩)

இவ்வாறு தலைவியோடு இன்புறாதநாட்களைப் பதடி வைகல் என்று கூறுகிறான் தலைமகன் என்று பாடிய சிறப்பால் இச்செய்யுளைப் பாடிய ஆசிரியர் பதடிவைகலார் எனப்பட்டார். இவர் கூறிய கருத்தைக் குறிக்கோளாகக் கொண்டு நம் வாழ்நாட்களில் நல்லன செய்தொழுகுதல் கடமையெனக்கொண்டு சிறப்புற வாழ்வோமாக.



# சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை

(க முதல் கூ வரை)

ஆசிரியர்: திரு. புலவர், கா. கோவிந்தன், எம். ஏ. அவர்கள்

## க. கபிலர்:

*இது சங்கத் தமிழ்ப் புலவர் வரிசையில் முதன்முதல் வெளிவந்தது. கபிலர் தம் செய்ந்நன்றி மறவாச் சீர்மையையும் இயற்கைநெறியில் வாழ்ந்த அவர்தம் இயற்பண்பையும் அவர் பாவின் உட்கிடக்கையைக் கொண்டே விளக்கிக் காட்டும் சிறந்த நூல்.*

**இருவண்ண மேலட்டையுடன் விலை ரூ. 1-12-0**

## உ. பரணர்:

*இவர் நடுநிலைதவறா நெஞ்சப்பாங்கினர். வரலாற்று ஆசிரியர்; இவர் காலத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளை உவமை வாயிலாக அமைத்துத் திறம்படக் காட்டும் திட்பமதி மிக்கவர். இதனை இவர் வரலாறு கூறும் இந்நூலிற் பரக்கக் காணலாம்.*

**இருவண்ண மேலட்டையுடன் விலை ரூ. 1-12-0**

## ௩. நக்கீரர்:

*இவர் அஞ்சாநெஞ்சம் படைத்த ஆண்மையாளர். இவர் வரலாறு சுவைமிக்கது; தமிழர்தம் வீரத்துக்கு இலக்காக இலகுவோர். இவர் வரலாற்றை நெடுநுகத்துப் பகல்போல் ஆய்ந்து உண்மை தெளிக்கும் உயரிய நூல்; தமிழர்தம் வாழ்க்கைக்கு வழிகாட்டி.*

**இருவண்ண மேலட்டையுடன் விலை ரூ. 1-12-0**

## ச. ஔவையார் :

இவரை அறியாத தமிழ்மாந்தர் யாருமிலர். அதற்கு இவர்தம் புலமைச் சிறப்பே எதுவாகும். இவர் பெண்மை யுலகின் மணியாகத் திகழ்வோர். இவர்தம் தமிழ்த் தொண்டு; தன்னலங் கருதாமாண்பு; நெஞ்சத் திண்மை; கைம்மாறு வேண்டாக் கடப்பாடு முதலியன இவர்தம் பாக்களிலிருந்தே தெளித்துரைக்கப்பட்டுள்ளன. கருத் தோவியம் மிக்க கவின்தரு நூல்.

இருவண்ண மேலட்டையுடன் விலை ரூ. 1-12-0

## ரு. பெண்பாற் புலவர்கள் :

உலகம் இருவேருகத் திகழ்கின்றது. அவை ஆண்மை பெண்மை என்பன. பெண்ணுலகு தாய்மைப் பேறு. அவர் கல்வி கேள்வியிற் சிறந்தால் நாடு உயரும்; நாடுயர எல்லா நலமும் உயரும். இந்நிலை பழங்கால தமிழகம் பெற்றிருந்ததற்குச் சான்றுதரும் விளக்கக் கண்ணாடியே இந்நூல். இதனைத் தமிழுலகம் கண்டு தெளிய வடித்தெடுத்த மாபெரும் நூல்.

இருவண்ண மேலட்டையுடன் விலை ரூ. 1-12-0

## சா. உவமையாற் பேயர்பெற்ருேர் :

காணு ஒன்றை மனக்கண்ணுற் காண வைப்பது உவமம். அவ்வுவமங்கொண்டு கருத்தைத் தெளிவிக்கும ஆற்றல் நம பழங்கால அறிஞரிடையே திகழ்ந்தது. அவர் பெயரும் அறியாவண்ணம் மறைந்தனர். அவர் பெயரை நிலைநாட்டியன அவர் பாக்கள்; அப்பாக்களிடை ஊறிய கருத்தூற்றே அவர் பெயராகக் காணக் கிடக்கின்றன. இவைகளைத் தெற்றெனை விளக்குவது இந்நூல்; படித் தறிக.

இருவண்ண மேலட்டையுடன் விலை ரூ. 1-12-0

---